# விஸ்வகர்மப் பிராம்மண வம்சப் பிரகாசிகை



ஸ்ரீ ஸாக்ஷாத் விஸ்வகர்மப் பரப்ரம்மம்

குலோத்தாரக. **T. M.** தெய்வசிகாமணி ஆச்சாரியார்,
எப். ஆர். எஸ். ஏ. (லண்டன்)
ஆசிரியர்.

# விஸ்வகர்மப் பிராம்மண வம்சப் பிரகாசிகை

ஆசிரியர் :

குலோத்தாரக.

**T. M. தெய்வசிகாமணி ஆச்சாரியார்,**

F. R. S. A. (லண்டன்)

துணைவர் :

வித்வான் K. K. சுப்ரஹ்மண்ய ஆச்சாரியார்



சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை-14



1950

விலை ரூபா
மூன்று

# சமர்ப்பணம்

எங்கும் நிறைந்து, எமது உள்ளம் களிக்க,

கனவிலும் நனவிலும், நடமிடும்

**ஸ்ரீ சாக்ஷாத் விஸ்வகர்மப் பரப்ரமத்தின்**

இணையடிகளில், நம் மக்கள் உலகில்

இகபர சுகங்களைப் பெற்று

இனிது வாழ வேண்டுமாய்ப்

பிரார்த்தனை புரிந்து,

அர்ப்பணம் செய்யப்பெறுவது

இந்நூல்.

—ஆசிரியன்

# நூன் முகம்

**விஸ்வகர்மப் பிராம்மண வம்ஸப் பிரகாசிகை** என்னும் இந் நூல், வேத ஸ்ருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களில் விஸ்வகர்மப் பிராம்மணர்களின் உத்கிருஷ்டத்தை விளக்கும் பெரும்பான்மை யான ஆதாரங்களுடன் தொகுக்கப்பெற்றுள்ளது. தென்னாட்டில் முதன்முதலாக வெளிவரும் குலநூல் இதுவேயாகும். இஃது இலங்கை வாழ் விஸ்வகர்மர்கட்கும் உரியதாம்.

1934-ம் ஆண்டுவரை இத்தகைய நூலை எழுத வேண்டுமென்ற எண்ணம் என்பால் உதிக்கவில்லை. தென்னாட்டில், விஸ்வப்பிராம் மண வம்சத்தில் தோன்றிய குலநூல் விற்பன்னரும், ஆராய்ச்சி யாளருமான இருவேத வித்துக்கள் சில ஆண்டுகளுக்குமுன் இருந்தனர். ஒருவர், மீனாக்ஷிபுரம்-ஜோஸியர் அ. முத்தாச்சாரியார். மற்றவர், கோயமுத்தூர் - சி. ஆர். சுப்பராய ஆச்சாரியார். முன்னவர் தமிழ், சமஸ்கிருத மொழிகளில் தேர்ந்தவர் ; பின்னவர், ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகியவற்றில் பாண்டித் தியம் பெற்றவர். அன்றியும் அவர் பூர்வகால சரித்திர ஆராய்ச்சி யில் வல்லுநர்; எமது கெழுதகை நண்பரும், குலநூல் ஆராய்ச்சியில் புகுத்திய எமது குருவும் ஆவார். அவர்கள் இருவரில் ஒருவர் இந்நூலை எழுதி வெளியிட்டிருந்தால் அது மிக சிலாக்கியமான நூலாக மிளிரும். அவர்களிருவரும் இக்குலக் கடமையை நன்கு உணர்ந்திருந்தும், அதைச் செய்துமுடிக்காமலே காலதேவனால், அந்தோ, கைக்கொள்ளப்பட்டனர் !

1903-ம் ஆண்டுதொட்டு ஸ்ரீ. சி. ஆர். சுப்பராய ஆச்சாரி யாரின் அன்புடைய மாணவனாயிருந்து, விஸ்வப்பிராம்மண குலத்தைக் குறித்த சர்ச்சையும், சம்பாஷணையும் சமயம் வாய்ப்புழி நடாத்தி நடாத்தியே வந்திருக்கின்றேன். அவற்றின் பலன்கள்

குல சம்பந்தமான ஆராய்ச்சியில் பலவாண்டுகள் தோய்ந்துப் படிந்திருந்தும், ஆதாரங்களை நன்குணர்ந்திருந்தும், எமக்குற்ற சமஸ்கிருதம், தெலுங்கு ஆகிய இருமொழித் தேர்ச்சியில்லாக் குறைபாட்டைப் போக்கிய ப்ரம்மஸ்ரீ கூந்தலூர் த. சுப்ரஹ்மண்ய ஆச்சாரியார் இந்நூலுக்கு துணை ஆசிரியராக இருந்து பேருதவி புரிந்துள்ளார். அவருக்கும், இப்புத்தகத்தை அழகாக முடித்துதவிய சாது அச்சகத்தாருக்கும் யான் எக்காலும் கடப்பாடுடையவனுவேன்.

குலநலத்தொண்டன்,

சென்னை
அக்டோபர், 1950

தி. மு. தெய்வசிகாமணி,
ஆக்கியோன்

# உள்ளுறை

பக்கம்

# விஸ்வகர்மப் பிராம்மண வம்சப் பிரகாசிகை

## 1. தோற்றுவாய்

உலக சிருஷ்டிகர்த்தராகிய ஆதி விஸ்வகர்மாவினிட மிருந்து உற்பவித்த அவரது சந்ததியாரைக் குறித்த இந்த ஆகம சாஸ்திரம், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். அக்காலங்களில் வனசரர்களாக இருந்த இதர மக்கட்கு அறிவு விளக்கம், நாகரிகம், கிருஷித் தொழில், வாணிபம் ஆகிய பல இன்றியமையாத திருத்தப் பணிகளில் அச் சந்ததியார் ஈடுபட்டு லோகோபகார்த்தமாகத் தமது வாழ்நாளைச் செலவிட்டுச் சென்றனர் என்பது மிகையன்று. முந்திய நாகரிக மனைத்தும் பிந்திய பிரளயங்களால் அழிக்கப்பட்ட காலத்தே மக்கள் நூதனமாகத் தோன்றி, ஒரு சாரார் உதவி கொண்டு, உலக நாகரிகத்தை மீண்டும் முயன்று முடித்தனரென்பதற்கு இன்று நிலையாயுள்ள நாகரிக உலகமே சான்று பகரும். இன்றும் உலக நாகரிகமும், மக்கள் வாழ்வும் படிப்படியே வளர்ந்தோங்கி வருகின்றன. இவ்வித வளர்ச்சி திரேதா யுகத்தில் தொடங்கி, பிந்திய யுகங்களில் வளர்ந்து இந்நாள் இன்னும் மேலோங்கிச் செல்லுகின்றது. முந்திய யுகங்களில் வதிந்த விஸ்வகர்ம சந்ததியாராகிய பேரறிஞர்கள் அத்தியயனம் செய்வதிலும், சிற்ப நூற்களை இயற்றுவதிலும், ஐந்தொழில்களை லோகோபகார்த்தமாகச் செய்

வதிலும், அறுபத்து நான்கு அருங் கலைகளை உற்பத்தியாக்குவதிலும் தங்கள் முழு அறிவாற்றலையும் செலவிட்டு வாழ்ந்தனரென்ப. மற்றொரு ஊழிகாலத்தை எதிர்நோக்கிய விஶ்வகர்மப் பெரியார்கள் பல அழியாச் சின்னங்களை இந்நாட்டினிடையே நிலைநாட்டியுமுள்ளனர். இவ்வித சிருஷ்டிப் பொருள்களனைத்தும், அச் சந்ததியாரின் உயர்வைக் காட்டுவதற்குப் போதுமென்று எண்ணியோ, அன்றி வேறு எக்காரணம் பற்றியோ அன்னோர் தங்கள் சந்ததியின் உத்கிருஷ்டத்தையும், பிறப்பின் உயர்வையும் உணர்த்தும் தனி நூல் ஒன்றை உண்டாக்கி உலகுக்கு அளிக்கக் கருதாது போந்தனர். ஆயினும் இதிகாச புராண கர்த்தாக்கள், இச் சந்ததியார் திரேதா யுகத்திலும், துவாபர யுகத்திலும் செய்துள்ள அரும்பெரும் சிருஷ்டிகளைக் குறித்து வானளாவப் புகழ்ந்து பலப்பட்ட நூல்களில் கூறிப் போந்துள்ளனர். இவைகளே போதுமென் றெண்ணி விஶ்வகர்மப் பெரியார்கள் தங்களுக்கென ஒரு குல நூலின் அவசியத்தைக் கருதவில்லை போலும்! உலகத்தில் மலிந்துள்ள சராசரப் பொருள்களினிடத்தில் காணப்படுகிற கைத்திறன்களையே தங்கள் சிறந்த குல புத்தகமாகக் கருதினரென்பது மிகையன்று. தமது உலகக் கடமைகளை நன்கு செலுத்தி, தமக்கென வாழாது பிறருக்கென வாழ்ந்த பெருமக்கள் இச் சந்ததியாரே ஆவர்.

கலியுகம் தோன்றி இந்நாள் **5051** ஆண்டுகள் ஆகின்றன. முந்திய யுக தர்மங்கள் மாற்றமடைந்து, உலக நாகரிகம், உயர்வு தாழ்வு என்னும் பேதங்களில் சிக்குண்டு கிடக்கும் இந்நாளும், விஶ்வகர்மர்கள் தாங்கள் இழந்திருக்கும் பூர்வீக செல்வாக்கையும், உத்கிருஷ்டத்தையும் தங்கள் முன்னோர் மகிமைகளையும் உணர்த்தும் ஒரு நூலின் அவசியத்தை உணராது போந்தனர். எனவே, காலவியல்பையும், மக்களின் விபரீதமான மனமாற்றத்தையும் செவ்விதின் உணர்ந்து, கடந்த ஐயாயிரம் ஆண்டுகளினிடையே வெளி

வந்து, பொதுமக்கட்கும், சமூக மக்கட்கும் அறிவுச்சுடர் கொளுத்தவல்ல ஓர் ஆகமநூல் இல்லாக் குறையைப் போக்கவே இதுபோழ்து இந்நூலை எழுதும் அவசியம் ஏற்பட்டது.

இத் தமிழ்நாட்டின்கண் விஸ்வகர்ம சமூகத்தில், பல சமஸ்கிருத, ஆந்திர, தமிழ் வித்வான்கள் பற்பல காலங்களில் இடையிடையே தோன்றாமலில்லை. அவர்கள் அறிவையும், வித்தையின் பயனையும் மக்கள் நலனுக்காக வெவ்வேறு துறைகளில் பயன்படுத்தினரே யன்றி, தங்கள் சமூகத்தி னுயர்வைப் பிற மக்களும் உணர்ந்து திருந்தி நடந்துகொள்ளுமாறு உபயோகித்தாரில்லை. இக்குறையால் வீண் வம்புகளும், விகாரங்களும், கட்சிப் பிரதிகட்சிகளும் நாட்டினிடை வளர்ந்தோங்கின. சமூக மக்களோ, தங்களைத் தாங்களே உணர்ந்துகொள்ள வியலாது, தங்கள் பிறப்பின் உத்க்ருஷ்டத்தை மறந்து, கல்வி நலனைத் துறந்து, வழக்க வொழுக்கங்களில் இழிந்து, உடையும் உருவமும் மாறி, சன்மார்க்க நடை கோணி, இவர்கள் பிரம்ம சந்ததியார்களோவென எவரும் ஐயுறுமாறு உலக அந்தஸ்தில் மிகமிகத் தாழ்ந்து வாழ்நாள் கழிக்கலாயினர்.

இவைமட்டோ? சிற்ப சாஸ்திரங்களுக்கு உரிமையாளரான இச் சந்ததியார், சிற்பக் கலைத் தேர்ச்சிக்கு இன்றியமையாத சமஸ்கிருத கல்வியைத் துறந்து, தமிழர் வழக்கவொழுக்கங்களையும், தமிழ்க் கல்வியையும் அவலம்பித்தபடியாலும், பெரும்பான்மையோர் நகைப்பிற்கிடமாகவே தமிழ்க் கல்வியைப் பயின்றும், அதனை நன்கு கற்றுணர்ந்த சிறுபான்மையோர், தங்கள் சாமர்த்தியத்தைப் புராணம் சொல்லுவதிலும், கவிதைகள் எழுதுவதிலும், கலம்பகங்கள் பாடுவதிலும் தங்கள் அறிவாற்றலைப் போக்கினர் என எண்ண இடந்தருகின்றது. மிகப் பெரும்பாலரான சமூக மக்கள், எக்கல்வி வாசனையுமில்லாத மாக்கள் வாழ்க்கையை நடாத்தி வருவதால், தமிழிலும் கல்வியறிவு,

செல்வாக்கு மிக்க இதர சமூகங்களால் கேவலமாக மதிக்கப்பட்டும், நடத்தப்பட்டும் வருகின்றனர். அரசாங்கத்தார் கணித்துள்ளபடி இச் சமூகத்தில் நூற்றுக்கு எழுபத்து மூன்றுபேர் கல்விவாசனை அற்றவராவர். இவர்களுள், இந் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சிலர், குல உத்கிருஷ்டத்தை செவிவழியே உணர்ந்து, அவ்வப்போது வெகுண்டு குலப் பெருமையைப் பல வழிகளிலும் நிலைநாட்ட முயன்றுமிருக்கின்றனர். கலியுக மத்திய காலமாகிய சென்ற மூவாயிரம் ஆண்டுகளாகவே, பொதுவாக விஸ்வகர்ம சந்ததியார் இந் நிலைமையிலேயே இருந்துவருகின்றனரென்பது புனைந்துரையன்று. மகராஷ்டிர விஸ்வகர்மப்பிராம்மணர்களும், ஆந்திர நாட்டு விஸ்வகர்மச் சகோதரர்களும் கல்வியிலும், ஆச்சார விவகாரங்களிலும் சிறந்து இன்றும் செல்வாக்குடையவர்களாகவே இருந்துவருகின்றார்களென்பது கண்கூடாம். அவர்களிருவரும் தென்னாட்டு விஸ்வகர்மர்கட்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கிவருகின்றனர். சிற்பநூல் தேர்ச்சிபெற்று, சிற்ப நூற்களில் கூறியவாறு சிறந்த தேவாலயப் பணிகளை எந்நாட்டிலும் இல்லாதவாறு இந்நாட்டில் நிலைநாட்டிய சிற்பக் கலைஞர்களின் சந்ததியார் இன்று தமிழகத்தில் தாழ்ந்துள்ளனரென்றால் இதைவிட வருந்தற்குரியது வேறுண்டோ? பிரிட்டிஷ் ஆட்சியில் **1938**-ம் ஆண்டில் எழுந்த விஸ்வப் பிராம்மண பட்டப் பெயரைக் குறித்து இந்நூலாசிரியர் தொடுத்த பெரும் போராட்டத்தில், ஆந்திர விஸ்வப் பிராம்மண சகோதரர்களின் சாஸ்திரப் பிரஞ்ஞையும், சமஸ்கிருத ஞானமும், நடையுடை வைதிகப் பழக்க வழக்கங்களும் தமிழ்நாட்டு விஸ்வகர்மப் பிராம்மணீகத்தை நிலைநாட்டற்குக் குன்றாத் துணையாக நின்றனவாம்.

எனவே, மேலே கூறியுள்ள காரணங்களால் பொதுவாகத் தமிழ்நாட்டுக்கும், குறிப்பாக இலங்கைவாழ் விஸ்வகர்மப் பிராம்மணர்கட்கும் உபயோகமாகும் வண்ணம் இந் நூல் எழுதப்பட்டுள்ளது. விஸ்வகர்மர்களின் பிராம்ம

ணிகத்தையும், குலத்தினுயர்வையும் உள்ளங்கை நெல்லிக் கனியெனக் காட்டுமாறு வேத, இதிகாச, ஸ்மிருதி, புராணம், கல்வெட்டு ஆகியவைகளைக் கடைந்தெடுத்து, முக்கிய ஆதாரங்களாகிய பசும் வெண்ணெய்த் திரளைப் பொற்கிண்ணத்தில் இட்டதுபோல் இந்நூலில் திரட்டி அமைத்து விஸ்வகர்ம சமூகம் உய்யுமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

கலியுகம் தோன்றிய ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் பின் விஸ்வகர்ம சந்ததியார் படிப்படியே உச்சம்பெற்றுத் தங்களுடைய பூர்விகர்களின் நிலையை மீண்டும் அடைவரென சுருதிகள் கூறுகின்றன. அல்லாமலும், ஆதிசங்கராசாரிய சுவாமிகள் "பிராணாதபி கோரக்ஷ்ய :?—குலதர்ம : ஸாது சங்கஸ்ச." அதாவது, பிராணனைப் பார்க்கிலும் குல தர்மத்தையும், ஸாது சங்கத்தையும் முக்கியமாகக் காப்பாற்ற வேண்டுமென்று பொதுவாகக் கூறியிருப்பினும் அதை விஸ்வகர்ம சந்ததியார் பின்பற்றியொழுக வேண்டுமென்பது அவர் கருத்தாம். அதைக் கடைப்பிடித்து தென்னாட்டு விஸ்வகர்மப் பிராமணர்கள் தங்கள் குலத்தைப் புனிதப்படுத்தக் கூடிய பற்பல யாகங்களையும், சத் சங்கங்களையும், வித்வஜ்ன மகாநாடுகளையும், பண்டித பரீக்ஷைகளையும், சென்ற ஐம்பது ஆண்டுகளாக நடாத்தி அவ்வழி கல்வி, கைத்தொழில், ஆச்சார விவகாரங்களிலும் முன்னிலும் சிறிது உயர்ந்து வருகின்றனர். அந்நிய ஜாதிப் பகைமை அறவேயொழிந்து சகோதரத்துவம் எங்ஙனும் விரைவில் பரவிவருகின்றது. இவ்வித அநுகூல சமயத்தில், ஐயாயிரம் ஆண்டுகளிடையே தோன்றவேண்டிய இத்தகைய நூல் இதுபோழ்தே வெளியாகின்றது. இந்த நூலை ஆக்கியவரின் தந்தையார் ஸ்ரீ. தி. மு. முக்கண்ணாச்சாரியார். விஸ்வகர்ம சமூக உயர்வுக்கு அரும்பாடுபட்ட பெரியார். இந்நூலாசிரியர், அவர் தந்தையாரின் அடிச்சுவடு பற்றிக் குலப்பணிகளைக் கடந்த நாற்பத்தைந்து ஆண்டுகளாகச்

செய்து வருகின்றவராவார். எனவே, இந்நூல், அவரால் எழுதப்பட்டு தமிழ்நாடு, இலங்கைவாழ் விஸ்வகர்ம சந்ததியாருக்கு வழங்கப்படல் வேண்டுமென ஸ்ரீ சாட்சாத் விஸ்வேஸ்வரர் திருவுளம்பற்றி விதித்திருந்தனர் போலும்! ஸ்ரீவிஸ்வேஸ்வரர் திருவடி வாழ்க! வாழ்க விஸ்வகர்ம சமூகம்! விஸ்வப்பிராமணீகம் வளர்ந்தோங்குக! வாழ்க விஸ்வப்பிராமண வம்சப் பிரகாசிகை!

## 2. பிரபஞ்ச உற்பத்தி

ஆதியந்தமில்லாமல் சுயம்புவாயுள்ள பராபர வஸ்துவே கடவுள் என்போம். அத்தகைய கடவுள் லீலா விநோதராய் சமஸ்தலோகங்களையும் படைக்கக் கருதி நாத ரூபமாகிய, தமது இச்சாசக்தியினால் பற்பல அண்டகோடிகளைச் சிருஷ்டித்தார். அவற்றில் ஒன்றான பூலோகத்தைப் படைக்கவேண்டி முதன் முதலில் ஆகாய வெளியையும், சமுத்திரமாகிய நீர்ப்பரப்பையும், பிறகு பூமியையும், மலைகளையும், வாயுவையும், நெருப்பையும் முறையே படைத்தார்.

பிறகு சூரியன், சந்திரன் முதலான கோள்களையும் அஸ்வினியாதி பல கோடி நட்சத்திரங்களையும் சிருஷ்டித்தார். அதன்பின் பூமியினிடத்து முளைக்கும் புல், பூண்டு, கொடி, செடி, விருக்ஷங்கள் முதலிய தாவர வர்க்கங்களையும், சமுத்திர நீரின்கண் வாழும் ஜந்துக்களாகிய மீன், நண்டு, நத்தை, சங்கு, இப்பி முதலிய ஜலசரங்களையும், யானை, குதிரை, மாடு, ஆடு, பன்றி, நாய், பூனை முதலியன வற்றையும் கரடி, புலி, சிங்கம் போன்ற கொடிய மிருகங்களையும், கருடன், பருந்து, வலியன், கழுகு, கிளி, கோழி, மயில் போன்ற பட்சி ஜாதிகளையும், பூமியினிடத்து நகர்ந்தும் தவழ்ந்தும் சஞ்சரிக்கின்ற உடும்பு, ஓணான், பல்லி, தவளை, பாம்பு முதலிய ஊர்வனவாகிய ஜந்துக்களையும் படைத்து அதன் பின்னர் மனிதர்களையும் தேவர்களையும் சிருஷ்டித் தருளினார்.

இவ்வித வரிசைக் கிரமத்தை அனுசரித்து மாணிக்க வாசகப்பெருமான், சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்,

“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகி

கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்"

எனக் கூறியுள்ள திருவாசக மொழியையும் ஓர்க.

இற்றைக்குச் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கிறிஸ்துமதம், ஆதியில் உலகம் ஆறு தினங்களில் படைக்கப்பட்டதென்றும், கடவுள், முதல் நாள் வெளிச்சத்தையும், இரண்டாம் நாள் காற்றையும் மேகங்களையும், மூன்றும் நாள் பூமியையும் சமுத்திரத்தையும் பயிர்களையும், நான்காம் நாள் சூரிய சந்திர நக்ஷத்திரங்களையும், ஐந்தாம் நாள் மீன்களையும் பக்ஷிகளையும், ஆறும் நாள் மிருகங்களையும், மனிதர்களையும் சிருஷ்டித்து, ஏழாம் நாள் ஓய்வுகொண்டிருந்தனரெனக் கூறுவதாம். முற்கூறிய சிருஷ்டிமுறைக்கு இது பேதம் கொண்டு இருப்பதோடும், சூரியன் சிருஷ்டிக்கப்படாத போது, நான்காவது நாள் எப்படி கணிக்கப்பட்டதென்னும் ஐயப்பாட்டையும் எழுப்புவதாம். ஆயினும், பிரபஞ்ச கர்த்தா, லீலாவிநோதராய் உலகின்கண்ணுள்ள சராசரப் பொருள்கள் அனைத்தையும், ஆறறிவு படைத்த மனிதவர்க்கத்தையும் நேராகவே படைத்தார் என்பது சந்தேகமறப் பெறப்படுகின்றது.

இவ்வாறு மேற்கண்ட சிருஷ்டி முற்றுப் பெற்றபின் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூன்று தேவர்களையும், அவரவர்கட்கு உகந்த சக்திகளோடு அருவஉருவமாகப் படைத்து முறையே சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், ஆகிய முத்தொழில்களையும் புரியச் செய்தார். அத்தகைய பரப்ரம்மம் அம் மூவர்களுக்கும் மேலான சதாசிவ மூர்த்தியாகவும், ஐம்முகக் கடவுளாகவும், விஸ்வகர்மாவாகவும் சகளீகரித்து சமஸ்த தேவர்களுக்கும் மேலான மகாதேவனாகத் தோன்றித் தம்மைத் தவத்தால் வழிப்பட்ட இந்திராதி தேவர்கட்கும், மகரிஷி

கட்கும், முனிவர்கட்குப் வரமளித்து அருவுருவாகக் காட்சியளித்து ஒப்புயர்வற்று விளங்குவாரானார்.

பிரதம சிருஷ்டி காலத்தில் முதன்முதல் தோன்றியது நாதம். இந்த நாதமே சர்வ பிரபஞ்ச தோற்றத்திற்கும் ஆதிகாரணமாம். நாதம் தத்துவங்கட்கெல்லாம் பிறப்பிடமாகும். அதனைக் கடந்து நிற்பது தற்பரமாகும். அத்தற்பரம் நமது கண்ணுக்குப் புலனாகிற இப் பிரபஞ்சமாகிய பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் எனப்படும் பஞ்ச பூதங்களின் காரியமாயும், சுட்டி அறியப்படும் பல அவயவப் பகுப்புடையதாயும், தோன்றி நின்றழியும் தன்மைத்தாயும் இருத்தலின் அது காரியரூபமாகும்.

பிரபஞ்சம் எனில் பிர உபசர்க்கம், பஞ்சம் விரிவு, அதாவது மிக விரிந்த இயல்புடைய ஒன்று என்பது அதன் பொருளாகும். கடவுள் அல்லது இறை என்னும் சிவம் அழிவற்றது. முக்காலங்களாலும் அளவிட்டறியப்படாதது. துரியம், அக்ஷரம், ப்ரம்மம் என்று அது நிரூபிக்கப்பட்டபடியால், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவர்க்கும் மேலான துரியாதீத வஸ்துவே அப்பரம்பொருள் என்று நிர்த்தாரணம் செய்யப்பட்டது. அதுவே சிருஷ்டிக்கு முன்னும் சங்காரத்துக்குப் பின்னும், இன்றும் என்றும் உள்ளதாகிய பரப்ரம்மம். அப்பொருளே சிவபரம் பொருள் என்று கிருஷ்ணயஜுர்வேத சுவேதா சுவதரோபநிஷத் வாக்கியம் நிரூபிக்கும். அது பின்வருமாறு:

" யதா தமஸ்தந்ந திவா நராத்ரி: நஸந்ந
சாஸச்சிவ ஏவகேவல :
ததக்ஷரம் தத்ஸவிதுர் வரேண்யம்
ப்ரஜ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ "

சர்வ ஜகத் காரணரூப பராசக்தி சகித, பரமேஸ்வரர் ஒருவரே சத்து அசத்து என்ற பாகுபாடில்லாமல் ஆதிகாலத்தும் இருந்தார் எனவும், அவரே துரிய

மண்டல அந்தர்யாமியாய் ஸர்வ ப்ராம்மண பரமோ பாஸ்ய மூர்த்தியாய், உயர்காயத்திரியின் அதி தேவதையா யுள்ளாரெனவும், ஆதி சிருஷ்டியில், அவரிடத்தே இவ் வுலகை யான் சிருஷ்டிப்பேன் என்ற ஆதிசங்கற்பம் தோன்றிற்று. அதுவே பிரம்ம லக்ஷணமாதலால் அத்தகைய லக்ஷணம் பொருந்திய ஒப்புயர்வற்ற பரம்பொருளே விஸ்வப்ரம்மம் என தீர்மானிக்கப்பட்டது.

முன்னர் கூறியபடி திரிமூர்த்திகளும் அந்த சிவபரஞ் சுடரால் படைக்கப்பட்டவர்களென்றும், அம்மூவர்களுக் கும் தோற்றமும் நாசமும் உண்டென்றும் கீழ்க்கண்ட சுருதிவாக்கியம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கின்றது.

சாமவேத மஹோபநிஷத் :

" ப்ரஹ்மா விஷ்ணு ஸ்ச்ச ருத்ரஸ்ச்ச ஸர்வே வாபூத ஜாதய :
நாசமே வானுதா விந்தி ஸலிலா நீவ பாடவம் "

இதன் பொருள் : பிரமனும், விஷ்ணுவும், உருத்திர னும் எல்லாப் பூதங்களோடும் பரசிவத்தால் படைக்கப்படு கின்றனர். வடவைத்தீயில் ஜலம் லயமடைதல் போல அப் பூதங்களோடு அவர்களும் லயமடைகின்றனர். பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகியவர்கட்கெல்லாம் அதீதரும், துரீயரும், சச்சிதாநந்தரும் அவர்களால் சேவிக்கப்படுபவரு மான துரீய சிவம் ஒன்றே சேவியப்பொருளெனவும், மற்றையோர் அப்பொருளைச் சேவிக்கும் சேவகர்களெனவும் வியக்தமாகிறது. பகவத் கீதையிலும் "ப்ரம்மம் யாது" என்னும் பொருள்பட "கிம்தத்ப்ரம்மம்?" என்று வினவப் பட்டதற்கு அழியாத பொருள் எதுவோ அதுவே ப்ரஹ்மம் என்று விடைபகரப்பட்டுள்ளது. மேலும் மூலஸ்தம்பத்தில்,

" நபூமி நசலம் சைவ, நசித்தஞ்சக் ராண கோசர :
நசப் ரஹ்மாந விஷ்ணு ஸ்ச்ச நசருத்ரஸ் சதார கா :
சர்வ சூன்ய நிராலம்பஸ் வயம்பூ விஸ்வகர்மண : "

என்ற சுருதி வாக்கியத்தால் பூமியும், ஜலமும், அக்னியும், வாயுவும், பிரகாசமும், ஆகாயமும், நட்சத்திரங்களும், பிரம்மாவும் விஷ்ணுவும், உருத்திரனும் இன்னும் பிறவும் ஒன்றுமில்லாத சர்வ சூன்யமாயிருந்த காலத்தில் ஸ்வயம்பு விராட் விஸ்வப்பிரம்மாவானவர் ஜோதிஸ்வரூபமாய் இருந்தார். அந்த சொரூபத்தினின்றும் அக்கினியிற் சூடுபோன்றும் எள்ளில் எண்ணெய்போன்றும் தன்னிடமுள்ள பரையெனும் சக்தியின் சேர்க்கை விசேடத்தால் பரமோ சக்தி காரியமாகிய பஞ்சமுக விஸ்வகர்மாவாக ரூபீகரித்தார். இங்ஙனம் மேற்கண்ட பிரமாணத்தால் விஸ்வகர்மாவென்னும் பரம்பொருளின் பிரபஞ்ச சிருஷ்டியின் சிறப்பு கூறப்பட்டது.

இன்னும் இருக்கு வேதம் 10வது மண்டலம் 6-வது அநுவாகம் 13 - 14-வது சூக்தம், "யஇமா விஸ்வாபுவனானி ஜுஹ்வத் ருஷிர் ஹோதா" என்பது முதல், "விஸ்வஸம் பூரவஸே ஸாதுகர்மா" என்ற மந்திரங்களிலும் மேற்படி 14-வது சூக்தம், "சக்ஷுஷப் பிதா மனஸா ஹிதிரோக்ருத மேதா" என்பது முதல், "உக்தசாசஸ்ச் சரந்தி" என்பது வரையில் கூறு மந்திரங்களிலும்,

இன்னும் கிருஷ்ண யஜுர் வேதம் 5-5-22ல்,

"விஸ்வகர்மா திசாம்பதி: ஸ்ந: பஸூன்பாது சொஸ்மான்பாது தஸ்மை நம: ப்ராஜாபதிருச்ரோ - வருணோக்னிர்த்தி சாம்பதிஸ்ஸந: பஸூன்பாது ஸொஸ்மான் பாதுதஸ்மை நம: எதாவை எதேஷாம் பசூநாம் பதி: பரிஸ்தாப்யோவா எஷ அவிருச்யதேய: பசு சீர்ஷாண் யுபதாதி ஹாரண்யேஷ்டகா உபதாத் யெதப்ய எவதேவ தாப்யோ நமஸ்கரோதி ப்ரஹ்மவாதி ந:"

என்றும், யஜுஸ்ஸம்ஹிதை - 4-6-6ல்,

"யஇமா விஸ்வாபுவனானி ஜுஹ்வத்ருஷிர் ஹோதா நஷாதஸாதா பிதாந: ஆசிஷாத் ரவிணமிச்சமாந: பாமச்

*சதோவர ஆவியே பவிஸ்வகர்மா மநஸாத் விஹாயா தாதா விதாதா பரமோத ஸந்ச்ரக்த் தேஷா மிஷ்டானி ஸமீஷா மதந்தி - யத்ரஸப்தர்ஷீன் பரமாஹு: யோந: பிதா ஜனி தாயோ விதாதா யோநஸ்ஸதோ அப்யா ஸஜ்ஜ ஜான."*

இதன் பொருள்: விஸ்வகர்மா என்னும் பரம்பிரம்மம் சர்வவியாபக பிரசித்தர். ஸமஸ்த தேவதாம்ஸர், மேலும், விஸ்வகர்மப் பிரம்மம் ஸ்வயமாயுண்டான நித்தியர்; அந்தந்தப் பிரளய காலங்களில் சமஸ்த வஸ்துக்களையும் அதாவது அண்டபிண்ட சராசரங்களையும் தன்னிடத்தில் ஐக்கியப்படுத்திக்கொண்டு மீளவும் சிருஷ்டிக்க வல்ல சர்வக்ஞர்; அவரே பிரபஞ்ச கர்த்தர்; ஹோதா; பிரஜாபதி; சமஸ்த சரீரங்களையும் சிருஷ்டித்து அவற்றுள் பிரவேசிக்கும் ஜீவஸ்வரூபி. அச்சீவர்கள் என்றும் உஜ்ஜீவிப்பதற்கான சமஸ்த உணவுப் பொருள்களையும் உண்டாக்கித் தரும் தேவ தேவதா சிரேஷ்டர் என்பதாம்.

மேலே குறித்த வேதவாக்கியங்களால் பிரபஞ்ச உற்பத்திக்கு ஆதாரபூதராகிய கடவுள் - இறைவன் ஸ்ரீ விஸ்வகர்மாவாகிய பரப்பிரம்மம் என்பது நன்கு பெறப்படும். மேலும் அந்த விஸ்வகர்ம சப்தத்திற்குப் பொருள் காணும்போது, 'விஸ்வம்' என்பதற்கு உலகம் எனவும், 'கர்மா' என்பதற்கு சிருஷ்டிக்கிறவர் என்றும் பொருள் கொண்டு அவ்விஸ்வகர்ம பரப்பிரம்மத்தை பிரபஞ்ச சில்பி என்றும், உலக முதலிய சமஸ்த சிருஷ்டிகளுக்கும் அடிப்படையானவரென்றும், அவர் நித்தியர் என்றும் வேதநூல் கோஷிக்கின்றது.

இனி, தமிழ் ஆதாரங்களை நோக்குவோம். பிரம்மம் அல்லது கடவுள் என்பது கற்பனைக் கடந்தது. காலத்திற்கும் அடங்காதது. காலம், இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூவகையாய்ப் பிரிக்கப்பட்டுள்ளது. ஆனால், இறந்தகாலம் எங்கு தொடங்கிற்று? அது

எப்போது நிகழ்காலமாக மாறிற்று? எதிர்காலம் எங்கு முடிவடையப்போகிறது? காலமோ அநாதி, முடிவற்றது. இத்தகைய காலத்தையும் இயக்கிவரும் பிரம்மம் அல்லது கடவுள் ஆதியும் அந்தமும் இல்லாதவரென்பது தானே தொடரும். எனவே, பிரம்மம் அல்லது கடவுள் நித்தியர் என்பது முடிவு. இவ்வுண்மை திருவருட்பா ஆறாவது திருமுறையில் வெகு அழகாக எடுத்தோதப்பட்டுள்ளது.

“ அண்டமெலாம் பிண்டமெலா முயிர்களெலாம் பொருள்க
ளானவெலா மிடங்களெலாம் ஈக்கபற நிறைந்தே
கொண்டவெலாம் கொண்டவெலாம் கொண்டுகொண்டு மேலும்
கொள்வதற்கே இடங்கொடுத்துக் கொண்டு சலிப்பின்றிக்
கண்டமெலாம் கடந்துநின்றே யகண்டமதா அதுவாய்
கடந்தவெளியா யதுவுங் கடந்ததனி வெளியாய்
ஒண்டகுசிற் றம்பலத்தே யெல்லாம் வல்லவராய்
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர். ”

எனவே, பிரம்மம் அல்லது கடவுள் ஒருவரேயாவர். அவர் என்றுமுளர்; எங்குமுளர்; உலகெலாம் அவரால் சிருஷ்டிக்கப்பட்டது. அவ்வுலகங்கள் அவரால் இயங்குகின்றன, இயக்குவிக்கப்படுகின்றன என்பது நனி விளங்கும். சுவாமி தாயுமானுர் இதனை மேலும் விளங்கக்கூறுமிடத்து, “மண்ணுலகிலே ஒரு செப்பிடு வித்தைக்காரன், இதோ பார்! என்று கூவி, கோழி முட்டை முதல் பலதரப்பட்ட முட்டைகளை ஆகாய வெளியில் வீசி எறிந்து அவற்றை நிறுத்திக் காட்டுவது போல, எண்ணிறந்த சிறந்த அகிலாண்ட கோடிகளாகிய பல கோளங்களை ஆகாய வெளியில் வீசி எறிந்து அவை விளங்கும்படி நிற்கவும், இயங்கவும் செய்து வைத்துக்கொண்டிருக்கிற ஆச்சரியகரமான சிருஷ்டிப் பிரம்மத்தை, இத்தன்மைத்தென்று இலக்கண வகையில் நிச்சயிக்க முடியாத எல்லாம் வல்ல இறைவனே” என வழுத்துவதையும் உன்னுக.

இனி, யுக்தி, அனுபவம் ஆகியவைகளைக்கொண்டு இதனை மேலும் ஆராய்வோம். வடமொழியிலும், வடமொழியைச் சார்ந்துநிற்கும் ஆந்திரமொழியிலும் பரப்பிரம்மத்தை அல்லது கடவுளைக் குறிக்கும் சொற்கள் 'தேவ்', 'தேவடு', 'தேவரு', 'சுவாமி' என்பனவாம். இவை கடவுளையும் மக்களையுங்கூடச் சுட்டுவனவாம். ஆங்கிலத்தில் இந்த நித்தியப்பொருளைக் குறிப்பிடுவதற்கு 'லார்டு', 'பிதா' என்னும் சொற்களையும், முஸ்லீம் மதத்தினர் 'ஆண்டவர்' என்னும் பதத்தையும் கையாண்டு வருகின்றனர். ஆயினும், அப்பதங்கள் இறைவனுகிய பிரம்மத்தையும், அரசர், பிரபுக்கள் போன்ற பெருமக்களையும்கூடக் குறிப்பனவாம். ஆனுல், 'பிரம்மம்', 'கடவுள்' என்னும் தனிச்சொற்கள், பிரபஞ்சத்தை சிருஷ்டித்தருளிய எல்லாம் வல்ல பிரம்மத்தை - விஸ்வகர்மாவை - கடவுளரை, உள்ளத்தைக்கடந்த ஒன்றை, சிந்தைக்கு எட்டாத ஒன்றை, அறிவு, கற்பனை, உவமைகளையும் கடந்துநின்ற - நிற்கும் நித்தியப்பரம்பொருளைக் குறிப்பதாகுமென்பது சந்தேகமறப் பெறப்படும் உண்மையாம். இனிவருங் கற்பங்களில் அல்லது பிரளயங்களுக்குப் பின் எவ்விதப் பிரபஞ்ச லீலைகளை அவர் புரிவாரென்பது எவராலும் நிச்சயிக்கக்கூடாவொன்ரும். ஆயினும், வரும் யுகங்களையும், கற்பகாலங்களையும் அறிவிற்கெட்டுமாறு ஒருவாறு விளக்குவோம். அதுபொழுது விஸ்வகர்மப் பரம்பொருளின் பிரதாபம் மிக நன்கு விளங்கும். யுகங்கள், கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் எனவும், அவை முறையே 17,28000, 12,96000, 8,6,4000, 4,3,2000 வருடங்கள்கொண்டனவாகும். இந்தச் சதுர்யுகம் ஆயிரங் கழிந்தால் விஸ்வகர்மாவால் சிருட்டிக்கப்பட்ட பிரம்மனுக்கு ஒரு பகலாம்; பின்னும் ஓராயிரம் கழிந்தால் ஒரு இரவாம். இப்படி 360 பகலிரவுகள் கழிந்தால் பிரம வருடம் ஒன்ருகும். இவ்வருடம் நூறு சென்ருல் பிரமனுடைய ஆயுள் முடிவாம்.

பிரமனுக்குப் பின் பிரளயகாலம் உண்டாகும். அந்தப் பிரளயத்தில் திரிலோகங்களும் அழிந்தொழிய அதாவது ஆதிப்பிரமத்தினிடம் ஒடுங்க, மீண்டும் உலகங்கள் சிருஷ்டி செய்விக்கப்படுமென்பது வேதநூல்களின் துணிபாம். இப்போது நடைபெறும் கலியுகம் 5051-ம் ஆண்டில் இப்பிரபஞ்சத்தையடுத்த இவ்வுலகம் இருந்துவருகின்றது. இதனைல் இப்பிரபஞ்சோற்பத்தி எப்பொழுது தோன்றிற்றென்பதை ஒருவாறு ஊகத்தால் அறியலாம்

## 3. விஸ்வகர்மப் பரத்துவம்

முந்திய அத்தியாயத்தில் பிரபஞ்சோற்பத்தியின் கிரமம் விளக்கமாகக் கூறப்பட்டது. அதன்கண் நிஷ்கள வடிவமான பரப்பிரம்மம் எம்முறையில் இப்பிரபஞ்சத்தை யும் இப்பிரபஞ்சத்தின்கண்ணுள்ள அசரசரப் பொருள் கள் யாவையும் தமது இச்சாசக்தியினுல் சிருஷ்டித்த தென் றும், அவற்றை மேலும் சிருஷ்டி, திதி, சம்ஹாரம் என்னும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் தமக்கே உரிமையாகக்கொண்ட பிரம்மா, விஷ்ணு, உருத் திரன் ஆகிய முத்தனிக்கடவுளர்களாகிய பூகாவலர்களை நிருமித்தளித்த விவரமும் ஆங்குக் கூறப்பட்டுள்ளது. அப்பரப்பிரம்மத்தால் நிர்மாணிக்கப்பெற்ற இதர உலகங் களைப் புரத்தற்கு எத்தகைய கடவுளர்களைச் சிருஷ்டித் துள்ளார் என்பது மனித அறிவுக்கும் கற்பனைக்கும் எட் டாது நிற்பதொன்றும்.

இனி நிஷ்களமாகிய அல்லது அருவினராகிய பிர பஞ்ச சிருஷ்டிக் கர்த்தாவாகிய கடவுள் சகளஸ்வரூபமாகத் தமது லீலாவிசேடத்தால் எவ்வாறு விராட் விஸ்வகர்ம ரூப மாக ஆர்ப்பவித்தார் என்பதை இங்கு நோக்குவாம். வேதங் கள் கோஷிப்பதுபோல் இவ்விராட் சொரூபம் ஐந்து சிரங் களைக் கொண்டதாகவும், ஐந்து சுமுகங்களைப் பெற்றும், பதினைந்து நேத்திரங்களோடும், பத்து அழகிய கரங்களை யடைந்தும், இரண்டு செவ்விய பாதங்களுடனும் காட்சி யளித்தார். இவரை மிகப் போற்றுமுகத்தான் யஜுர் வேத புருஷ சூக்தத்தில் கீழ்க்கண்டவாறு உருவகப்படுத்தி ஸ்தோத்தரிக்கப்பட்டிருக்கிறது.

“ ஹரி:ஓ. ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: ஸகஸ்ராக்ஷ
ஸ்ஸஹஸ்ரபாத், ஸபூம் விச்வதோ
வ்ருத்வா அத்யதிஷ்ட்டத் தசாங்குலம் புருஷவ்

வேதக்ம் ஸர்வம், யத்பூதம் யச்சபௌவ்யம்,
உதாம்ருதத் வஸ்யேசான:,—யதந்
நேநா திரோஹதி, ஏதேவா நஸ்ய
மஹிமா அதோஜ்யாக்ம் ஸ்ச்ச புருஷ: "

இதன் பொருள் : ஆயிரம் சிரசுகளுடையவரும், ஆயிரம் கண்களையுடையவரும், ஆயிரம் பாதங்களையுடையவரும், எல்லா உலகங்களையும், திசைகளையும் பத்து அங்குல சரீரமாகக் கொண்டவரும், அதாவது திசைகளனைத்தையும் அண்மையில் உடையவரும், வேதங்களால் துதிக்கப்பெற்ற பரமபுருஷனும், ஐம்பூதங்களாலாகிய உலகைச் சிருஷ்டித்துத் தாம் என்றும் அழியாதிருப்பவருமான விராட்சொரூபியை என்றும் தியானிப்போமாக! என்று கூறப்பட்டுள்ளது. முன்னர்க் கூறியவாறு ஐந்து சிரங்கள், பத்து கரங்கள், இரண்டு பாதங்கள் உடையவரெனப் பூர்வத்தில் நிஷ்கரித்துக் கூறியிருந்தபோதிலும், உத்தம பாத்திரங்களாகிய இவரது சிருஷ்டிப்பொருள்களின் சிரங்கள் கரசரணாதிபோன்ற அவயவாதிகளை ஒன்றுகூட்டி நோக்குங்கால், அவைகள் புருஷசூக்தத்தில் கூறும் ஓராயிரம் மட்டுமல்ல, பல்கோடி நூறாயிரம் எனத் துணியலாம். ஆயினும், முன்னர் நிச்சயிக்கப்பட்டவாறு, அப்பிரம்மத்தின் ஐந்து சிரங்களில் ஒன்று சூரியன் உதிக்கின்ற கிழக்குத் திக்கையும், மற்றொன்று அன்னோன் ஒடுங்கும் மேற்குத் திக்கையும், மற்ற இரண்டும் இருபாரிசங்களிலுமுள்ள தெற்கு வடக்கு ஆகிய இரு திக்குக்களையும் எஞ்சிய மற்றொரு சிரம் ஆகாயத்தை நோக்குவதாகவும் அமைந்துள்ளன. இஃது இயற்கை முறையேயாகும். அண்டமெங்கும் வியாபித்துள்ள சராசரப் பொருள்கள் மேற்குறித்த ஐந்து திக்குகளில் அடங்குவனவென்பது அதன் தாத்பரியமாம். அல்லாமலும், நான்கு திக்குகளையும் தனித்தனியே நோக்கும் முகங்களால் ஆகாயப்பரப்பையும் நோக்குதல் அரிதாகுமன்றோ?

மேற்குறித்த அந்த ஐந்து முகங்களும் வேதங்களால் தனிப் பெயர்கொண்டு அழைக்கப்படுகின்றன. அவை முறையே சத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் எனப்படுவனவாம். மேலும், வேதங்கள் கூறுவதாவது :

சத்யோ ஜாதகம் என்னும் கிழக்குமுக தியானத்தால், அறிவு விளக்கம் மிகுந்த சானகரிஷி தோன்றி அவருக்குகந்த இருக்குவேதத்தால் துதிக்கப்பெற்றார்.

வாமதேவமென்னும் தெற்குமுக தியானத்தால் சனாதன ரிஷி தோன்றி அவருக்கிசைந்த யஜுர் வேதத்தால் துதிக்கப் பெற்றார்.

அகோரம் என்னும் மேற்குமுக தியானத்தால் அபுவனஸ ரிஷி தோன்றி அவர்க்கான சாம வேதத்தால் துதிக்கப் பெற்றார்.

தத்புருஷம் என்னும் வடக்கு நோக்கிய முகத்தில் பிரத்னஸரிஷி தோன்றி அவர்க்கேற்ற அதர்வணவேதத்தால் துதிக்கப் பெற்றார்.

ஈசான என்னும் ஆகாயத்தை நோக்கிய முகத்தில் சுபர்னஸ ரிஷி தோன்றி அவருக்குரிய பிரணவ வேதத்தால் துதிக்கப்பெற்றார்.

மேலே கூறியவை கீழ்க்கண்ட யஜுர் வேத எக்ஞு மந்திரங்களால் உறுதிப்படுத்தப்படுகின்றன.

"ஸத்யோ ஜாதாய முக ஜன்மனே
ருத்ர ரூபாய தீமஹே
ஸத்யோ ஜாதமு கோத்பவாய ருத்ரரூபிணே
தந்நூமநு ப்ரசோதயே த்ஸ்வாஹா
தந்நூமநு விஸ்வகர்மணே யிதம் நமமா"

" வாம தேவாயமுக ஜன்மதே
விஷ்ணு ரூபாய தீமஹே
தந்நூ மயப் பிரசோதயேத் ஸ்வாஹா
தந்நூ த்வஷ்ட விஸ்வகர்மணே யிதம்நமமா "

" அகோராய முக ஜன்மனே
ப்ரஹ்ம ரூபாய தீமஹே
தந்நூ த்வஷ்டப்ர சோதயேத் ஸ்வாஹா
தந்நூ த்வஷ்ட விஸ்வகர்மணே யிதம் நமமா "

" தத்புருஷாய முகஜன்மனே
இந்த்ர ரூபாய தீமஹே
தந்நூ சில்பி ப்ரசோதயேத் ஸ்வாஹா
தந்நூ சில்பி விஸ்வ கர்மணே யிதம் நமமா "

" ஈசானய முகஜன்மனே
அர்க்க ரூபாய தீமஹே
தந்நூ விஸ்வக்ஞ ப்ரசோதயேத் ஸ்வாஹா
தந்நூ விஸ்வக்ஞ விஸ்வகர்மணே யிதம் நமமா "

மேற்குறித்த மந்திரங்களின் பொருள்: ஸ்ரீமத் விராட் விஸ்வகர்மாவினது ஸத்யோஜாதமுகத்தில் பிறந்தவரும், உருத்திரரூப முடையவரும், மனு விஸ்வகர்மாவுமாகிய உம்மை இந்த ஹோமத்திற்குப் பலன் அருளுமாறு இங்குப் பிரசன்னமாக வேண்டுமாய்ப் பிரார்த்தித்து நமஸ்கரிக் கின்றேன்.

வாமதேவ முகத்தில் பிறந்தவரும், விஷ்ணுரூப முடைய வரும் மய விஸ்வகர்மாவுமாகிய நீவிர் இந்த அக்னி காரியத் திற்குப் பயனளிக்குமாறு இங்கு வந்தருளவேண்டுமாய்த் தியானித்து நமஸ்கரிக்கின்றேன்.

அகோர முகத்திற் பிறந்தவரும் பிரம்மரூப முடைய வரும் துவஷ்ட விஸ்வகர்மாவுமான உம்மை இந்த யாகத் துக்கு வந்து பலனருளுமாறு வேண்டி நமஸ்கரிக்கின்றேன்.

தத்புருஷ முகத்திற் ஜனித்தவரும், இந்திரரூபமுடையவரும், சிற்பி விஸ்வகர்மாவுமாகிய நீவிர் இந்த யக்ஞத்திற்கு எழுந்தருளி இம்மகத்திற்கான பலனைத் தருமாறு கோரி நமஸ்கரிக்கின்றேன்.

ஈசான முகத்திற் றோன்றியவரும் சூரியனது ரூபமுடையவரும் விஸ்வக்ஞ விஸ்வகர்மாவுமாகிய உம்மை இந்த அக்னிஹோத்ரத்துக்கு எழுந்தருளி நற்பயன் அருளுமாறு துதித்து நமஸ்கரிக்கின்றேன் என்பதாம்.

உலகவழக்கில், மாந்தரிடத்து அமைந்துள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து இந்திரியங்களும் இணைந்து, அதன் காரியமாகிய மூளையின் இயக்கத்தால் அறிவு விளக்கம் தோன்றுவதுபோல், பிரம்மத்தின் ஐந்து முகங்களினின்றும் அறிவுமயமாகிய ஐந்து ரிஷிகள் பிறந்தன ரென்பதுதான் மேற்குறித்த வேத மந்திரங்களால் பெறப்படுவதாகும். எனவே, சானகர், சனாதனர், அபுவனசர், பிரத்னசர், சுபர்னசர் ஆகிய பஞ்ச பிரம்மாக்களும் விஸ்வகர்மப் பரமேஸ்வரரால் சிருஷ்டிக்கப் பட்டன ரென்பதற்கு மேலும் சுருதிப்பிரமாணம்;

கிருஷ்ண யஜுர் வேதம் 4-ம் காண்டம் 6-ம் பிரபாடகம் 6-ம் அனுவாகம் 2-ம் மந்திரம்:

“ யோதேவானும் நாமதா எக எவதக்ம்
ஸம்ப்ரச்நம் புவநா யத்யன்யா : த
ஆய ஜந்தத்ர விணக்ம், ஸமஸ்யாருஷேய
பூர்வே ஜரிதாரோ நபூநா : அஸூர்த்தா
ஸூர்த்தா ரஜஸோவி மானே - யேபூதானி
ஸமக்ருண்வந்நிமாநி : நதம் விதாதய
இதம் ஜஜாநா ந்யுத்யுஷ்மாக மந்தரம்
பவாதி : நீஹா ரேணப்ரா-வ்ருதா ஜல்ப்யா
ஸூத்ருப உக்த சாஸஸ் சரந்தி : ப ரோதி
வா பரஎநா. ”

மேற்குறித்த மந்திரத்தின் கருத்து விளக்கப்பட்ட சாயனாச்சார்ய பாஷ்யத்தின் மொழிப்புரையாவது :

அவ்விதம் மகத்துவம் பெற்ற உலகுக்கு முதல்வனும் பரமேஸ்வரனுமாகிய விஶ்வகர்மாவினிடத்து எல்லா உலகங்களும் பிரளயகாலத்தில் சென்று ஒடுங்குகின்றன. முன் சிருஷ்டிக்கப்பட்ட அபூனர் எனும் அபுவனஸர் ஆகிய எந்த விஶ்வகர்மப் பிரம்மரிஷிகள் தங்கள் தங்கள் கிருத்தியங்களாகிய போக்கியம் பொருந்திய செல்வத்தை நன்றாகச் சம்பாதித்தும், பஞ்சேந்திரியங்களைத் தம் வசமாக்கியும் மேலும் மகாமகத்துவ சித்தியினால் ஒருபோதும் அழிவில்லாதவர்களாகவும், அழகிற்கு இருப்பிடமாகிய தங்கள் தங்கள் அற்புதத் தொழில்களினால் பிரகாசமடைந்தும், உலகில் எல்லாப் பொருள்களையும் ஜீவபாவமுடையதாக உற்பவிக்கச்செய்தார்கள் என்பதாம். எனவே, இச்சுருதிப் பிரமாணத்தால் அபுவனஸரோடு சானகாதி பஞ்ச விஶ்வகர்ம ஆதி ரிஷிகள் ஸ்ரீ விராட் விஶ்வகர்மப் பரமேஸ்வர முகூர்த்தத்தால் சிருஷ்டிக்கப்பட்டனரென்பது சந்தேகமற நிர்த்தாரணம் செய்யப்பட்டது.

இனி, சுருதிகளை அடிப்படையாகக்கொண்ட புராண ஆதாரங்களை நோக்குவோம். ஸ்காந்தம் நாகரகாண்டம் 11-ம் அத்தியாயத்தில்,

"தேவ தேவ மஹா தேவம்
ஸர்வஜ்ஞ ஜகதாம்பதே
ஸதாசாரம் மமப்ரூஹி
வம்சாநாம் விஶ்வகர்மண : ||

ஶ்ருணு ஷண்முக விஶ்வேச
வேதாகம விநிஶ்சித :
விபரீத கதிர் வ்ருக்ஷ
ஊர்த்வ மூலம் தபஸ்விமத் ||

அதஸ்ச்சாத் பத்ர சாகஸ்ச்ச
ப்ரஹ்மாண்ட பல ஸம்யுத:
ப்ரஹ்மாதி: கேசவோ மத்பஸ்த்
தஸ்யாக்ரந்து ஸதாசிவ: ||

த்ரிமூர்த் யாத்மா வ்ருக்ஷராஜோ
விஸ்வப்ரஹ்ம மயோஹ்யஸௌ
தத்துமாயாமயம் ப்ரஹ்ம
நிர்ணேயம் குமாரகை: ||

புனரேகைக சாகாயாம்
அபவன் பஞ்ச பஞ்சச
சதேந பஞ்ச விம்சத்யா
சாகா பேதேன ஸம்யுத: ||

விஸ்வகர்ம [illegible]
ஸஹஸ்ராம்ஸு விபூதிமன்
ததுத்பூதம் ஜகத்ஸர்வம்
ஸசராசர தைவதம் ||

ததுத்பூதா மஹாத்மான
ஸர்வவேத மயாநகா: "

மேலே கூறப்பட்ட சுலோகங்களின் தாத்பரியம்: "ஓ மஹாதேவா! விஸ்வகர்ம பாத்துவத்தை நான் அறியும் படிச் சொல்லும் என ஷண்முகன் கேட்க, ஸ்ரீ சிவபிரான் சொல்வதானார். நீ வினவியது வேதாகம சாஸ்திரங்களி லெல்லாம் பண்டே நிர்ணயிக்கப்பட்டது. பரப்பிரம்மம் எனும் ஒரு விபரீத விருக்ஷமுண்டு. அதனுடைய வேர் மேல்பாகத் திலும் கிளைகள் கீழ்பாகத்திலும் அமைந்து அந்தரத்தில் தொங்கிக்கொண் டிருக்கிறது. அக்கிளைகளில் அண்ட பிரம்மாண்டங்களெல்லாம் பழங்களாகத் தொங்கிக்கொண் டிருக்கின்றன. அதினின்றும் பிரம்மதேவன் முதலிலும் மகாவிஷ்ணு அடுத்தபடியாகவும் சிவன் ஆகிய நான் அதற்

கடுத்தும் லோகோபகாரார்த்தமாகத் திரிமூர்த்திகள் எனும் சிறப்புப் பெயருடன் சிருஷ்டிக்கப்பட்டோம். அந்த ராஜ விருக்ஷமான விஸ்வப்பிரம்மத்தினின்று உண்டான முதல் கனிகள் நாங்களே.''

'' ஓ குருபரனே இன்னும் கேட்பாயாக! அந்த விருக்ஷமாகிய *விஸ்வேஸ்வரர் அண்டபுவனங்களில் நிறைந்திருக்கின்ற ஜீவான்மகோடிகளைப் பிரம்மன் சிருஷ்டிக்கவும், விஷ்ணுவானவர் இரக்ஷிக்கும்படிக்கும், ருத்திரன் சங்கரிக்கும்படிக்கும், மகேஸ்வரன் திரோபவிக்கும்படிக்கும் அநுக்கிரகித்தார். அதே விருக்ஷத்தினின்றும், நவபிரம்மாக்கள், ஸனகாதி முனிசிரேஷ்டர்கள், அஷ்டவசுக்கள், நவநாத சித்தர்கள், பதினொருகோடி ருத்திரர்கள், துவாதசாதித்தர்கள், தசவாயுக்கள், யக்ஷர்கள், வித்யாதரர்கள், கின்னரர்கள் ஆகியவர்களைச் சிருஷ்டித்து அவரவர்களுக்கேற்ற அதிகாரங்களைக் கொடுத்தருளினார். இந்திரன் முதலாகிய அஷ்டபாலகரைப் படைத்து அஷ்டதிக்குகளை ஆளச்செய்தார். இன்னும், அஷ்டவசுக்கள் முதலிய தேவர்கட்கு இந்திரனை அதிபதியாகவும், ஜலத்துக்கு வருணனை அதிபதியாகவும், தேவர், அசுரர், மனிதர் முதலிய பல ஜீவர்களுக்குச் சூரியனை அதிபனாகவும், நக்ஷத்திரமண்டலங்கட்கும் கிரகங்களுக்கும் சந்திரனை அதிபதியாகவும் செய்தருளினார் இன்னும், மிருக வர்க்கத்துக்கு, ஐராவதத்தை யானைகளுக்கு அரசாகவும், இதர மிருகங்களுக்கு சிங்கத்தை அதிபதியாகவும், மலைகளுக்கு இமவானை அதிபதியாகவும், பாம்புகளுக்கு வாசுகியைத் தலைமையாகவும், பறவைகளுக்குக் கருடனை அதிபதியாகவும் செய்தருளினார்.

*The tree of vision has been aptly described in the upanishads and in the gita as the eternal 'Asvattha', whose roots are in the sky and whose branches pervade the earth.

[*Page 73 Phases of Religion & Culture—By Sir. C. P. R.*]

"ஓ குமாரனே! மேலும் கேட்பாயாக. அந்த விஸ்வப் பிரம்மம் மாயா மயமானது. அதன் அளவு, விரிவு, பரிமாணம் ஆகியவை எவராலும் நிர்ணயிக்கக்கூடாதவை. இன்னும் கேட்பாயாக! அந்த அளவுகடந்த விருக்ஷத்தின் பிரதி கிளைகளிலும் ஐந்தைந்து கிளைகளுண்டாகி அக் கிளைகளின் விரிவால் 125 கிளைகள் அல்லது கவடுகளோடு அந்த ஜெகத் விஸ்வகர்மா என்னும் அந்தர விருக்ஷம் கோடி சூரியப் பிரகாசத்தையொத்த தேஜஸுடன் விளங்குகின்றது. சராசரங்களுக்குப் பிறப்பிடமும் இருப்பிடமுமாகிய இந்த ஜகமனைத்தும் அவ்விருக்ஷத்தின் பழங்களே. வேதங்களும் அதனை ஓதுவோரும் அவ்விருக்ஷத்தினின்றும் உற்பவித்தவர்களே" என்றிவ்வாறு விஸ்வகர்மப் பரத்துவத்தைத் தெள்ளத்தெளிய விளக்கிக் கூறினர்.

இனி புராண ஆதாரங்களிற் புகுவோம். வாசிஷ்ட புராணம், திரிதீய காண்டம்,

> "ஜ்ஞாந ப்ரகாச குணபூஷண ஏஷ பூஷா
> ஸர்வாதி காரண வியோமநு ஸூத்ர கர்த்தா
> யோக ப்ரபோத விவிதாகம சாஸ்த்ர சாரஸ்
> ஸாரஸ்வதோ பரசிவோ குரு விஸ்வ கர்மா:"

இதன் தாத்பர்யம்: பிரகாசம் பொருந்திய ஜோதிமயமான ஞானத்தையே பூஷணமாகக் கொண்டவரும் சமஸ்தத்துக்கும் காரணபூதராயும், இறைவராகியும் மனுக்களை ஆட்டிவைப்பவரும், யோகம் ஞானம் முதலிய பலவித ஆகம சாஸ்திரங்களை வெளியிட்டவருமான பரசிவனும் ஜெகத் குருவுமானவர் ஸ்ரீ சாட்சாத் விஸ்வகர்மாவாகும். விஸ்வகர்மாவின் பரத்துவத்தை மேலும் விளக்குவாம்.

சில்பம் - மஹாவிஸ்வகர்மீயம் - அத்தியாயம் 1-ல்,

> "விஸ்வகர்ம க்ரியாயஸ்ய க்ரியசேவா ஜகத்பதி:
> கர்ம விஸ்வஞ்ச யஸ்யேதி விஸ்வகர்மா ப்ரகீர்த்திதா:"

என்றும், இன்னும் மநுசூத்திரத்தில்,

" விஸ்வ ஸம்ரக்ஷணார்த்தாய விஸ்வகர்மா பவேதிதி. "

என்றும் கூறப்பட்டுள்ளது.

இவற்றின் தாத்பரியமாவது: சராசர முதலான ஸமஸ்த பிரபஞ்ச சிருஷ்டியாதி கர்மக்ருத்திய கர்த்தருத்வ முடையவர் யாரோ, அந்தப் பகவானுக்கே ஜகத்பதி யென்றும், விஸ்வகர்மா வென்றும் நாமதேயம் சொல்லப்படுகிறது. மேலும், விஸ்வம் ஆகிற பிரபஞ்சத்தை, கர்மா - நிர்மித்துப் பரிபாலிக்கிறவர். அன்றியும், இந்தப் பிரபஞ்ச பரிபாலனத்தின் பொருட்டு விஸ்வகர்மா சகளரூபமாக அவதரித்தா ரென்றும் கூறப்பட்டிருக்கிறது. மூலஸ்தம்பத்தில்,

" த்வயயாக்யாச நாமஞ்ச விஸ்வகர்ம க்ருதாமயோ :
கர்மக்ருக்ரியதே ஷ்ருசவா விஸ்வகர்மா ஜகத்குரு : "

இதன் பொருள் : தம்மைக்காட்டிலும் பரமானது வேறொன்று இல்லாதவராயும், ஆதியானவராயும், ஸர்வ லோகத்திலும் வியாபியுடையவராயும், பிரபஞ்ச உற்ஜீவித கர்மத்தைத் தமது தொழிலாக வைத்துக்கொண்டிருப்பவராயுமிருக்கிற விஸ்வகர்மாவைப் பிரம்மாவென்றும், ஜகத்குரு வென்றும் சொல்லப்படுவதாம்.

ஸ்ரீ விஸ்வகர்மாவுக்கு ஐந்து முகங்களுண்டு என்பதற்கு ஆதாரமாகப் பண்டு தோன்றிய சில தமிழ்ப் பிரபந்தங்களையும் நோக்குவோம். மாங்கைப்பள் 2-வது செய்யுள் :

" சீர்மேவும் புனமெல்லாந் திணம்பாவும் விசுவேசர்
ஏர்மேவும் ஐந்துமுகத் திற்பிறந்த கம்மியராள்
வார்மேவுங் கனகாந்த மதிலணிசேர் மாங்கையில்வாழ்
பேர்மேவு மூத்தபள்ளி பிரியமுற்று வந்தனளே. "

இன்னும் ஸ்ரீ பரசமயகோளரியார் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தில்,

" கருமுகங் கொண்டுகொண் டலையா மலைபட்ட
கலைமதி யெனத் துவண்டு
கால பாசத்திற் பிணிப்பட்டு மனமெலாங்
கன்றிநின் றலைப டாமல்
குருமுக மெனப்புவன மீடேற வானுருக்
கொண்டுமுக மொன்று கொண்டு
கோதிலாப் பரசமய கோளரி யெனப்பெயர்
குறித்தனையுன் வடிவ மெளிதோ
ஒருமுகம் புவனாதி யண்டம் படைக்குமற்
றொருமுக மிரட்சித் திடும்
ஒருமுகஞ் சங்கார மொருமுக மறைக்குமற்
றொருமுக மனுக்ர கிக்குந்
திருமுகமோ ரைந்தாக வருமாதி விஸ்வமே
சிறுதே ருருட்டி யருளே,
தினகரனு மிலகுபத மனவரத சிங்கமே
சிறுதே ருருட்டி யருளே."

இன்னும் தமிழ்ப்பெயரகராதியில் ஐந்து மஹா மந்திரங்களை விளக்குமிடத்து, 'அகோராய நம :', 'தற்புருடாய நம:', 'வாமதேவாய நம:', 'சத்தியோஜாதாய நம:', 'ஈசானாய நம :' எனக் கூறப்பட்டுள்ளது. எனவே, ஸ்ரீ விஸ்வகர்மாவின் ஐந்து முகங்களே உலகுக்கு ஐந்து மஹா மந்திரங்களாகத் தரப்பட்டுள்ளன வென்பது நன்கு விளங்கும். ஆகவே, சதாசிவமாகிய ஐம்முக மூர்த்தியே பரப்ரம்மத்தின் சகளவடிவ மென்றும், உலகப் பூஜ்ஜியதைக்கு உரியவரென்றும் வேதயிதிகாச புராணங்கள் கோஷியா நிற்கும்.

இனி விஸ்வகர்மாவின் சகள வடிவத்தைக் கீழே காட்டிய நாராயண யாஜ்ஞீகோபநிஷத் தைத்தீரிய சதுர்த்த ப்ரப்நம் ஆகிய கிருஷ்ண யஜுர் வேதம் ஸ்தோத்திரமாகத் துதிக்கின்றது.

“பஞ்சவக்த்ரம் ஜடாபாரம் தசபஞ்ச விலோசனம்
ஸத்யோஜாதானனம் ஶ்வேதம் வாமதேவந்து க்ருஷ்ணகம் ||
அகோரம் ரக்தவர்ணம் தத்புருஷம் ஹரிதப்ரபம்
ஈசானகம் ஶ்யாமவர்ணஞ்ச ஶரீரம் ஹேமவர்ணகம் ||
தசபாஹு ஸமாயுக்தம் கர்ணகுண்டல சோபிதம்
பீதாம்பரதரம் தேவம் நாகயக்ஞோப வீதினம் ||
ருத்ராக்ஷ மாலாபரணம் வ்யாக்ரசர் மோத்தரீயகம்
அக்ஷமாலாஞ்ச பத்மஞ்ச நாகசூல பினாகினம் ||
மேரும் வீணாஞ்ச பாணஞ்ச சங்கசக்ர ப்ரகீர்த்திதம்
கோடிஸூர்யப் ப்ரதிகாசம் சர்வஜீவதயாபரம். ||
தேவதேவ மஹாதேவம் விஶ்வப்ரஹ்ம ஜகத்குரும்.”

இதன் தாத்பரியம்: ஐந்து முகங்களும், சடா மகுடங்களும், பதினைந்து கண்களும் உடைய அவருடைய சத்தியோஜாதமென்றும் முகம் வெண்ணிறமானது. வாமதேவம் என்னும் முகம் கருநீலநிற முடையது. அகோர முகமானது சிவப்புநிற முடையது. தத்புருஷ முகம் மஞ்சள் நிறமுடையது. ஈசான முகம் பச்சைவர்ண முடையது. சரீரமானது பொன் நிறமானது. அவர் பத்து புஜங்கள் உடையவராய், பிரகாசிக்கும் குண்டலங்களைக் காதில் தரித்தவராய், பொன்னாலாகிய பீதாம்பரத்தை உத்தரீயமா யுடையவராய், நாகங்களாலாகிய யஜ்ஞோபவீதத்தை யுடையவராய், உருத்திராட்ச மாலையை ஆபரணமாகப் பூண்டவராய், புலித்தோல் ஆடையைத் தரித்தும், ஒரு கரத்தில் அக்ஷமாலையும் மற்றொரு கரத்தில் தாமரை மலரையும், ஒரு கரத்தில் நாகபாசத்தையும், மற்றொரு கரத்தில் சூலத்தையும், பின்னொருகரத்தில் பினாகம் என்ற வில்லையும், இன்னும் ஒரு கரத்தில் மேருவென்னும் வீணையையும், மற்றொரு கரத்தில் பாணத்தையும், மற்றுள் இரண்டு கரங்களில் சங்கும் சக்கரமும் தாங்கி, யாவரும் புகழும்படி தோன்றுபவரும், கோடி சூரியர்கள் ஒருங்கே

உதயமானதுபோல் பிரகாசிப்பவரும், எல்லா ஜீவர்களிடத்தும் காருண்யமுடையவரும், தேவர்கட்கும் மூவர்கட்கும் தேவனாகிய மகாதேவனும் விஸ்வகர்மப் பிரம்மம் என்னும் காரணப்பெயருடையவரும், ஜெகத்துக்குக் குருவாகவும், கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்னும் நான்கு திசைகளையும், ஆகாயத்தையும் நோக்கிய ஐந்து முகங்களையுடைய சர்வவியாபகருமாகிய ஸ்ரீ விஸ்வகர்மா என்னும் கடவுளை நான் துதிக்கின்றேன் என்பதாம்.

மேலே காட்டியவற்றால் ஸ்ரீ விஸ்வகர்மாவின் பரத்துவமும், சமஸ்த இலட்சணங்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளனவென்பது நனி விளங்கும்.

---

## 4. விஸ்வகர்ம ரிஷியாதியோர் உற்பவம்

முந்திய அத்தியாயத்தில் பிரம்மம் ஆகிய ஒரு ராஜ விருக்ஷம் வேர் மேலும் கிளைகள், இலைகள், கனிகள் ஆகியவை கீழுமாக அந்தரத்தில் நிற்பதாய் உவமித்துக் கூறப்பட்டுள்ளது. அந்த விருக்ஷமே விஸ்வகர்மப் பிரம்மம் என்றும், அதன் ஐந்து கிளைகளெனத்தகும் ஒவ்வோர் முகத்தினின்றும் 25 கிளைகளாகிய மகரிஷிகள் தோன்றினார்கள் என்றும், அவ்வாறு 25 வீதம் ஐந்து கிளைகளிலும் தோன்றிய மகரிஷிகளின் மொத்தத்தொகை 125 ஆகும் எனவும் கூறப்பட்டது. முதன்முதலாக உற்பவித்த 5 ரிஷிகளும் விஸ்வகர்ம மானஸ சிருஷ்டியால் சுயம்புவாய் தோன்றியவர்களாவர். அவர்கள் வழியே தோன்றிய இதர ரிஷிகள் அனைவரும் அவரவர் மனைவிகளின் வழியே வந்தவர்களென சாஸ்திரங்கள் இயம்பும். அச்சந்ததியார்களின் முழு விவரங்களையும் அடுத்து வரும் அத்தியாயத்தில் காண்க. இம்மூல ரிஷிகள் ஐவரின் சந்ததியாரின் விளக்கத்தை 1, 2 என்று இலக்கமிட்ட அட்டவணைகளில் காணலாம்.

மேலும், சிற்பம் காசிபத்தில்,

"தக்ஷஸர்வ குலஸ்ரேஷ்டோ நாநா வித்யாகுரு: ப்ரபு:"

என்பதால் தக்ஷாவென்று சொல்லப்படுகிற விஸ்வகர்மா குலஸ்ரேஷ்டர் நானா வித்தைகளுக்கும் குரு பிரபு என்றும், மூலஸ்தம்பத்தில்,

"விஸ்வாதி லோகாநாம் பாலயேய கச்சஸேஸ்ருஜ :
மநுமய துவஷ்ட்ரு தைவஞா - ஸில்பீநாம் விஸ்வகர்மண :
யதாபூர்வம் ததாநாமம் பிரம்மகர்ம த தாக்ரமம்
யதாகர்ம த தாரூபம் யதாபீஜந்த தாங்குரம்
யதாபிதா ததாபுத்ரம் லோகேத்வர்த்தத வாக்யயோ :"

என்பதனாலும், ஸ்காந்தம் நாகரகாண்ட சுலோகம்,

"தத்பிதாச மஹாநாம குமாரோ விஸ்வகர்மண :
பீஜவிர்க்ஷ ஸமாதிச்ச யதாபீஜம் ததாங்குரம்
ஆசார்யம் பிதுராசாரம் தத்புத்ரஸ்ய விதீயதே :"

என்பவைகளாலும் கீழே கண்டவாறு விளக்கப்பட்டுள்ளது.

ஸமஸ்த லோகங்களையும் பரிபாலிக்கிற விஸ்வகர்மாவின் புத்திரர்களான மநு, மய, துவஷ்ட, ஸில்பி, விஸ்வக்ஞ என்பவர்களுக்கு, பிதாவைப்போல் படைத்தல், காத்தல் ஆகிய தொழில்களும், பிரம்ம கர்மங்களுமுள்ளன. இது எப்படியெனில், எவ்விதையை வித்திட்டோமோ, அதே விருக்ஷம் உண்டாவது போலவும், பிதுர் ஆசாரத்தைப் புத்திரன் கைக்கொள்வது போலவும், பிதா எப்படியோ புத்திரன் அப்படியே என்னும் மொழிபோலவும் இருப்பதால் இவர்களும் இவர்கள் சந்ததியார்களும் பிதாவினுடைய சிருஷ்டித்தொழிலை நடாத்தியும், பிதா, பிரபிதா மகா ஆகியோரின் நாமதேயங்களை வகித்தும் பிரபஞ்சத்திற்கு வேண்டிய சிருஷ்டி கிருத்தியங்களைச் செய்தும் ரக்ஷித்தும் வருகிறார்கள்.

இந்தப்பிரகாரம் விஸ்வகர்ம சந்ததிகளாகத் துவஷ்டா, ஸில்பி, ஸ்தபதி, விஸ்வரூபர், வர்த்தகி, மநு, மய, தக்ஷர்கள்

உண்டானார்களென்றும், அவர்கள் பிரஜாபதிகளென்றும், ஆங்கீரஸ கோத்திரத்தவரென்றும், பிராம்மணரென்றும், பிராம்மிஷ்டரென்றும், குருவென்றும், பௌரோஹித்திய ரென்றும், தேவாச்சாரியரென்றும், மஹாமஹோபாத்தி யாயரென்றும், வேதபாரங்கதரென்றும், சகல வித்தை களும் தெரிந்தவரென்றும், பிரபுவென்றும், கியாதியுடை யவரென்றும், குலசிரேஷ்ட ரென்றும், அநேகமாயிரம் சிற்பிகளுக்குக் கர்த்தரென்றும், யக்ஞகர்த்தாவென்றும், ஜகத்குரு வென்றும், நமஸ்கரிக்கத் தகுந்தவ ரென்றும், தபஸ்வியென்றும், விஸ்வகர்மாவென்றும், உலகிற்கு முதல் வரென்றும் சொல்லியிருப்பதோடு, சகல புவனங்களையும் சிருஷ்டித்தார்களென்றும், ஆயுதம், பாத்திரம், விமானம், பூஷணம், இரதம், ஆலயம், பட்டணம் முதலியவைகளை உண்டாக்கினார்க ளென்றும் சொல்லப்பட் டிருக்கிறது. மேலும், "கிருஷ்ணயஜுர் ப்ராம்மணே - ப்ரதமாஷ்டகே சதுர்த்தாத்யாயே சதுர்த்தானுவாக:" என்னுமிடத்துள்ள வேதவாக்கியத்தாலும், ஸ்காந்தம், நாகரகாண்டம், "ஜாதம் பஞ்சப்ரம்ம குலம், ஸந்ததௌ விஸ்கர்மண: நித்யகர்மாஷ் டகயுதம் - கர்ம சோடச நிஷ்டிதம். மனுமயா ஸ்ததா - த்வஷ்டா சில்பி விஷ்வக்ஞயித்யபி விஸ்வகர்ம சுதாஹ்யேத- பஞ்சஸ்ருட்டி ப்ரவர்த்தக:" என்பதாலும் விஸ்வகர்மா வின் புத்திரராக ஜனித்த மநு, மயா, துவஷ்டா, சில்பி, விஸ்வக்ஞய என்னும் ஐவர்களுக்கும், அவர்கள் சந்ததியார் களுக்கும் நித்யகர்மானுஷ்டான சோடச கர்மங்களும், பஞ்சகிர்த்தியத் தொழில்களும் உண்டெனப் பெறப்படுவ தாம். எனவே, ஜீவசிருஷ்டி, ஜகத்சிருஷ்டி ஆகிய இரண்டை யும் ஒருங்கே கொண்டவர்கள் யாரோ அவர்களே பிரம்ம சந்ததியார்களெனவும், அவர்களே போற்றத்தகும் பிராம் மணர்களெனவும் சந்தேகமற சங்கு நிர்த்தாரணம் செய்யப் பட்டது.

# மூலரிஷிகளால் உண்டான சந்ததிகள் விவரம்

| ரெ | 1. சத்யோஜாதமுகம் சானக மகரிஷி கிழக்கு திசை | 2. வாமதேவமுகம் சநாதன மகரிஷி தெற்கு திசை | 3. அகோரமுகம் அபுவனஸ மகரிஷி மேற்கு திசை | 4. தத்புருஷமுகம் பிரத்னஸ மகரிஷி வடக்கு திசை | 5. ஈஸானமுகம் சுபர்னஸ மகரிஷி மேல்நோக்கு திசை | ஆக ரிஷி |
|---|---|---|---|---|---|---|
| 1 | மநுவிஸ்வகர்மரிஷி | பிரதிநக்ஷ ரிஷி | விப்வாநாரரிஷி | கௌசல ரிஷி | நூரசேன ரிஷி | |
| | வசுஜ ,, | சக்ஷுஷ ,, | போதாயன ,, | விப்வபத்ர ,, | தேஜோதர்ம ,, | |
| | பாஸ்வத ,, | விப்வதக்ஷ ,, | ஜாதரூப ,, | ஞானபத்ர ,, | ஸுதர்சன ,, | |
| | மது ,, | விப்வத ,, | சித்ரசேன ,, | சேவபத்ர ,, | உபகோப ,, | |
| | சித்ரவசு ,, | ஸுமேத ,, | ஜயசேன ,, | வியஞ்ச ,, | யஜ்ஞ ,, | |
| | காபன ,, | பர்ண ,, | விகனஸ ,, | பிரபோதமனு ,, | ஸாந்த ,, | 20 |
| 5 | விஸ்வாத்மகரிஷி | ஸுநந்தன ரிஷி | ஸ்ருக ரிஷி | ஸநாபர ரிஷி | சாங்க்யான ரிஷி | |
| | சுபக்ஷ ,, | ரைவதமனு ,, | பிரபோன்னத ,, | சக்வா ,, | உபகல்ப ,, | |
| | சுதக்ஷ ,, | பிரவர ,, | தேவவர ,, | வேதபால ,, | தேவசேன ,, | |
| | பிரபோத ,, | ஜயதன்வ ,, | விநய ,, | ராஜசர்ம ,, | ஆதித்ய ,, | |
| | வசுலோசன ,, | விக்யா ,, | பிரம்மதீக்ஷித ,, | போக்தவ்யமனு ,, | நிகம ,, | |
| | சித்ரசர்ம ,, | பரிபங்க ,, | ஹரிசர்ம ,, | ப்ராஜ்ஞமதி ,, | உபயஜ்ஞ ,, | 25 |

மேலே கண்ட பதகத்தின்படி, மூலரிஷி 1-க்கு 25 ரிஷிகள் வீதம் 5 ரிஷிகளுக்கும் கூடிய ரிஷிகளின் தொகை 125 என்று அறியலாம்.

மேற்குறித்த இரு அட்டவணைகளில் கண்டவாறு சானகாதி மகரிஷிகளின் மூலம் உற்பவித்த 125 கோத்திர ரிஷிகளைக் குறித்து விவரித்துங் கூறினோம். இனி அவ் விஸ்வகர்மாவின் பிரபாவத்தை அதற்கு, நவப் பிரம்மாக்களின் உற்பத்தி முதலியவைகளையும் பெருக்கிக் கூறுவோம்.

யஜுர்வேதம் தைத்திரீய காண்டம் பிரதம அநுவாக மந்திரங்களில் கூறியுள்ளவாறு இவ்வுலகம் ஆதியில் ஜலமயமாகவிருந்தது. அதன்மீது சிருஷ்டிகர்த்தா வாயுரூபத்தில் அசைந்தாடிக் கொண்டிருந்தார். பிரபஞ்ச சிற்பாச்சாரியராகிய விஸ்வகர்மா இந்த பூமியை உருப்படுத்தினார். அதுவே பின்னர் வெளிப்படையான பிருதிவியாயிற்று. பின் அவர் வராகரூபமாகி பூமியைத் தன்னுடைய முகத்தில் நீண்டு முளைத்திருந்த கொம்புகள் அல்லது தந்தங்களினிடையே தாங்கிக்கொண்டிருந்தார். அதனால் பூகோளத்திற்குப் பிருதிவியென்று பெயர் உண்டாயிற்று. மேலும் சிருஷ்டிகர்த்தா பூமியைக் குறித்து ஆழ்ந்து யோசித்து, அதற்குக் காப்பாளர்களாகப் பல தேவர்களையும், முனிபுங்கவர்களையும் சிருஷ்டித்தார். அவர்கள் யாகாதி கிருத்தியங்களாலும், தவத்தாலும் பலகோடி ஜீவர்களைச் சிருஷ்டித்தனர் என்று வேதங்கள் கோஷிக்கின்றன. இதனால் பிரபஞ்சத்தையும் பஞ்சபிரம்மாக்களையும், நவப்பிரம்மாக்களையும், மற்றைய தேவர்களையும், முனிவர்களையும் சிருஷ்டித்தவர் விஸ்வகர்மாவே என்றும், அவரே ஜெகத் கர்த்தாவென்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

அந்த விஸ்வகர்மா தமது ஐந்து முகங்களின் வழியே வந்த சானகாதி ரிஷிவர்க்கங்களைக் கொண்டும், மானஸீகமாகத் தோன்றிய நவப்பிரம்மாக்களின் சந்ததியார்களைக் கொண்டும் தமது பிரதம சிருஷ்டியையொத்து பூலோகத்திலும், தேவலோகத்திலும் முறையே நடாத்துவதற்காகக் கர்த்தர்களைச் சிருஷ்டி செய்தாரென்பது வேத சம்மதமான கூற்றும்.

பிரதம பிரம்ம ரிஷிகளான சானகர், சனாதனர், அபுவனசர், பிரத்தினசர், சுபர்னசர் என்னும் ஐவர்களும், மநுப் பிரம்மா, மயப் பிரம்மா, துவஷ்டப் பிரம்மா, சில்பிப் பிரம்மா, விஸ்வக்ஞ பிரம்மா என்ற மறுபெயர் களைக் கொண்டவர்களானார்கள். அவர்கட்கு முறையே இரும்பு, மரம், உலோகம், கல், பொன் முதலிய ஐந்து பிரதமத் தொழில்களும் லோகோபகாரார்த்தம் வகுத்துக் கொடுக்கப்பட்டன. மேற்குறித்த ஐவர்களும் அவர்கள் வழிவந்த 125 ரிஷிகளும் சிருஷ்டித் தொழிலை உரிமையாகக்கொண்ட அகாதிபிரம்மத்தின் வழியே தோன் றித் தமது தந்தையின் சிருஷ்டித் தொழிலை வாழையடி வாழையெனக் கைக்கொண்டமையினால் அவர்கள் பிரம்ம ரிஷிகளானார்கள். அவர்களின் நேரான சந்ததியார் உலக சிருஷ்டி காலந்தொட்டு இன்றுவரை பூலோகத்தில் சிருஷ்டித் தொழிலை லோகோபகாரார்த்தமாகவும், ஜீவனோபாய மாகவும் கைக்கொண்டு விஸ்வப்பிரம்ம சந்ததியார் அல்லது விஸ்வப்பிராம்மணர்களெனத் திகழ்கின்றனர்.

விஸ்வகர்மாவின் நேரான சந்ததியாராகிய இன்னோர் யாண்டும் விஸ்வகர்மப்பிராமணர்கள் என வேத சம்மதமாக அழைக்கப்படுவர். ஆயினும் அப்பெயரே தற்போது குறுக்கல் விகாரம் பெற்று விஸ்வப் பிராமணர்கள் என்று இன்றுள்ள அவர் சந்ததியார் வழங்கப்பெற்று வரலாயினர். இதுவே இன்றுள்ள ஐந்தொழிலை பூவுலகில் தமக்கே உரிமையாகக்கொண்டு நடாத்தும் விஸ்வப் பிராமணர் களின் பூர்வ சரித்திரமாம்.

இனி மரீசியாதி நவப்பிரம்மாக்களின் விருத்தாந்தத்தை உன்னுவோம். நவப்பிரம்மாக்களில் ஆங்கிரஸ கஸ்ய பாதியர்களை விடுத்து இதர மரீசி, அத்ரி, புலஸ்திய, புலக, பௌலஸ்ய, தக்ஷ, க்ரது முதலியோரைக் குறித்து பொதுவாக விசாரிக்குமிடத்து, தேவலோக சம்ரக்ஷனார்த் தம் ஆதிவிஸ்வகர்மாவானவர் யானைவிகத்தினால் அல்லது

ஞானசக்தியினும் சிருஷ்டி செய்த மேற்குறித்த நவப் பிரம்மாக்களில் முதல்வரான ஆங்கிரஸர் வழிவந்த தேவ சில்பி விஸ்வகர்மரிஷி பௌவன விஸ்வகர்மரிஷி மனு விஸ்வகர்மரிஷி அசுரர் சில்பியாகிய மயன் ஆகியோரைக் குறித்தும், பிரளய காலத்திற்கு முன் தோன்றிய ஆங்கிரஸ காச்யபாதி ரிஷிகளின் வரலாற்றையும் விசாரித்தறிதல் ஏற்புடைத்தாம்.

இனி தேவலோகம் எனப்படும் மேலுலகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜனர்லோகம், தபோ லோகம், மஹா லோகம், சத்தியலோகம் என குறிக்கப்பெற்றுள்ளது. பூலோகம் என்னும் தனிப் பெயரால் அழைக்கப்படும் இவ்வுலகின்கண் உள்ள வேதங்களையும், புராண இதிகாசங்களையும் நோக்குழி பூலோக விஸ்வகர்ம ரிஷியாதி யோருக்கும் தேவலோக விஸ்வகர்ம ரிஷிகளுக்கும் ஒவ்வொரு காலத்தில் நெருங்கிய சம்பந்த முண்டென்றும், பூலோக சிருஷ்டித் தொழில் நடைப்பட்ட காலத்திலும், தேவலோக மானவிக சிருஷ்டிகளுக்குப் பூலோகத்தில் அவசியம் ஏற்பட்ட காலத்தும் மேற்குறித்த இரு விஸ்வகர்ம ரிஷிகளும் பூலோகத்திற்கு உதவினர் என்பது சாஸ்திரப் பிரமாணம். இதுபோலவே, அசுரர்களின் மய விஸ்வகர்மா பூலோகத்திற்குப் பெரிதும் உதவியிருப்பதாக புராணங்கள் கூறுகின்றன. இல்லையேல், பூலோக விஸ்வகர்மாக்களும், பிரஜைகளும் அவர்களைக் குறித்தும், அவர்கள் சிருஷ்டித் திறனைக் குறித்தும் இதிகாச புராணங்களில் சிலாக்கியமாக கூறியிருக்கமாட்டார்களென்பது திண்ணம்.

சாதாரண உலக வழக்கில் இருபிற நாட்டார்கள் அல்லது வர்க்கத்தினர்கள் அந்நியோன்னிய சம்பந்த முடையவராகில், அவர்களுள் இரத்தக் கலப்பு ஏற்படுவது இயல்பு. அதுபோலவே தேவர்கள் அசுரர்கள் வழி முறையில் தோன்றியவர்கட்கு ஒருகாலத்தில் தனித்தனியே அந்நியோன்னிய சம்பந்தம் ஏற்பட்டிருக்கலாம். தேவர்

வழியே தொடர்புடையோர் அனைவரும் ஒருமித்தும், அசுர வழியே கூட்டுறவு பெற்றோர் வேறாகவும் பிரிந்திருத்தல் வேண்டுமன்றோ? இவ்விரு வர்க்கத்தினரும் ஆதி விஸ்வ கர்மாவாகிய மூல விருக்ஷத்திலின்றும் உற்பவித்த கனிகள் போலாவர். ஒரே விருக்ஷத்தின் கனிகளில் சில தீங்கனி யெனக் கொள்ளப்பட்டும் சில கனிகள் கைப்பெனத் தள் ளப்படுவதும் போன்று, இவர்கள்மாட்டு சிறிது உயர்வு தாழ்வும், பேதாபேதங்களும் இருத்தல் இயல்பாம். அவற்றை வருமிடங்களில் காண்க.

மேலே கூறியபடி ஆங்கீரஸ கஸ்யபாதி ரிஷி வர்க்கங் களின் வரலாற்றை வேதபூர்வமாக ஆராய்வோம்.

ருக்வேத சுருதி :

" விஸ்வகர்மா மனஸா: விஸ்வம் கரோதி
ததாதி ப்ராஹ்மணஸ் ஸுபர்ணசருஷி: ஜநுதி ப்ராஹ்மண:
கஸ்யபா: பரப்ரஹ்ம மநு ப்ரஹ்மணே,
மரீச்யத்ரி, ஆங்கீரஸ, புலஸ்த்ய புலஹ,
பௌலஸ்ய, கஸ்யப, தக்ஷக, குக்குரு :
நவ ப்ராஹ்மணேஹே விஸ்வ ப்ராஹ்மண :
ப்ராஹ்மண ஸ்தக்ராஜந்தி, ப்ராஹ்மா விஷ்ணு மஹேஸ்வரா:
சூருணும் குரு : விஸ்வகர்மா ஜகத்குரு :
ஸபிதா ப்ரஜாநும் ஸ்ருஷ்ட்யா புவநுநாம்,
அஷ்டதிக் பாலகான் மனஸா :
அஸ்வினி தேவதா மனஸா :
ஏகாதச ருத்ரான் மநஸா :
விராட் விஸ்வமயம் காயத்ரீ,
ஸமய இத்யாதி தேவதா ஜகத் "

என்ற சுருதி வாக்கியத்தின்படி விஸ்வகர்மா வென்கிற விராட் புருஷன் மானஸிகத்தால் உலகையும், அவ்வாறே ப்ராஹ்மணர்களாகிய ஸுபர்னஸ ரிஷியை இறுதியாகக் கொண்ட பஞ்ச பிரம்மாக்களையும், மற்றும் மன்பதைகளுக்

குத் தலைவரான கஸ்யபர் முதலான நவப் பிரம்ம ரிஷிகளை யும், அதாவது மரீசி, அத்ரி, ஆங்கிரசர், புலஸ்தியர், புலஹர், பௌலஸ்யர், கஸ்யபர், க்ரதுர், தக்குரு ஆகிய விஸ்வப் பிராம்மணர்கள் 9 பேர்களையும் சிருஷ்டித்ததோடு பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் முதலானவர்களையும் தோற்றுவித்து அவர்களுக்குத் தலைவராகவும் குருவாகவும் இருப்பதுடன் மற்றுமுள்ள பிரஜைகளையும், எல்லா புவனங்களையும் பதினான்கு மனுக்களையும் தமது ஞானமுக தியானத்தால் சிருஷ்டித்ததுடன் காயத்ரி முதலான பெண் தேவதைகளை யும் தமது மானஸிகத்தால் சிருஷ்டித்ததுமன்றி அஷ்ட திக்குப் பாலகர்களையும், அஸ்வினி தேவர்களையும், பதி னொன்று ருத்திரர்களையும் மானஸிகமாகவே சிருஷ்டித்தார்.

மேற்குறித்த நவப்பிரம்மாக்களின் வழியே தோன்றிய வர்கள் பின்வருமாறு: "விஸ்வகர்மா மனஸா:" என்ற ருக்வேத மந்திரத்தில் கூறியுள்ள நவப் பிரம்மாக்களாலும் இந்திராதி முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண் ணாயிரம் ரிஷீஸ்வரர்களும், இன்னும் அத் தேவஜாதியினரின் பிரிவுகளாயுள்ள அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிருதர், கிம்புருடர், கந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர் ஆகாய வாசிகள், போகபூமியர் ஆக பதினென் கணங்களா யுள்ளவர்களும் உண்டாக்கப்பட்டனர். இதன் விரிவு சண் டைக்கு மிகையாம். எனினும், சுருக்கிக் கூறுமிடத்து இவ் வுலகில், நமது கண்முன், ஆகாயவெளியில் மறைந்துநின்று, மந்திர ஏவலால் பலப்பல அற்புதக் காரியங்களை நிகழ்த்தும் பட்டணி அல்லது குட்டிச்சாத்தான் ஆகிய அசரீர சிறு தேவதைகளே இத்தகைய அமானுஷிகச் சிருஷ்டிகள் உண் டென்பதற்குப் போதிய சான்றாம்.

## 5. விஸ்வகர்மப் பிராம்மண குலோற்பவம்

முன் அத்தியாயங்களில், விஸ்வகர்மாவின் பஞ்ச முகத்தில் தோன்றிய பிரம்ம ரிஷிகளைக் குறித்தும், அவர்கள் வழிவந்த 125 ரிஷிகளையும் விரிவஞ்சாது கூறப்பட்டுள்ளது. வாழையடி வாழையென அவர்கள் வழிவந்தவர்களும் இன்றுள்ள அவர்களுடைய சந்ததியார்களும் விஸ்வகர்மப் பிராமணர்களெனப் பெயர்கொண்டு பூலோகத்திற்கான சமஸ்த சிருஷ்டித் தொழில்களை, இரும்பு, தாரு, உலோகம், கல், பொன் ஆகிய மூலப் பொருள்களைக்கொண்டு நடாத்தி உலக தர்மத்தை நிலைநாட்டி வருகின்றார்களென்பது உலகப் பிரசித்தம்.

இனி ஆங்கீரஸர், காசியபர் வழித் தோன்றிய **தேவசிற்பி விஸ்வகர்மா, துவஷ்டசிற்பி விஸ்வகர்மா, சுதன்வா விஸ்வகர்மா, பௌவன விஸ்வகர்மா, மனு விஸ்வகர்மா, மய விஸ்வகர்மா** ஆகியோரைக் குறித்தும் இங்கு பிரஸ்தாபித்தல் முறையாம். இவர்களில் ஆதி விஸ்வகர்மா, தேவலோகத்திற்கும் பூலோகத்திற்கும் பொதுவான தந்தையாவார். அவர் இவ்விரு உலக சிருஷ்டிகளின் மேற்பார்வையாளர் என்பது பொருத்தமாகலாம். கடைசியாகிய மய விஸ்வகர்மா அசுரலோக சிற்பியானார். ஆயினும் அவர் அசுரவர்க்கத்தைச் சேர்ந்தவரல்லர். அவர்களுடன் தொடர்பு கொண்டவரும் அல்லர். பூலோக சிருஷ்டிகள் தடைப்பட்ட காலத்திலும், மானஸீக சிருஷ்டிகள் பூலோகத்திற்குத் தேவையுண்டான காலத்தும் ஆதிவிஸ்வகர்மாவின் ஆக்ஞைக் குட்பட்டு மற்றைய அறுவரும் தங்கள் தங்கள் சிருஷ்டி கிருத்தியங்களை நடாத்தி வந்தனரென வேதங்கள் பிரதிபாதிக்கின்றன. மற்றுமொன்று இங்குக் குறித்துக்கொள்ளத் தக்கதாம். சுதன்வா விஸ்வகர்மா என்பார் ஆங்கீரஸ ரிஷியின் புத்திரர். மனு விஸ்வகர்மா சுவாயம்பு மனு வழி வந்தவர். மனு, மய, துவஷ்ட,

சிற்பி, விஸ்வஞ்ஞ என்ற தேவசிற்பிகளுக்கு நேரான சந்ததி யுண்டென்பதை 3-வது அத்தியாயத்திலுள்ள வம்சாவளி அட்டவணைகள் நன்கு விளக்கும். ஆயினும், பின்னர்த் தோன்றிய மயன் எனும் பெயர்கொண்ட சிற்பி கணக்கற்ற அசுரர்களுக்குத் தமது தொழிலைத் தமது உதவிக்காகப் போதித்து அவர்கள்வழியே ஒரு தனி சந்ததியாரை சந்தேகமற உண்டாக்கியுள்ளார். எனவே, தொழில் முறையால் தெய்வசிற்பி, அசுர சிற்பியாகிய இருவர்க்கத்தினரிடையே தொழில் ஒற்றுமையும் பிறப்பின்வழியே பெரும் வேற்றுமையும் தோன்றி இன்றும் மறையாது உள்ளனவாம்.

எனவே, முதலில் இம் மயனைக் குறித்து விசாரித்தறிந்த பின் தேவ சிற்பிகளாகிய மற்றைய ஐவர்களைத் தனித் தனியே எடுத்துப் பேசுவோம்.

தமிழ்ப் பெயரகராதி கூறுவதுபோல், "மயன் ஒரு தெய்வீக சக்தி பெற்ற தச்சன், கின்னரன், தருகன், விஜைஞன். காசிப முனிவருக்குத் திதி வயிற்றிற் பிறந்த புத்திரன். அசுரர்க்குத் தச்சன்; சிற்ப சாஸ்திரம் செய்தவன் இவனே; மாளிகைகளும், அரண்மனைகளும் சமைப்பதில் வெகு சமர்த்தன். இதுவேயுமன்றி நினைத்தமாத்திரத்தில் நிருமிக்கும் ஆற்றலுமுடையவன். இவனுக்குப் பின் மற்றொரு காலத்தில் தோன்றிய மயன் என்பவனுக்கு மாயாவி, துந்துபி என்றிரண்டு புதல்வர்களும், மண்டோதரி யென்னொரு புதல்வியும் உண்டு. இராவணன் இம் மயனுக்கு மருமகன். இவனுக்குப் பின் பல கற்பங்களிலும் தோன்றியவர்களும் மயன் என்றே அழைக்கப்பட்டனர் என்பதும். அர்ஜுனன் மயனுயிரைக் காத்தானென்றும் அந்த நன்றியின் பொருட்டு மயன் ஓர் அலங்கார மண்டபம் செய்து பாண்டவருக்குத் தந்தானென்றும் வரும் பாரதக் கதையால் அறியப்படும். ஆதிமய விஸ்வகர்மா தொழில்வழியே உண்டுபண்ணிய பிந்திய பல மயன்கள் இராமாயண காலத்திலும், பாரத காலத்திலும் இருந்தனரென்பதும்

தமது குருவாகிய ஆதிமயனை யொத்து மானஸீக சிருஷ்டியி லும் வல்லுநரா யிருந்தாரென்பதும் விகசிதமாகின்றது. இந்த மய வம்ஸத்தார், தெய்வக் கம்மியராகிய துவஷ்டா எனப்படும் விஸ்வகர்ம வம்ஸத்தினருக்கு அஞ்சி, ரோமா புரியை யடைந்து, அசுரக்கம்மிய சந்ததியார்களை அபி விருத்தி செய்து, அவர்களுக்குப் படைக்கலங்களும், ரதங் களும், மாடமாளிகைகளும் ஏனைய பலவகைக் காருக கம்மி யங்களும் பயிற்றுவித்து விளங்குவராயினர். ரோமாபுரி கடலாற் கொள்ளப்பட்டு அழிந்தபோது அவ்வம்ஸத்தாரில் பலர் அப்பிரளயத்துக்குத் தப்பி, மீண்டும் ஆரிய நாட்டை யடைந்தனர். அவர்கள் ஒரு சிறு தொகையினரே ஆவர். துவஷ்டாவின் வர்க்கத்தினர் அன்றும் பெருக்கமாகவே யிருந்தனர். இவர்கள் இருவரால் நிருமிக்கப்பட்ட ஆலய சிற்பமானங்கள் ஆகமத்தில் ஒன்றும், மயன் விதியில் வேறொன்றுமாக இக்காலத்தும் மாறுபாடுடையனவாம்.

இனி எஞ்சிய விஸ்வகர்மாக்களைக் குறித்துப் பேசு வோம். முதல்வரான ஆதிவிஸ்வகர்மா தேவலோகத் திற்கும் பூலோகத்திற்கும் பொதுவான சிருஷ்டிகர்த்தர் என்று முன்பே கூறப்பட்டுள்ளது. பிற்காலத்தில் இரா வணன் ராஜதானியாகிய லங்காபுரியை தென்சமுத்திரத் திலே திரிகூட பர்வத சிகரத்திலே இந்த ஆதிவிஸ்வகர்மா வின் ஆக்ஞைப்படி தேவசிற்பி விஸ்வகர்மா அதைச் சேர்ந்த நாடு நகரங்களையும் உண்டாக்கினர். இந்நகரம் முதலில் மால்யவந்தனுக்கு ராஜதானியாகி பிறகு குபேரனுக்கு ராஜதானியாகி, அதன் பிறகு இராவணனால் போரில் அபகரிக்கப்பட்டது. இப்பட்டணத்திற்கு அந்த விஸ்வ கர்மா ஏழு மதில்களை நிருமித்தார். இதனைச் சேர்ந்த நாடுகளை எழுநூறு காதம் விஸ்தாரமுடையதாகச் செய் தார். இலங்கைநகர், மேகலா நகரங்கள் நான்கனுள் ஒன்றென சூரிய சித்தாந்தத்தில் சொல்லப்பட்டுள்ளது. இப்போதுள்ள இலங்கைநகரம் கடலாற் கொள்ளப்பட்ட

மேகலா ரேகையிலிருந்த பூர்வ இலங்கையின் எஞ்சிய சிறு பகுதியாகும்.

இனி அந்த தேவசிற்பி விஸ்வகர்மாவின் உற்பத்தியைக் குறித்து விசாரிப்போம்.

விஷ்ணு புராணம் - ப்ரதமாம்சம் - 15-ம் அத்தியாயம் கூறுவதாவது :

" ப்ருஹஸ்பதேச ப்ரபகினி, வாஸ்த்ரீ ப்ருஹ்மசாரிணீ
யோகஸித்தா ஜகத்க்த்ஸ்நா, மஸக்தா விசரத்யுத ||
ப்ரபாஸஸ்யது ஸாபார்யா-வஸூநாமஷ்ட்டமஸ்ஸ :
விப்வகர்மா மஹாபாகஸ்-தஸ்யாம் ஜஜ்ஞேப்ராஜாபதி : ||
கர்த்தசில்பீ ஸஹஸ்ராணும்-த்ரிதஸாநுஞ் சவர்த்தகீ
பூஷணுநுஞ்சஸர்வேஷாம்-கர்த்தசில்பவதாம்வர : ||
யஸ்ஸர்வேஷாம் விமாநுனி-தேவாதீநுஞ்சகார :
மனுஷ்யாஸ்சோப ஜீவந்தியஸ்யசில்பம் மஹாத்மந : ||
தஸ்யபுத்ராஸ்து சத்வார-ஸ்தேஷாம் நாமானிமேஸ்ருணு
அஜைகபாத ஹிர்புத்ந ஸ்த்வஷ்டா ருத்ரஸ்ச்சபுத்திமான்||
த்வஷ்ட்ருஸ் சாத்மஜ ஸ்ரீமான் விப்வரூபோமஹாதபா :" ||

மேற்குறித்த சுலோகங்களின் தாத்பரியம் :

ஆங்கிரஸ மகரிஷியின் புத்திரனும், தேவகுருவுமாகிய ப்ரஹஸ்பதியின் கூடப் பிறந்தவளுமான யோகஸித்தி யென்னும் பெண் பிரம்மசாரிணியாயும் வாக்கு வல்லமை யுடையவளுமாய் வேதவாதம் செய்துகொண்டு லோக மெங்கணும் சஞ்சரித்துப் பின் எட்டாம் வசுவாகிய பிர பாசன் என்பவனை மணந்தாள். அவனிடத்தில், பரிசுத்த மான மனதுடையவனும், ஆயிரம் ஆயிரம் சிற்பர்களுக்குக் கர்த்தாவும், தேவர்களுக்குச் சிற்பியும், சமஸ்த பூஷணங் களைச் செய்பவனும், சிற்ப சிரேஷ்டனுமாகிய விப்வகர்மா வென்னும் பிரஜாபதி பிறந்தார். அந்த மகான் சமஸ்த தேவர்களுக்கும் ஆகாய விமானங்களைச் செய்துகொடுத்

தாரோ, எந்த மகாத்மாவினுடைய சிற்ப மகிமையினால் மனிதர்கள் உஜ்ஜீவிக்கின்றார்களோ அவரே தேவசில்பி விஸ்வகர்மாவாக விளங்கினார்.

அந்த யோகஸித்திக்கு மேலும் அஜைகபாத், அஹிர் புத்னன், துவஷ்டா, ருத்திரன் எனும் நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் துவஷ்டாவுக்கு ஸ்ரீமந்த புத்திரனும் மகாதபசியுமாகிய விஸ்வரூபன் உதித்தான். இதனால் தேவலோக விஸ்வகர்மாக்களில் முதன்மை பெற்ற தேவசில்பி விஸ்வகர்மாவின் உற்பவமும், அவ்விஸ்வகர்மா வின் கனிஷ்டரே துவஷ்ட விஸ்வகர்மாவென்றும் நிச்சயிக் கப்பட்டுள்ளது. இனி துவஷ்ட விஸ்வகர்மாவின் உற்பத்தி பிரபாவத்தைக் கூறுதும். துவஷ்ட விஸ்வகர்மா மேலே கூறிய தேவசில்பி விஸ்வகர்மாவின் கனிஷ்ட சகோதரர்கள் நால்வரில் மூன்றுமவன் என்று மேற்கண்ட சுலோகம் விளம்புகின்றது. அந்த மஹானுபாவராகிய துவஷ்டா வேகர்ப்பாதான மந்திரத்தின் அதிதேவதையாவார். மேலும் இத்துவஷ்டா, ஸ்ரீ விஸ்வரூபனை தன்னைப்போல் தேவப் புரோகிதன் அல்லது ஆச்சாரியனாக இருக்கச்செய்தவர். வேதங்கள் பிரதிபாதிக்கிற கீர்த்தி வாய்ந்த இந்த துவஷ்ட விஸ்வகர்மா கருப்பத்திலுள்ள பிண்டங்களை அவ்வவ் உருவ மாக சிருஷ்டித்து கருவறையில் காக்கும் ஆற்றல் பெற்ற வர் என்று வேதங்கள் கூறுகின்றன. அல்லாமலும் பிரஜைகளின் அபிவிருத்திக்கும், புத்ரபௌத்திராதிகளைப் பெருக்குவதற்கும் துவஷ்டப் பிரஜாபதியே காரணகர்த்த ராவாரென, தைத்ரீய சம்ஹிதை 2 வது காண்டம் 5 வது பிரச்னம் 1-ம் அநுவாகத்தில்,

> " விஷ்ணுர்யோனிம் கல்பயது த்வஷ்ட்டா ரூபாணி பிம்சது
> ஆஸிஞ்சது ப்ரஜாபதிர்-தாதாகர்ப்பம் ததாதுதே " ||

இதன் தாத்பர்யம் : ஓ மனைவியே! உன்னை கர்ப்பா தானம் செய்வதற்கு விஷ்ணு என்னும் தேவன் உனது

மர்மஸ்தானத்தை தகுதியுள்ளதாகச் செய்யட்டும். பிரஜா
பதி என்ற தேவன் என்னுடைய சரீரத்திற்குள் பிர
வேசித்து விஷ்ணுவின் மானஸிகத்தினால் கர்ப்பாதானத்
துக்குத் தகுதிபெற்ற யோனியில் சுக்லத்தைவிடச் செய்
யட்டும். அவ்வாறு விடப்பட்ட ரேதஸ்ஸை பிரம்ம
தேவன் கர்ப்பரூபமாக்கட்டும். அந்த பிண்டத்திற்கு
சிரம், கை, கால் முதலிய பகுதற்ற அவயவங்களை துவஷ்டா
என்ற தேவன் உண்டாக்கட்டும் என்பதாம்.

மேலே விவரித்துக் கூறிய மகா மந்திரத்தால் துவஷ்
டாவே கர்ப்பாதானத்துக்கும், சித்திரை யென்னும் நட்சத்
திரத்துக்கும் அதிதேவதை யென்பதும், அவரன்றி எப்
பிண்டமும் உருக்கொள்ளமுடியாதென்பதும் வெள்ளிடை
மலையாம். மூன்றாவதாகிய சுதன்வா விஸ்வகர்மாவின்
விருத்தாந்தத்தை விசாரிப்போம்.

மகாபாரதம் அநுசாஸன பர்வம் 83-வது அத்தியாயம்.

" அஷ்டௌ சாங்கிரஸ: புத்ரா: ஆக்னேயாஸ்தே உதாஹ்ருதா:
ப்ருஹஸ்பதிருதத்யஸ்ச-பயஸ்யஸ் சாந்திரேவச ||
கோரோவிரூபஸ் ஸம்வர்த்தஸ் ஸுதன்வாசாஷ்டமஸ்ம்ருத: "

இதன் தாத்பர்யம்:

ஆங்கிரஸ ப்ரம்மரிஷிக்கு எட்டுப் பேர் புத்திரர்கள்,
அவர்கள் முறையே பிரகஸ்பதி, உதத்தியன், பயஸ்யன்,
சாந்தி, கோரன், விரூபன், ஸம்வர்த்தர், ஸுதன்வன் எனப்
படுவர். என்பதாம். இந்த சுதன்வாவைப்பற்றி பாரதம்
உத்யோக பர்வத்தில், சுதன்வா - பிரகலாதசம்வாதத்திலும்
விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் இதுவாம்.
ஆங்கிரஸ மகரிஷியின் புத்திரனான சுதன்வாவும் பிரகலா
தன் புத்திரன் விரோசனனும் தங்களுள் யார் பெரியவன்
எனத் தர்க்கம் செய்துகொண்டு அவ்விஷயத்தை முடிவு
செய்துகொள்ளும் பொருட்டு சத்தியவந்தனாகிய பிரகலாத
னிடம் சென்று விண்ணப்பிக்க, அவன் தர்மநீதி பிசகாது

கூறலுற்றான். ஓ! குமாரா! விரோசனா! பிராமணர்கள் சிரேஷ்டர்களா அல்லது அசுரர்களா? என்னும் கேள்வியே உங்களுக்குள் உண்டாயிருக்கிறது. சுதன்வாவின் தந்தையாகிய ஆங்கீரச மகரிஷி என்னைவிட பிறப்பில் உயர்ந்தவர். அவர்களிருவரும் பிரமத்தினின்றும் உற்பவித்த பிராம்மணர்கள். சுதன்வாவின் தாய் உன் தாயினும் சிரேஷ்டமானவள். மேலும், இந்த சுதன்வாவின் பிராணன் உன்னுடைய பிராணனிலும் உயர்ந்தது. ஆகவே, சுதன்வனே! என் குமாரனாகிய விரோசனனிடம் இந்த வீணை தர்க்கத்தை விட்டுவிடு, என்று பிரகலாதன் கூறினான்.

அப்பொழுது சுதன்வா கூறலானார்: 'ஓ, பிரகலாதரே! இப்பொழுது என்னுடன் வாக்குவாதம் செய்த உன் குமாரன் விரோசனன் அவனது தாய் கர்ப்பத்தில் என்னால் காப்பாற்றப்பட்டு உன்னிடம் கொடுக்கப்பட்டவன். ஆகையால் உன்னுடைய புத்திரி உன் தனயனின் பாபத்தை நிவர்த்திக்கும் பொருட்டு என்பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்க வேண்டும் என்றான். பிரகலாதனும் அவ்வாறே செய்வித்தான் என்று பாரதம் கூறுவதால், சுதன்வா வணங்கற்குரிய ப்ராம்மணன் என்றும் ஆங்கிரஸ புத்திரன் என்றும் தெளிவாயிற்று.

எனவே, சுதன்வாவுக்கும் அவரது புத்திரர்களுக்கும் விஸ்வகர்ம சிருஷ்டிக்கிருத்தியமும், ருபுத்துவமும் பிராம்மணத்துவமும், உண்டென்பது பிரசித்தம். அதற்குப் பிரமாணம்:

ருக்குவேதம் 1-வது மண்டலம், 7-வது அநுவாகம் 304-வது மண்டலம்:

" விஷ்டவீ, சமீ தரணித்வேந வாகதோ மர்த்தா
ஸஸ்ஸந்தோ அமூர்தத்வமாநபுஃ:, ஸௌதன்வனு
ருபவ: ஸூரசக்ஷஸ: ஸம்வத்ஸரே சமப்ரு
ச்சயம் தீதிபி:" ||

இம்மந்திரத்தின் பொருள்:

சிற்பங்களை விரைவில் கற்று நிபுணத்துவம் அடைந்தவர்களும், அறிவிற் சிறந்தவர்களுமாகிய ருபுக்கள் என்போர் அழிவில்லாதவராகி தேவத் தன்மையை அடைந்தார்கள். ஆங்கிரஸ மகரிஷியின் குமாரனாகிய சுதன்வனுக்கு ருபுவு, விப்வ, வாஜன், என்னும் மூன்று புத்திரர்களுண்டு. அவர்களும் ருபுக்கள் எனப்பட்டார்கள். அவர்களுள் முதல்வனும் மூன்றாமவனுமாகிய ருபு, வாஜன் ஆகிய இருவர்களால் அநேக சாஸ்திரங்கள் உண்டாக்கப்பட்டன. பின்னும் அநேக ருபுக்களால் விரிவான அநேக சூக்தங்கள் உண்டாயின. அவர்கள் அறிவிற் சூரியனைப்போல் ஒளி பரப்பிப் பிரகாசித்தார்கள். ஒரு வருஷ காலத்திற்குப் பிராணன் போன்ற வசந்தருது காலங்களிலேயே தங்கள் கர்மங்களாகிய சிற்பங்களைச் செய்துமுடித்தார்கள். அதற்ருல் அமரத்துவம் பெற்றூர்கள். அவர்கள் அறிவுச்சுடராகிய சூரியக்கிரணங்கள் எனச் சொல்லப்பட்டார்கள்.

ஆகவே மேற்கண்ட சுருதிவாக்கியப்படி சுதன்வரிஷியும் அவரது புத்திரர்களும், பௌத்திர பரம்பரையும் சிற்பமுணர்ந்து விஸ்வகர்மாக்களாகவும் விளங்கினமையால், சுதன்வாவை விஸ்வகர்ம ரிஷியென்றும் சுதன்வா விஸ்வகர்மாவென்றும் வழங்கி வருவது வேதங்களால் அங்கீகரிக்கப்படுவதாகும்.

இனி புவனபுத்ர (பௌவன) விஸ்வகர்மாவைக் குறித்துப் பார்ப்போம். ருக்வேதம் அட்டம் 8, அநுவாகம் 8, வர்னம் 15.

" பரஇமா விஸ்வா விஸ்வகர்மா-பௌவனோ வைஸ்வ
ஸ மாணம் ச்விதி-இமானுகம்புவன ஆப்திய
ஸ்லாதன : || க்வஷித்கதம்சித் " ||

என்னும் வாக்கியங்களாலும், "க்வசித்கதம் சித்" என்னும் சூத்திரங்களாலும், விஸ்வகர்மர்கள் ஆங்கிரஸ கோத்திரர்கள் என்று நிச்சயப்படுகின்றது. விஸ்வகர்மா த்வஷ்ட

கோத்திரமுடையவர்கள். புவனரிஷியின் வம்ஸத்தார்களானதினாலும், புவனனுடைய தகப்பன் அப்தி என்பான் தொடர்ந்த கோத்திரமுடையவனாதலாலும் ஆங்கீரஸ கோத்திரத்துவம் சித்திக்கிறது. ஆகவே, விஸ்வகர்மர்கள்-துவஷ்டர்கள்-தொடர்புடைய கோத்திரர்களானாலும், ஆங்கீரஸ கோத்திரத்துடன் எள்ளில் எண்ணெய்போல்அடங்கியிருத்தல் நிச்சயமாகின்றது.

இனி மனுவிஸ்வகர்மாவைக் குறித்து ஆராய்வோம். சுவாயம்பு மனுவின் பரம்பரையில் ஆறு மனுக்களாகிய அதர்வன், வேதவியாசன், பிரியவிரதன், உதீரிதன் பஞ்சமோதன், பிரகீர்த்தி ஆகியோர் தோன்றினார்கள். இந்த ஆறு மக்கள் உற்பத்தியாயினர் என்பதற்கும், இவர்களில் இருவர் பிரம பாஞ்சாலப் பிராம்மணர் என்றும் மற்றைய நால்வர் உபபாஞ்சால பிராம்மணர் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றார்கள்.

இதையே பிராம்மண உற்பத்தி மார்த்தாண்டம், 51-வது அத்தியாயம் பாஞ்சாலப் பிராமண உற்பத்தி என்ற பிரகரணத்தில்,

"ஸ்வாயபம்புஸ்ய ஷட்புத்ரா-ஜ்யேஷ்ட்டோதர்வா பிரசீர்த்தா :
ஸாமவேதோ யஜுர்வேத : க்ரமாத்ருக் வேதயேவச:" ||

என்றும் தொடரும் பதினொன்று சுலோகங்களால் வியக்தமாகின்றது. அந்த சுலோகங்களின் பொருளை மட்டும் இங்குக் கூறுதும் :

[உரை] நந்திகேஸ்வரர் பிருகு புத்திரனைப் பார்த்து முன்னே யாம் சைவ பாஞ்சாலப் பிராமணோற்பத்தியைச் சொன்னோம். இனி, பிரம்ம பாஞ்சால உற்பத்தியையும், உப பாஞ்சாலப் பிராம்மண உற்பத்தியையும் சொல்லுகிறோம். உலகத்திற்கு ஹிதத்தைச் செய்யும் பொருட்டு, ஆதி விஸ்வகர்மாவின் கட்டளைப்படி பிரம்மாவினால், பூர்வ

தேவ பாஞ்சாலர் சிருஷ்டியை யொத்து நான்கு மனுக்கள் அவர் முகத்தினின்றும் - அறிவு விளக்கத்தினின்றும் சிருஷ்டிக்கப்பட்டார்கள். முதலாவது தோன்றிய சுவாயம்பு மனுவே பிராம்மணரானார். அவருக்கு ஆறு புத்திரர்கள் தோன்றினார்கள். அவர்களில் இருவர் பிரம்ம பாஞ்சாலப் பிராமணர்கள். மற்றும் நால்வர் உப பாஞ்சாலப் பிராமணர்கள். இந்த அறுவரும் சகல வேதங்களோடு உபவேதங்களாகிய சில்ப வேதத்தையும், சில்பகர சாதனையையும் பெற்றிருந்ததோடும் அயம், தாரு, தாம்பிரம், சிலா, சுவர்ணம் முதலிய பல தொழில்களைக் கற்றும், நடாத்தியும் வந்தார்கள். மேற்குறித்த பிராம்மணர்களுக் கெல்லாம் விஸ்வகர்ம சாகையே உரித்தாகும். பூர்வம் விஸ்வகர்மாவின் முகத்தில் பிறந்த மநு மயாதிகளாகிய ஐவர்களைப்போலவே மநு, மய, துவஷ்ட, சில்பி, விஸ்வக்ஞ வென்னும் பெயர்களையும், அவர்கள்வழித் தோன்றிய ரிஷியாதியோர் பெயர்களையும் வைத்துக்கொள்வதற்கும் உரியவர். மேலும், எல்லா தேவப் பிராம்மணர்களும் அநுஷ்டிக்க வேண்டிய ஆசாரங்களைச் சொல்லுகிறேன். அதாவது யஜனம், யாஜனம், அத்யயனம், அத்யாபனம், தானம், தானப் பிரதிக்கிரகம் என்பனவுடன் ஸ்நானம், சந்தியாவந்தனம் அக்னி ஹோத்ரம், யாகாதிகள் யாவும் அவர்கள் கைக்கொள்ளவேண்டியனவைகளாம். எனவே, மேற்குறித்தவர்கள் சுவாயம்பு மநுவின் பரம்பரையில் வந்த மநு விஸ்வகர்மாவின் சந்ததியாரான மநு விஸ்வப்பிராம்மணர்களென்றும் ஆதிவிஸ்வகர்மாவின் முகத்தில் தோன்றிய மநு விஸ்வகர்மா சந்ததியில் வந்த விஸ்வப் பிராமணர்கட்கும் பிறப்பினாலும் பிரம்ம நித்தியங்களாலும் எவ்வித வேற்றுமையும் இல்லை யென்பது சந்தேகமற நிச்சயிக்கப்பட்டது.

பிந்திய யுகங்களிலும் சுவாயம்பு மநுவின் சந்ததியார்களாகிய விஸ்வகர்மாக்கள் பூலோகத்தில் அற்புத சிருஷ்டிகளைச் செய்துள்ளார்களென்பதை வான்மீகி ராமாயணம்,

பாலகாண்டம் - பஞ்சம ஸர்க்கத்தில் வரும் கீழ்க்கண்ட சுலோகம் உறுதிப்படுத்தும்.

" அயோத்யா நாமநகரீ தத்ராஸீ லோக விச்ருதா :
மநுநா மாந வேந்த்ரேண—யாபுரி நிர்மிதா ஸ்வயம் "

[உரை] உலகத்தாரால் புகழ்ந்து கூறப்பட்ட அயோத்தியா வென்னும் பெயருடைய அந்த அழகிய நகரமானது, மனிதர்களுக்குத் தலைவனான சுவாயம்பு மனுவின் பரம்பரையில் வந்த மனு விஸ்வகர்மாவினால் சுயமாக நிர்மிக்கப்பட்டது என்பதாம். இதனால் சுவாயம்பு மனுவின் பரம்பரையிலும் சிருஷ்டித் தொழில் வல்ல விஸ்வகர்மர்கள் இருந்தனரெனப் பெறப்படுகின்றது. மேலும், இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் மதுரை கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவரான இறையனர் இயம்பிய அகப்பொருள் என்னும் நூலில்,

" வேளாப் பார்ப்பான் வாளரம் துமித்த
வளைகளைந் தொழித்த கொழுந்தின் அன்ன "

என்று கூறப்பட் டிருப்பதால், கொல்லரை வேளாப் பார்ப்பார் என்று சொல்லப்பட்டுள்ளது. இனி, வேளாப் பார்ப்பான் என்பதன் பொருளை ஆராய்வோம். 'பார்ப்பான்' என்பது ஒரு காரணப் பொதுச் சொல். இச்சொல் அடையின்றிக் கூறுங்கால், இடுகுறிமாத்திரையாய் ஒரு ஜாதியிற் பிறந்தானைக் குறிக்கும். அடையொடு சேருங்கால் வேறு பிறரைக் குறிக்கும். 'பைங்கட் பார்ப்பான்' என்புழிச் சிவனைக் குறிக்கும். 'பார்ப்பான் குண்டிகை யிருந்த நீரும் குளுகுளு கொதித்தது' என்புழி அயனைக் குறிக்கின்றது. அதுபோலவே, வேளாப் பார்ப்பார் என்பது கொற்றொழில் புரியும் மரபினரைக் குறிப்பதாகும். அதாவது அம்மரபினரின் நித்ய யாகத்தைப் புகழாமல் புகழ்வதாகும். எனவே, பொற்கொல்லராகிய மரபினருக்குப் பிராம்மணப் பட்டம்

இந்நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இருந்த
தாக அறியக் கிடக்கிறது.

எனவே, இன்று பூலோகத்தின்கண் உள்ள சிருஷ்டித்
தொழில் வல்ல விஸ்வகர்மாக்கள் லோகோபகாரார்த்தமாக
முன்னர்க் கூறியுள்ள தெய்விகத் தந்தையர்களைப்போல்
தாங்களும் அவர்களின் சிருஷ்டியைப் பின்பற்றி நடாத்தி
வருகின்றார்களென்பதும், அதனால் தங்கள் முன்னோர்க
ளாகிய ரிஷிகளின் கோத்திரசூத்திரங்கள், பாகைப்பிரவரங்
களைத் தங்கள் குலத்திற்கே உரிமையாகக் கொண்டுள்ளார்க
ளென்பதும், ஸநாதன வர்த்தமானத்திற் கிணங்கி இப்பூ
வுலகில் வாழ்ந்து, மக்களின் புகழுரையுடன் நன்றியையும், விரும்
பாதும், தங்கள் கடமைகளினின்று வழுவாதும் நடாத்தி வரு
கின்றனரென்பதும், அவைகாரணமாகக் கண்ணாளர், கம்மியர்,
அற்புதர், கன்வினைஞர், ஜெகத்குரு, அக்கசாலைத் தலைவர்,
கொல்லர், சிற்பியர், தபதியர், துவட்டர், புலவர், புனைவர்,
மயவர், வித்தகர், விஞ்ஞியர், ஓவியர், தக்ஷர் என்னும் பல
சிறப்புப் பெயர்களைக் கொண்டு விளங்குகின்றார்களென்ப
தும் அகங்கைக் கனிபோல விளங்கும். இத்தகைய சிறப்புப்
பெயர்கள் விஸ்வகர்ம சந்ததியார்களுக்கன்றி வேறு எவருக்
குண்டென்பது பாரபட்சமின்றி நோக்கற்குரிய தோன்றும்.

## 6. விஸ்வகர்மப் பிராம்மண கோத்ர, சூத்ர, பிரவரங்கள்

சகள ரூபம்கொண்ட ஸ்ரீ விஸ்வகர்மப் பரமேஸ்வரரது பஞ்சமுக தியானத்தால் உற்பவித்த சானகாதி பஞ்சப் பிரமரிஷிகளுக்கும், அப்பரமேஸ்வரரால் மானஸிகமாக சிருஷ்டிக்கப்பட்ட அத்திரியாதி நவப்பிரம்ம ரிஷிகளுக்கும் வேற்றுமையற்ற தொடர்பு உண்டு என்று வேதாதிகாச புராணங்களால் வியக்தமாகின்றது.

அஃது இவ்வாறும். சானக, சனாதன, அபுவனச, பிரத்னச, சுபர்னச வென்னும் பஞ்சப் பிரம்ம ரிஷிகளில் முதல்வரான சானகப் பிரம்மரிஷி தமது சிருஷ்டித் தொழிலுக்கு ஆதாரமாக தம்முள் ஐக்கியமாயுள்ள பரா சக்தியின் காரியமாக மானஸிக சங்கல்பத்தினால் தமது புத்திரராக ஐந்து ரிஷிகளைத் தோற்றுவித்தார். அவர்கள் உபசானகரிஷி, விப்ராஜரிஷி, கஸ்யபரிஷி, மனுவிஸ்வகர்ம ரிஷி,, விஸ்வாத்மகரிஷி என்பவர்களாம். மேற்கண்ட ஐவர்களில் நடுநாயகமாக விளங்கும் கஸ்யப ரிஷிக்கும் அதிதி யென்னும் அணங்கிற்கும் ஐந்து அரிய புதல்வர்கள் தோன்றினார்கள். அவர்கள், சமந்த, ஸ்வேதாங்க, புரஜித், பானு, ஜயபுத்ர எனப்படும் ரிஷிகளாவர். இவர்களை "பஞ்சா ருஷேயப்ரவரான் வித :, காசிப ரிஷிகோத்ர :"

என்று வேதவாக்யத்தில் கூறப்பட்டுள்ளது. இதனால் காஸ்யபருக்கும் அவர் சந்ததியாருக்கும் விஸ்வகர்ம ப்ராமணத்துவம் சித்தித்துள்ளதென்பது நன்கு விளங்கும். எனவே, அந்த காஸ்யபரே விஸ்வகர்ம பஞ்சப்ரம்ம கோத்திரத்தில் சம்பந்தபட்டவராவார்.

பின்பு தோன்றிய மன்வந்தரத்தில் காஸ்யபரை மரீசியின் புதல்வனுகக் கூறப்படுகிறது. இதனால் ஆதிகற்பத்தில் தோன்றிய காஸ்யபர் சானகரிஷி கோத்திரத்தில் ஜனித்தவரென உறுதிப்பட்டது.

மேலும் ஐவகைப் பிரளயங்களாகிய, ஆத்தியந்தப் பிரளயம், நித்யப் பிரளயம், நைமித்தியப் பிரளயம், பிராகிருதப் பிரளயம், மகாப் பிரளயம் ஆகியவைகளுள் ஆத்தியந்தப் பிரளயம் தோன்றி மறைந்த காலத்து காஸ்யப ரிஷியும் அவரது சந்ததியார்களும் மீளவும் உலகை விர்த்தி செய்தனரெனக் கூறப்படும். இவரும், இவரது சந்ததியார்களும் விஸ்வகர்மப் பிரஜைகட்கும், சுராசுரர்கட்கும் பொதுத் தந்தையராவர். காசிபருக்கு இரு மனைவியர், திதி, அதிதியெனப்படுவர். அசுரரெல்லாம் திதியின் வழிவந்த மைந்தர்கள். சுரர்களும், விஸ்வகர்மப் பிராமண சந்ததியாரும் அதிதியின் வழியேயும் வந்த மைந்தர்களென வேதங்கள் கூறுகின்றன.

முன்னர் கூறிய அத்தியாயங்களில் பிரபஞ்ச உற்பத்தி முதல், விஸ்வப் பிராமண உற்பத்திவரை கூறியுள்ளோம். அவற்றில் சமஸ்த விஸ்வப் பிராமண ரிஷிகளின் உற்பத்தியைக் குறித்தும், ஒருவருக்கொருவர் எவ்வாறு சம்பந்தப் பட்டிருக்கிறார்களென்பதையும் வேத சுருதி ஆதாரங்களால் நிச்சயிக்கப்பட்டுள்ளன. இனி ஆதி விஸ்வப் பிராமண ரிஷிகளின் வழிவந்தோரின் கோத்திரம், சூத்திரம், சாகை, பிரவரங்களைக் கூறுவோம்.

# பஞ்ச ரிஷிகளின் சந்ததியாரின் கோத்திர, சூத்திரம்.

| பெயர் | கோத்திரம் | சூத்ரம் | சாகை | பிரவரம் | யக்ஞ உபவீதம் | குண்டம் | தண்டம் | கந்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| மனுவாச்சாரி | ஸானக ரிஷி | ஆஸ்வலாயநம் | இருக்கு | சத்தியோஜாதம் | இரஜிதம் | திரிகோணம் | ஆலின் தண்டம், வெள்ளி தண்டம் | திரிபுண்டரம் |
| மயாச்சாரி | ஸனாதன ரிஷி | ஆபஸ்தம்பம் | யஜூர் | வாமதேவம் | தாமரை நூல் | சதுர் கோணம் | அரசும், இரும்பும் | ஊர்த்வம் |
| துவஷ்டாச்சாரி | அபுவனஸ ரிஷி | போதாயனம் | சாமம் | அகோரம் | தாம்பிரம் | வர்த்துலாகாரம் | புரசு | வர்த்துலாகாரம் |
| சில்பியாச்சாரி | பிரத்னஸ ரிஷி | காத்யாயனம் | அதர்வணம் | தத்புருஷம் | செம் பருத்தி நூல் | ஷட் கோணம் | கருங்காலி, இரும்பு | படாகாரம் |
| விஸ்வக்ஞ ஆச்சாரி | ஸுபர்னஸ ரிஷி | ரெளப்யாயனம் | பிரணவம் | ஈசானம் | சுவர்னம் | அஷ்டட்ட கோணம் | பொன் | திரிபுண்டர கந்தாக்ஷதை |

## 1. சானக ரிஷி கோத்ர 25 ரிஷிகளின் சந்ததியாகிய பிரவர ரிஷிகள்

இவர்கள் பஞ்சாருஷேயர், திரியாருஷேயர் என இருவகை.

இக்கோத்திரத்துக்கு பஞ்சாருஷேய ரிஷிகள் 16
,, திரியாருஷேய ,, 9

### சானக மகரிஷி (மனைவி) ஆதிசக்தி

#### பஞ்சாருஷேய ரிஷிகள்

உபசானக ரிஷி
1. விப்ராஜ ,,
2 கஸ்யப ,,
3. மனு விஸ்வகர்ம ,,
4. விஸ்வாத்மக ,,

**விப்ராஜ ரிஷி - சுலட்சுமி**

மனு ரிஷி
மாமன்யு ,,
பூபல ,,
ஸம்வர்த்த ,,
விஸ்வர்த்த ,,

**கஸ்யப ரிஷி - அதிதி**

சமந்த ரிஷி
ஸ்வேதாங்க ,,
புரஜித்து ,,
பானு ,,
ஜயபுத்ர ,,

**மனு விஸ்வகர்மரிஷி - கல்யாணி**

வனஜ ரிஷி
[illegible] ,,
மது ,,
வசு ,,
தாபச ,,

**விஸ்வாத்மகரிஷி - சுமங்களா தேவி**

சுடக்ஷ ரிஷி
சுதக்ஷ ,,
பிரபோத ,,
வசுலோசன ,,
சித்ரதர்ம ,,

**மனுரிஷி - ஸ்ரத்தா தேவி**

மன்யு ரிஷி
முனி ராஜ ,,
மன்யுபதி ,,
[illegible] ,,
கந்தவஹா ,,

**மாமன்யு ரிஷி - கமலா**

ஸ்ரீ மனு ரிஷி
மிருத்யுஞ்சய ,,
விரூபாக்ஷ ,,
ஸப்ய ,,
தீபல ,,

**ஸ்வேதாங்கரிஷி - ஸாத்விகா தேவி**

பாண்டுவ ரிஷி
சுபால ,,

சுகபாக் ரிஷி
தார்த்ததார ,,
*மரிசி ,,

**புரஜித்து ரிஷி - ஸுகுணீ தேவி**

சுப்ரபேசி ரிஷி
சுசித்ர ,,
பாஸ்வத ,,
கர்மதக்ஷ ,,
போகமதி ,,

**ஜயபுத்ர ரிஷி - போகவதி**

சுசிகுண ரிஷி
தீக்ஷ்ண திருக் ,,
சித்ரகார ,,
அருணபாத ,,
சுபோதக ,,

**வனஜ ரிஷி - சுசீதேவி**

வானஜ ரிஷி
அங்கீரஸ ,,
பாஸ்விரத ,,
ஸுமுக ,,
ஜிதாப ,,

**பாஸ்வத ரிஷி - சுகுமாரி**

விபாசுர ரிஷி
ஸுகண்ட ,,
உபதாப ,,
ஜிதாங்க ,,
உபமது ,,

**மது ரிஷி - மந்தகாசினி**

மாதுக ரிஷி
ப்ரமதி ,,
ஸர்வபத்ர ,,
புலஸ்திய ,,
விதம ,,

**சுயக்ஷ ரிஷி - கஞ்சவாக்கி**

ஸுஸக்ஷி ரிஷி
உபஸத்யக ,,
வசுமதிஜ்ஞ ,,
யஜ்ஞதீபக ,,
சந்தப ,,

**ப்ரபோதக ரிஷி - ப்ரக்ஞாவதி**

தப்தகுண ரிஷி
பௌலஸ்த்ய ,,
ஸுசக்தி ,,
காலநாத ,,
ஸுபர்ஹி ,,

**சித்ரதர் மகரிஷி - சாந்தமதி**

தர்மரத ரிஷி
சாந்தமதி ,,
ஸுதர்போத ,,
சைத்ரதர்ம ,,
சக்குரு ,, 16

“பஞ்சாருஷேயப் பிரவரான் வித: ருக்சாகீ ரிஷி கோத்ர: (தன்பெயர்) சர்மா அஹம்போ அபிவாதயே” என்றும் ருக் சாகை யென்றும் சொல்லிக் கொள்ள வேண்டும்.

## திரியாருஷேயர்கள்

**பூபாலரிஷி - பூஷாதேவி**

விந்ததேஜ ரிஷி
மன்யுமான்யு ,,
பூவர ,,

**சம்வர்த்த ரிஷி - ரமா**

சுபேக்ஷண ரிஷி
பூசாரரிஷி ,,
ஸுவர்த்மா ,,

விஸ்வதந்த ரிஷி - சாருமதி

ஸுரூப ரிஷி
ஜிதாச ,,
விஸ்வவேத்த ,,

சமத்ர ரிஷி - திருநீதேவி

சுக்லாங்க ரிஷி
புராஜித் ,,
ஸுகேஸ ,,

பானுமான் ரிஷி - ஸௌதர்மா தேவி

ஸுமதி ரிஷி
உபதக்ஷ ,,
அத்ரி ,,

வசுமந்த ரிஷி - ஸ்ரீமணி

சித்ரவசு ரிஷி
தீரமதி ,,
சதுரவாக் ,,

தாபஸ ரிஷி - ஸுந்தரி

வனபுக் ரிஷி
புலஹ ,,
ஸமபுத்தி ,,

சுநக ரிஷி - மந்தகமனு

ஸுமானஸக ரிஷி
குணதர்சித ,,
யக்ஞகர ,,

வசுலோசன ரிஷி - பிரபாவதி

ஆதிசைவ ரிஷி
விதூர்வ ,,
ப்ரலோசன ,, 9

“ திரியாருஷேயப்பிரவரான் வித : ருக்சாகீ........கோத்ரக : ............சர்மா அஹம்போ அபி வாதயே” என்றும் ருக்குசாகை யென்றும் சொல்லிக் கொள்ள வேண்டும்.

---

## 2. சனாதன ரிஷி கோத்திர 25 ரிஷிகளின் சந்ததியாகிய பிரவர ரிஷிகள்

பஞ்சாருஷேய ரிஷிகள் 15, திரியாருஷேய ரிஷிகள் 10

### சானக மகரிஷி—பராசக்தி

பஞ்சாருஷேய ரிஷிகள்

உபசுநசன ரிஷி
வாமதேவ ,,
விஸ்வசக்ஷு ,,
பிரதிதக ,,
ஸுநந்தன ,,

வாமதேவ ரிஷி - கடாக்ஷிணி

மய ரிஷி
சனத்குமார ,,
தார்மிக ,,
விதாத்ருமனு ,,
த்விஜதர்ம ,,

விந்யாரிஷி - தாருணி

விரதீ ரிஷி
ஸுமாகர ,,
கோலம்பரி ,,
அமூர்தபிந்து ,,
கமலதிருக் ,,

பரிஷங்கரிஷி - மோதவதி

ஆர்ய ரிஷி
உத்சவ ,,
தத்தாத்ரேய ,,
ருதுஜ்ஞ ,,
பாரிஸங்க ,, 15

## திரியாருஷேய ரிஷிகள்

வர்த்தகரிஷி - ஸுகாமணி

வர்தக ரிஷி
சைவ போதக ,,
ஸ்ரீயுத ,,

பாவபோதகரிஷி - காருணிகா

கோமளாங்க ரிஷி
லோகைக ,,
கர்மநிஷ்ட்ட ,,

யக்ஞசேனரிஷி - அநேணாக்ஷா

யக்ஞசேனி ரிஷி
வ்ருத்தஸ்ரவண ,,
விதிகார ,,

விஸ்வதக்ஷரிஷி - சுபாங்கி

யக்ஞேச ரிஷி
வைஸ்வதக்ஷ ,,
பிரம்மவேதி ,,

சநத்குமார ரிஷி - அலகா

உபாவன ரிஷி
ஆதிர ,,
குதணிக்ஞ ,,

தார்மிக ரிஷி - ஸுரதி

விசிட்ட ரிஷி
உபதார்மிக ,,
தர்மயதி ,,

த்விஜதர்ம ரிஷி - காமாக்ஷி

தர்மஜாணி ரிஷி
தேவ ,,
[illegible] ,,

விஸ்வதரி ரிஷி - ஸுமாரி

சௌம்ய ரிஷி
நிர்வருண ,,
ப்ராஜாபத்ய ,,

பிரவர ரிஷி - கிருஷ்ண கேசினி

புஷ்க்கர ரிஷி
ஜஹ்னு ,,
நாராயண ,,

ஜயதன்வரிஷி - காந்தா

க்ரஹவேதிதா ரிஷி
கிலஜ்ஞ ,,
குலிசக்ருதி ,, 10

“ திரியாருஷேயப்பிரவரான்வித : யஜுஸ்சாகி.........ரிஷி கோத்ரக : ...............சர்மா அஹம்போ அபிவாதயே” என்றும் யஜுர்சாகை யென்றும் சொல்லுக.

## 3. அபுவனச ரிஷி கோத்திர 25 ரிஷிகளின் சந்ததியாகிய பிரவர ரிஷிகள்

பஞ்சாருஷேய ரிஷிகள் 11 ; திரியாருஷேய ரிஷிகள் 14

### அபுவனசரிஷி—இச்சாசக்தி

#### பஞ்சாருஷேய ரிஷிகள்

உப அபுவனச ரிஷி
பத்ரதத்த ,,
காண்டவ ,,
விஶ்வாகார ,,
ஸ்ரீமுக ,,

**பத்ரதத்ரிஷி - நீலவேணி**

த்வஷ்டா ரிஷி
யக்ஞபால ,,
குசதர்ம ,,
தாம்ரகர்ப ,,
அதிதாதா ,,

**காண்டவரிஷி - ஸுமித்ரா**

லோகேசமனு ரிஷி
பத்மதக்ஷ ,,
விதம ,,
மேதாமதி ,,
விஸ்வமய ,,

**விஸ்வாகார ரிஷி - ஸுந்தரானனு**

போதாயன ரிஷி
சித்ரசேன ,,
ஜாதவேத ,,
ஜயசேன ,,
விகன ,,

**ஸ்ரீமுகரிஷி - ஸுமாநஸா**

பிரபோந்த ரிஷி
தேவர ,,
விநய ,,
பிராம்மதீக்ஷித ,,
ஹரிதர்ம ,,

**யக்ஞபாலரிஷி - ரஞ்சனி**

ஹேதுஜ்ஞ ரிஷி
அத்யாத்பவித் ,,
உக்ர ,,
ஆஹதரச ,,
ஸாமநிதி ,,

**பத்மதக்ஷரிஷி - ஸ்வர்ச்சா**

கர்த்தம ரிஷி
யோககுண்டலி ,,
ஐஸ்வர்ய ,,
காலவித் ,,
பத்ம ,,

**மேதாமதிரிஷி - ஸுதேவி**

பிம்பதர்சி ரிஷி
நேமிக்ருத் ,,
சத்ரபாக ,,
சுபர்க்க ,,
ஜகத்ஜித்து ,,

சித்ரசேனரிஷி - ப்ரபகளா

| | |
|---|---|
| தயாக்ர | ரிஷி |
| நீஹாரபுக் | ,, |
| த்ரயீதர்ம | ,, |
| நாசத்ய | ,, |
| அதந்த்ரீ | ,, |

ஜயசேனரிஷி - [illegible]

| | |
|---|---|
| தூர்நக | ரிஷி |
| தல்லஜ | ,, |
| ஜீவாதரு | ,, |
| தண்ட | ,, |
| தைஷத்ப | ,, |

ப்ரம்மதீக்ஷிதரிஷி - கௌரீ

| | |
|---|---|
| தீக்ஷஜ | ரிஷி |
| தத்யவாக் | ,, |
| யோகதத்வ | ,, |
| த்யானநிஷ்ட | ,, |
| தாராஸதி | ,, |

11

"பஞ்சாருஷேய ப்ரவரான்வித: - ஸாமசாகீ.........ரிஷி கோத்ர: .........சர்மா அஹம் போ அபிவாதையே" என்று சாமவேதமாகிய சாமசாகையை சொல்லிக் கொள்க.

## திரியாருஷேய ரிஷிகள்

த்வஷ்டரிஷி - விபாவரீ

| | |
|---|---|
| விஸ்வரூப | ரிஷி |
| கத்யந | ,, |
| மஹாவாக்ய | ,, |

ருசதர்மரிஷி - [illegible]

| | |
|---|---|
| அச்வயவாதி | ரிஷி |
| த்யானபிந்து | ,, |
| சம்பவித் | ,, |

தாம்ப்ரகர்ப்பரிஷி - ஸுமுகி

| | |
|---|---|
| ருபு | ரிஷி |
| ஆபாஷண | ,, |
| யோகவித் | ,, |

அநிநாதரிஷி - ஸுந்தராங்கி

| | |
|---|---|
| [illegible] | ரிஷி |
| உத்சாக | ,, |
| அயகர | ,, |

லோகேசமனுரிஷி - சாருநேத்ரி

| | |
|---|---|
| கீர்வாண | ரிஷி |
| அநந்த | ,, |
| க்வாணக்ஞ | ,, |

விதாமரிஷி - [illegible]

| | |
|---|---|
| நாதாம்ருத | ரிஷி |
| சித்ரவித் | ,, |
| மிகிர | ,, |

விஸ்வமயரிஷி - நிராமயீ

| | |
|---|---|
| பிரவிர்த்த | ரிஷி |
| ஜயந்த | ,, |
| விஸ்வகர்மா | ,, |

மோதாயனரிஷி - ஸுபோதினி

| | |
|---|---|
| பிர்துஜித் | ரிஷி |
| ஸர்வசார | ,, |
| [illegible] | ,, |

ஜாதரூபரிஷி - வார்த்தாளீ

| | |
|---|---|
| படப | ரிஷி |
| சிதபாளி | ,, |
| பத்ரபத | ,, |

விகனரிஷி - சித்ராங்கி

| | |
|---|---|
| வைகானஸ | ரிஷி |
| ஹரித்வார | ,, |
| ப்ரஜாவாச | ,, |

பிரபோன்னதரிஷி - சித்திர
பாஷினி

தடஸ்த ரிஷி
விஜ்ரும்ப ,,
ததாமோதி ,,

தேவரரிஷி - உச்சாங்கி

பாக்யவித் ரிஷி
மனோராஜ ,,
நிர்வாண ,,

விநயரிஷி - கலகண்டி

திரோதான ரிஷி
தாமநிதி ,,
துஷித ,,

ஹரிதர்மரிஷி - சிவகரி

கமோததி ரிஷி
அத்வயவாதி ,,
விந்தாரி ,, 14

“ திரியாருஷேய பிரவரான்
வித :— ஸாமசாகி.........ரிஷி
கோத்ர : ................சர்மா
அஹம்போ அபிவாதயே ”
என்று சொல்லிக்கொள்க.

---

## 4. பிரத்னஸரிஷி கோத்திர 25 ரிஷிகளின் சந்ததியாராகிய பிரவரரிஷிகள்

பஞ்சாருஷேய ரிஷிகள் 13; திரியாருஷேய ரிஷிகள் 12

### பிரத்னஸ ரிஷி—கிரியாசக்தி

பஞ்சாருஷேய ரிஷிகள்

உபபிரத்னஸ ரிஷி
ருசிதத்த ,,
வாஸ்த்தோஷ்பதி ,,
கௌசல ,,
ஸநாபஸ ,,

ருசிதத்தரிஷி - ரக்தாக்ஷி

ப்ரஹர்ஷண ரிஷி
லோகவேத்த ,,
சில்பிகமனு ,,
ஸகஸ்ரபாஹு ,,
தேசிகமனு ,,

வாஸ்தோஷ்பதி - தர்மவதி

வாஸ்துபுருஷ ரிஷி
இந்திரசேன ,,
கிரிதர்ம ,,
வசுதர்ம ,,
வஜ்ரசேதா ,,

கௌசலரிஷி - லீலாவதி

விச்வபத்ர ரிஷி
ஞானபத்ர ,,
தேவபத்ர ,,
வியஞ்ஜக ,,
பிரபோதமனு ,,

## திரியாருஷேய ரிஷிகள்

**பிரகர்ஷணரிஷி - சுப்பரதீகா**

பிரஹர்ஷணி ரிஷி
மஹாகால ,,
அதர்வசிர ,,

**லோஹவேத்ரு ரிஷி - சௌநர்வாசி**

ஸர்வதிருக் ரிஷி
முனிநாயக ,,
விதிதர்ம ,,

**ஸஹஸ்ரபாஹு ரிஷி - ஞானவாக்**

பலபுக் ரிஷி
வேததிருக் ,,
நிரவதி ,,

**வாஸ்து புருஷரிஷி - பாலனி**

த்ரசாயி ரிஷி
கிருசாங்க ,,
அவதூத ,,

**இந்திரசேனரிஷி - ஜல்பகி**

பிஸாசநன ரிஷி
தவளாங்க ,,
நியதிக்ஞ ,,

**கிரிதர்மரிஷி - ப்ரகாசினி**

பிருதுஜானு ரிஷி
ஸுரேந்த்ர ,,
பர்ஞசந ,,

**விச்வபத்ரரிஷி - சுகுண்டினி**

தக்ஷிணமூர்த்தி ரிஷி
ஆமோத ,,
புலிநஸ்த ,,

**வியஞ்ஜகரிஷி - வேதவதி**

மான்யசூண ரிஷி
சர்ச்சாகர ,,
கல்பஜ்ஞ ,,

**பிரபோதக ரிஷி - சத்தியவதி**

நாதஜ்ஞ ரிஷி
தாம்ராக்ஷ ,,
தக்ஷதீர ,,

**வேதபாலரிஷி - போகினீ**

ப்ரத்யும்ந ரிஷி
காண்டஜ்ஞ ,,
ஸர்வஜ்ஞ ,,

**போக்தல்யரிஷி - அமலமதி**

நீரதாங்க ரிஷி
உபம ,,
விப்ஸ்வகர்ம ,,

**ப்ரஜ்ஞாமதிரிஷி - பாஸுராங்கி**

பூசரஜ்ஞ ரிஷி
புரோவித் ,,
ஸுரவர ,, 12

"திரியாருஷேயப் பிரவரான் வித்: அதர்வணசாகீ......ரிஷி கோத்ரா: .........சர்மா அஹம் போ அபிவாதயே" என்றும் சொல்லிக்கொள்க.

---

## 5. சுபர்னஸ மகரிஷி கோத்திர 25 ரிஷிகளின் சந்ததியாராகிய பிரவர ரிஷிகள்

பஞ்சாருஷேய ரிஷிகள் 13, திரியாருஷேய ரிஷிகள் 12.

### சுபர்னஸரிஷி—ஞானசக்தி

பஞ்சாருஷேய ரிஷிகள்

உபசுபர்னஸ ரிஷி
விஸ்வக்ஞ ,,
பரித ,,
[illegible]சேன ,,
ஸாங்க்யான ,,

**விஸ்வக்ஞரிஷி - சஞ்சலாக்ஷி**

மணிபத்ர ரிஷி
முனிசூர ,,
சுருதிவர்த்தன ,,
யாஜ்ஞிக ,,
சௌம்ஜ்ஞிக ,,

**பரிதரிஷி - மங்களாங்கி**

ஆதித்யசேன ரிஷி
அர்வந்த ,,
அர்ச்சித ,,
கர்த்தம ,,
பாரார்ச்சித ,,

**ஸ[illegible]சேனரிஷி - அங்கஜா**

[illegible]சர்ம ரிஷி
சுதர்சன ,,
உபகோப ,,
எக்ஞ ,,
ஸாந்த்வ ,,

**ஸாங்க்யானரிஷி - ஆத்மமதி**

உபகல்ப ரிஷி
தேவசேன ,,
ஆதித்ய ,,
நிகம ,,
உபயக்ஞ ,,

**மணிபத்ரரிஷி - ஸாகி**

ஹாடகாங்க ரிஷி
யாஜக ,,
நாதபிந்து ,,
ஸமாவிர்த்த ,,
ஸர்வதம ,,

**அர்வந்தரிஷி - ஸாநீ**

நிரத ரிஷி
அபதர ,,
பணின ,,
தேவதத்த ,,
ரூப்யாயன ,,

**பாரார்ச்சிதரிஷி - தர்மிணி**

வீரதர்ம ரிஷி
நிக்ரஹ ,,
ப்ராசீநயோக்ய ,,
விபாக ,,
சாமிக ,,

**ஸுதர்சனரிஷி - அமூர்தவாக்**

ஸௌதர்மணி ரிஷி
விதுஷ்ட ,,
தீர்த்தக ,,
ஸமதி ,,
விது ,,

**யஜ்ஞரிஷி - மஹிளா**

காலபாக ரிஷி
பாவஜ ,,
விசிட்ட ,,
அபிதர்ஷி ,,
பர்க்க ,,

ஸாந்துஸரிஷி - ரக்தேகாஷ்டி

பிரோக ரிஷி
ஸர்வபூஷித ,,
புத்திசாக்ஷி ,,
துரீய ,,
கோபாயன ,,

ஆதித்யரிஷி - மாலினி

பக்தமோக்ஷ ரிஷி
ஸாத்விக ,,
அந்தர்முக ,,
பரஞ்சோதி ,,
திரிவிருதாத்மா ,,

உபயக்ஞரிஷி - மஹதி

ஸதஸ்ய ரிஷி
அவ்யாஜ ,,
தர்ஸாக்னி ,,
ஔபயக்ஞ ,,
யுவாக ,, 13

“பஞ்சாருஷேயப்பிரவரான் வித: பிரணவசாகீ.........ரிஷி கோத்ர :.........சர்மா அஹம் போ அபிவாதயே” என்று சொல்லிக்கொள்க.

## திரியாருஷேய ரிஷிகள்

முனிஸுவரரிஷி - ஸாவணி

முத்கல ரிஷி
பாசுபதி ,,
லேகக ,,

சுருதிவர்த்னரிஷி - ஸவீபா

லப்யஜ்ஞ ரிஷி
வாசிஷ்ட்ட ,,
ப்ரஹ்மவித் ,,

யாக்ஞிகரிஷி - கேளீ

ஆத்மபோத ரிஷி
பரமஹம்ச ,,
யவ்யக்ஞ ,,

ஸம்ஸ்ஞிகரிஷி - வாமாக்ஷி

ஹயக்ரீவ ரிஷி
யமி ,,
காலாக்னிருத்ர ,,

ஆதித்யசேனரிஷி - வனிதா

ஸாதக ரிஷி
அந்திக ,,
ஸத்யவசாராதீதி ,,

அர்த்திநரிஷி - ரமணீ

வரகதித ரிஷி
உத்தாணபாதி ,,
ஹிமாவாஸ ,,

கர்த்தமரிஷி - பரமனி

பத்ரத ரிஷி
அவசித ,,
பூரித்ர ,,

தேஜோஜாதர்மரிஷி - ப்ரீதகரி

தைஜஸ ரிஷி
நிக்ரஹ ,,
பண்டித ,,

உபகோபரிஷி - தர்மஸ்ரவா

ஸாரத ரிஷி
மகித ,,
நாகவாஸ ,,

உபகல்பரிஷி - மதுரவாணீ

ஸ்போபியன ரிஷி
நியந்தா ,,
சாந்த ,,

**தேவசேனரிஷி - ஸ்ரீவர்ணிநி**

| | | |
|---|---|---|
| விப்ரவசாம | ரிஷி | |
| சம்பு | ,, | |
| ஸ்வாந்த | ,, | |
| **நிகமரிஷி - மாயா** | | |
| விமுக்த | ரிஷி | |
| வனஸ்பதி | ,, | |
| தேவல | ,, | 12 |

"திரியார்ஷேயப்பிரவரான்வித: பிரணவசாகீ......ரிஷி கோத்ர: ......சர்மா அஹம் போ அபிவாதயே" என்று சொல்லிக் கொள்ளவும்.

மேலே காட்டியுள்ள விரிவான அட்டவணைகளில், சானகாதி மூலரிஷிகள் ஐவரோடு அதே பெயருடைய உபரிஷிகளையும் சேர்த்து ஆறு ரிஷிகளாக காட்டப்பட்டிருக்கிறது. இந்த உபரிஷிகள் தங்கள் பிதாவாகிய மூலரிஷிகளோடு ஐக்கியப்பட்டு இரண்டறக்கலந்திருப்பதால், அம்மூலரிஷிகளையும் உபரிஷிகளையும் கூட்டி ஐவராகக் கணக்கிட மொத்தம் 125 ரிஷிகள் வருவதைக் காணலாம்.

எனவே, ஆதிவிஸ்வகர்மப் பரமேஸ்வரர் முகத்திலிருந்து தோன்றிய சானகாதி ஐந்து ரிஷிகளும் முறையே இருபத்தைந்து ரிஷிகளைப் பிறப்பித்தனரென்பதும், அவ்வழியே நூற்றிருபத்தைந்து ரிஷிகள் தோன்றி அவர்கள் மூலம் கோத்திர விளக்கமும் 386 பிரவர ரிஷிகள்மூலம் எண்ணிறந்த விஸ்வகர்மப் பிரஜைகள், பஞ்சப்பிரம்ம சந்ததியார்கள், தேவப் பிராமணர்கள், பாஞ்சாலர்கள், பௌருஷேயர்கள் விருத்தியடைந்து, ஐந்தொழில்களும், மனுநீதி முறைகளும் குன்றாதும், வழுவாதும் இன்றும் நடைபெறச் செய்து வருகின்றார்களென்பதும் நன்கு விளங்கும். இவ்வளவு பாரம்பர்யக் கோத்திரப் பெருக்கமும் எல்லா மூலத்தொழில்களைப் பிறப்புரிமையாகக் கொண்ட வேறொரு குலத்தை இந்நாட்டில் காண்பது மிக அருமையினும் அருமையாம். மனச்சான்றுடைய எவரும் இந்த உண்மையை ஏற்றுக்கொள்வார்களென்பது திண்ணம்.

மேலும் மற்றென்று கூறிமுடிப்போம். இல்லையாயின், முன்னர் காட்டிய அட்டவணையில் கூறியுள்ள பிரம்ம சந்ததியில் வந்த ரிஷிகளின் பிறப்பின் உயர்வை தக்க வாறு அறிந்துகொள்ளுதற்கியலாது. மேலே கூறிய வாறு, உற்பத்திச் சிறப்பாலும், பிறப்பினுயர்வாலும் பிரம்மத்தின் வழிவந்த சந்ததியார்களே பிராம் மணர்களாவர். அவ்வழி பிறவாத மற்றவர் பிராம் மணர்கள் அல்லரென்றும், அவர்கள் பிறப்பினுல் தாழ்ந்தவ ராயினும், ஒழுக்கத்தால் ஓரோ வழி உயர்ந்தவர்களென்றும் வேத இதிகாச புராணங்கள் கூறு நிற்கும். இதற்கு வசிஷ்டருக்கும், விஸ்வாமித்திரருக்கும் இடையே பிரம்மா வின் முன்னிலையில் பிரம்மரிஷி யார் என்பதைப் பற்றி நிகழ்ந்த பெரிய வாக்குவாதமே சான்று பகரும்.

எனவே, பிரபஞ்ச சிருஷ்டிகளில் ஒரு சிருஷ்டித் தொழிலையும் செய்தற்குச் சுதந்திரமற்றவர், வேதங்களைக் கற்றுணர்ந்தாலும், யாகங்களையும், தவங்களையும் செய் தாலும், பிரம்மஞானமுடையவரென்று சொல்லப்படுவார் களேயன்றி, பிரம்ம வம்சத்தினர் ஆகார் என்பது நன்கு புலப்படும்.

---

## 7. விஸ்வகர்மப் பிராம்மண பஞ்சகிர்த்திய விளக்கம்

முந்திய அத்தியாயத்தில் விஸ்வகர்மப் பிராம்மண கோத்திர, சூத்திர, சாகை, பிரவரங்கள் விரிவஞ்சாதுகூறப் பட்டுள்ளன. இனி அவர்களின் சந்ததியார்கள் பூவுலகில் மக்கட்கு பலவகைப்பட்ட சுகங்களை நல்குதற்கு, அயம், தாரு, தாம்பிரம், சிலை, பொன் முதலியவற்றால் நடாத்தப் படும் பஞ்சகிர்த்தியமெனும் ஐந்தொழில்களை விவரிப்போம்.

இரும்புவேலைக்கு அதிபரான **சானகரிஷியும்** அவர் சந்ததியாராகிய இருபத்தைந்து ரிஷிகளும், காறுமுனை,

தராசுமுனை, கதிர்முனை, எழுத்தாணிமுனை, கத்திமுனை என்னும் ஐந்து இரும்புத்தொழில்களையும் உலக சம்ரக்ஷணார்த்தம் நிலங்களை உழுது பயிரிடுதற்குக் கொழுக்களையும், பண்டங்களை நிறுத்தற்குத் தராசுக்களையும், ஆடை முதலியவைகளை நெய்தற்கும், அதற்கான நூல்களை நூற்பதற்குமான நீண்ட கதிர், இராட்டினம் முதலிய கருவிகளையும் சகல இயந்திரங்களையும், வேத இதிகாச புராணங்களை எழுதிப் பதனப்படுத்தற்கான கூர்மையான எழுத்தாணிகளையும், தாயின் உதரத்தினின்றும் குழவியைப் பிரித்தற்கு உந்திக்கொடியை அறுத்தல் முதலிய தொழில்கட்கு இன்றியமையாத கத்திகளையும், மற்றும் அரசர்க்காகிய வாட்படை, உடைவாள், கைவாள், சமுதாடுகளையும், எஃகுக் கவசச் சட்டைகளையும், யுத்தத்தில் சிரங்கள் சேதமாகாதபடி காக்கின்ற முகமூடிக் கவசங்களையும், கரங்கள் வெட்டப்படாமலிருப்பதற்கான வாகுவலங்களையும், அம்பு, அம்புராத்தோணி, வில் முதலியவைகளையும். கதாயுதங்களையும், ஈட்டி, இருப்புலக்கை, மழு, சக்ர, வச்ராயுதங்களையும், சூலம், வேல் முதலிய கைவிடு படைகளையும், போர்க்கோடரி முதலிய கைவிடாப் படைகளையும், அங்குசம், கடிவாளங்களையும், பகைவர்களைப் பிணிக்கும் கை, கால் விலங்குகளையும், கடப்பாரை, மண்வெட்டி, கோடரி, குறடுகள், சங்கிலிகள், ஆணிக்கோல்கள், படிக்கற்கள், இரும்புப்பெட்டகங்கள், பூட்டுத் திறவுகோல்கள், வண்டிகள், தேர்கள், இரதங்களுக்கான இரும்பு அச்சுக்கள், கதவின் கீல்கள், முளைகள், தாழ்ப்பாள்கள், இன்னும் திரைகடலில் ஓடும் கப்பல்கள், தோணி, ஓடம் ஆகியவைகளுக்கான செம்புக்கவசங்கள், பலதரப்பட்ட ஆணிகள் முதலிய பலவற்றைச் செய்து கொடுப்பவர்களாவர்.

சனக ரிஷி முதலாகக்கொண்டு இருபத்தைந்து ரிஷி கோத்திரத்தில் பிறந்த மரவினைக்காரர்களாய தச்

கள் சிற்ப சாஸ்திர ரீதியாக நிலங்களை உழுதற்குக் கலப்பை களையும், யாகாக்கினியில் அவிசொரிதற்கு ஸுர்க்கு என்னும் நெய்த்துடுப்புக்களையும், வில்லுகளையும், வண்டி, இரதச்சக்கரங்களையும், தேர், இரதம், வாகனாதிகளையும், பாரங்களைச் சுமக்கும் வண்டிகளுடன் அலங்கார பவனி வரும் அஸ்வங்கள், ரிடபங்கள் பூட்டப்படும் வண்டிகளை யும், பெட்டகங்கள், இரணபேரி, ஜெயபேரி, துந்துபிகளை யும், பறைகளையும், மத்தளம், வீணை, யாழ், தம்பூறு, புல்லாங்குழல் முதலிய வாத்தியங்களையும், இடக்கை வாத்தியங்களையும், குடை, ஆலவட்டம், சிற்றாலவட்டம், கொடிமரம் போன்ற விருதுகளையும், தண்டு கமண்டலங் களையும், பாதக்குறடுகளையும், வீடுகளுக்கான விட்டங்கள், ஸ்தம்பங்கள், தூண்கள், பலகணிகள், கதவுகளையும், கட்டில்கள், முக்காலிகள், நாற்காலிகள், பீடங்கள், தூங்கு மஞ்சங்கள், சிங்காதனங்கள், ஊஞ்சல்கள், குடும்பத்துக்கான நானாவித தட்டுமுட்டுக்கள், முதலிய பற்பல உபயோகமான சாமான்களையும், மானசம்ரக்ஷணார்த்தம், பலவித கைத்தறி, இராட்டினத்தறி ஆகி யவற்றையும் லோகோபகாரார்த்தமாகச் செய்து தருபவர்க ளாவர்.

**அபுவனச** ரிஷி மூலமாக வந்த இருபத்தைந்து ரிஷிகளின் சந்ததியார்களின் வழியே உலோகங்களால் ஆகிய சமஸ்தமான அலங்கார தீபங்கள், பலவகைப்பட்ட மணிகள், திருச்சின்னங்கள், தாம்பிரம், பித்தளை, வெண் கல முதலியவற்றாலாகிய மிடாக்கள், கொப்பரைகள், சேமக்கலங்கள், அழகிய கலசங்கள், பற்பல விதமான, குடங்கள், கொம்புகள், தாரைகள், தாளங்கள், கிண்ணங் கள், பலவித ஜலபாத்திரங்கள் ஆகிய நானாவித தட்டு முட்டுகள், ஆலய விக்ரகாதி கவசங்கள், செப்பேடுகள் ஆகியனவற்றை பூமியிலுள்ள பலவாகிய சமயத்தோர்கள் விரும்புகின்றவாறு செய்துகொடுப்பவர்களாவர்.

**பிரத்னச** ரிஷி முதலாகிய இருபத்தைந்து ரிஷிகளின் கோத்திரங்களில் பிறந்தவர்கள், சிற்ப சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவாறு கெர்ப்பக்கிரகங்களையும், அர்த்த மண்டப, மஹாமண்டப, சபாமண்டபங்கள் முதலியவற்றையும், தேவதா நிர்மாணங்களையும், பலவகை மதங்களுக்குரிய பிரதிஷ்டைகளையும், நாடுகளையும், நகரங்களையும், கிராமங்களையும், நெடுமலையாலும் விரிநதிகளாலும் சூழப்பட்ட சிற்றூர்களையும், முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் சூழ்ந்த நாடுகளையும், அவைகளுக்கேற்ற கோவில்களையும், கோபுரங்களையும், ஸ்தூபிகளையும், சந்திர காந்தக் கற்களாலும், பளிங்குக் கற்களாலும், ஆகிய மேடைகளையும், மதில்கள், அகழிகள் சூழ்ந்த கற்கோட்டைகளையும், அரண்மனைகளையும், ஆஸ்தான மண்டபங்களையும், தரும சத்திரங்களையும், நாடக நடன சாலைகளையும், யக்ஞ சாலைகளையும், வித்தியாசாலைகளையும், வேதிகைகளையும், திருக்குளங்கள், தடாகங்கள், கிணறுகள், குகைகள், ஆகியவற்றையும், வாழையடி வாழையென மக்கள் பாரம்பர்யமாக வாழ்தற்குரிய, மாளிகைகள் சிற்பத்தாலாகிய சிறந்த வீடுகளையும், நிர்மாணித்து லோகத்தைப் பரிபாலிப்பவர் ஆவார்கள். மேலும் இவர்கள் மக்கள் மோட்ச சாதனத்தைச் சுலபத்தில் அடைவதற்கான, சகுணோபாசனைக்குரிய பற்பல கடவுளர்களை மக்கள் பரிபக்குவத்திற்கேற்றவாறு வழிபடுவதற்குச் செய்து கொடுத்தும், இன்னும் செய்து கொடுப்பவர்களும் ஆவார்கள். புண்ணிய பூமியாகிய இந்நாட்டின் கண்ணுள்ள, சிற்பத்தாலாகிய எண்ணிறந்த தேவாலயங்கள், இச்சந்ததியாரின் திரிகால ஞானத்திற்கும், உயரிய தொழில் வன்மைக்கும் போதிய சான்றுக்களாம்.

இறுதியாக, **சுபர்ணச** ரிஷி மரபில் வந்த இருபத்தைந்து ரிஷிகளின் சந்ததியார்கள், ராஜக்கிரீடங்களையும், செங்கோல்களையும், மார்பணிகளையும், பதக்கங்கள், மகர

குண்டலங்கள், காதணியாகியவைகளையும், கரசரணுதிகளில் அணியக்கூடிய சகல விசித்திரமான ஆபரணங்களையும், முக்கியமாக, மனை, மனைவி, மக்கள், குலம், கோத்திரம், சட்டப்படி வார்சு பாத்தியம் முதலியவைகளைச் சித்திக்கச் செய்வதும், மாதர், ஆடவர்களைக் கற்பின் வழியும், கிரகதாச்சிரம தர்மம் வழுவாதும் நடக்கச் செய்வதற்கான திருமாங்கல்ய முத்திரைகளையும், நவமணிகள் பதிக்கப்பெற்று ஒளி வீசும் பலப்பட்ட மோதிரங்கள், மாதாணிகளையும், அவரவர்கள் விரும்பியவாறும், பொருளாதாரத்துக் கேற்றவாறும், செய்து கொடுத்து ஒவ்வொரு கிரகத்தையும் சிறிய பொக்கிஷச்சாலையாகவும், அவைகளை வேண்டும்போது பண்டமாற்றல் மூலம், விற்று பணமாக்கவும் செய்து தரக்கூடிய ஆற்றல் பெற்றவர்கள் ஆவார்கள்.

இன்று கால மாறுபாட்டினுல், மேலே கூறிய சிற்சில தொழில்களை இதர சமயத்தினரும், ஜாதியார்களும் ஏக தேசத்தில் செய்துவந்தாலும், அச்சமயத்தினர் யாவரும், பிற ஜாதிமக்கள் அனைவரும் அத்தொழில்களை விஸ்வகர்ம சந்ததியார்களைப்போல் குல உரிமையாகக் கொண்டவர்களல்லர். உதாரணமாக, பொன் தொழில் செய்யும் ஒரு முஸ்லீம் அல்லது ஆதித்திராவிட தொழிலாளியிடமிருந்து திருமாங்கல்ய முத்திரையை ஏற்றுக்கொள்ளும் இந்துக்கள் அல்லது இதர சாதியர்கள் இந்நாட்டில் இல்லை. கிரக பூஜைக்குரிய விக்ரகங்களை, இயற்றிக்கொடுக்கும் அற்புதத் தொழில் ஆற்றல் இதர ஜாதியர்களுள் சிலருக்கிருப்பினும், குயவர் போன்ற வனைதற்றொழிலாளிகளும், மண்பிரதிமை செய்வோரும் நாட்டில் மலிந்திருப்பினும் அவர்களைக் கொண்டு செய்து வாங்கி அவற்றை வழிபடுவோர்களை இந்நாட்டில் காண்டற் கூடுமோ? அன்றியும், மேல்நாட்டாரால் செய்யப்படும் பளிங்குப் பிரதிமைகளையும், சீனம், ஜப்பான் நாட்டார் செய்தனுப்பும், பளிங்கு, பீங்கான் முதலியவைகளாலாகிய விக்ரகங்களையும் ஆலயங்களிலும்,

கிரகங்களிலும் வைத்து நம் நாட்டார் பூஜித்து மோட்ச சாதனத்தைப் பெற நினைக்கின்றார்களில்லை. எனவே, மேலே விவரித்துக் காட்டியவற்றால் விஸ்வகர்மப்பிராமணர்கள் இந்நாட்டின், முன்னேற்றத்திற்கும், நாகரீக வளர்ச்சிக்கும் எத்துணை உதவிபுரிந்திருக்கின்றார்களென்பதையும், இன்றும் உதவி வருகின்றார்கள் என்பதையும், நன்றி, மனச்சான்றுடைய எம்மக்களும் ஒப்புவார்களென்பது திண்ணம்.

---

## 8. விஸ்வகர்மப் பிராம்மண வேதாதிகார விளக்கம்

முந்திய அத்தியாயங்களில் விஸ்வப்ராம்மண கோத்திர சூத்திர பிரவரம் முதலியவைகளையும் பஞ்ச தொழில்களையும் விவரித்துக் கூறினோம். இனி அந்த விஸ்வப்பிராம்மணர்களுடைய வேதாதிகாரங்களைக் குறித்து இந்த அத்தியாயத்தில் விவகரிப்போம்.

ஸ்காந்தம் நாகரகாண்டம்-13 ம் அத்தியாயம் :
" தேவதேவ மஹாதேவ ஸர்வக்ஞஜகதாம்பதே "

எனத் தொடங்கிப் பின் 11ம் சுலோகம் முதலாக வரும் கீழ்க்கண்ட சுலோகங்களை ஆராய்வோம்.

17. தம் நஸ்மரேன் நஸ்ப்ருசே-ச்சதஸ்ப் ருஷ்ட்டாரம்
ஜாதம்பஞ்சப் ரஹ்மகுலம்-ஸ்ந்தானெள விஸ்வகர்மண :

18. நித்யகர் மாஷ்டகயுதம்-கர்மஷோடச நிஷ்டிதம்
மஹர் மயஸ்தத்தா த்வஷ்ட்டா-சில்பீவிஸ்வக்ஞவித்யபி

19. விஸ்வகர்ம ஸுதாஹ்யேதே-பஞ்சஸ்ருஷ்டிப்ரவர்த்தக :
க்ருதேது மாநஸாஸ்ருஷ்டி-ஸ்த்ரேதாயாம்த்ருஷ்டிசாதனம்

20. த்வாபரே மந்த்ர ஸ்ருஷ்ட்டி :-கலௌது கரஸாதனம்,
கர்ப்பாதானம் நிஷேகேது-தர்யே பும்சவனக் ரியா

21. மாஸாஷ்டமேஹ்னி மந்தோ-ஜாதேவைஜாதகர்மச
நாமகர்மை காதசேக்ணி-ஷஷ்டே மாசேன்னபோஜனம்
22. வர்ஷேத்ரி தியெசௌளம்-ஸ்யா-தஷ்டமே சோபநாயனம்,
வேதவ்ரத சதுஷ்க்கம்ச-கோதானம் சோடஸேததா
23. வத்ஸரே ஸ்நாதகம் கர்ம-வைவாஹ : பைத்ருமேதிக :
இதிசோடச கர்மாணி வம்ஸ்யானும் விச்வகர்மண :
28. பாலாசம் மனுதண்டஞ்ச-மயதண்டஞ்சபிப்பல :
த்வாஷ்டு ரௌதும் பரோதண்டோ-நையக்ரோதஸ் [சில்பின :
29. காதிரஸ்தக்ஷ தண்டஸ்யா-தண்டானுமிதி நிஸ்சயம்.
வசந்தே மனுவம்ஸ்யானும்-க்ரீஷ்மே மயபுவாம்ததா
30. த்வஷ்ட்ருனும் ஸரதி : ப்ரோக்தம், மதாப்ராவிர்த்துசில்பினும்
சிசிரே தக்ஷகானுஞ்ச-ஹ்யுபநயனுதிகம் விது :
31. மாகபால்குண வைசாகே சைத்ரே ஜ்யேஷ்டேச ச்ராவணே
கார்த்திகே மார்க்கசீர்ஷேச உபநயனக் ரமோத்தமம்
32. மனோரஜத ஸூத்ரஞ்ச-மயானும்:பத்ம ஸூத்ரகம்,
த்வஷ்டுர்வைதாம்ப்ரஸூத்ரஞ்ச-சில்பீகார்ப்பாஸஸூத்ரகம்
33. தக்ஷகோ ஹேமஸூத்ரம்ச-ஏவம்ஸூத்ரம் ப்ரகீர்த்திதம்
ஸாமவேதோ மனுனுஞ்ச மயானும் யாஜுஷம்ததா

ஷை சுலோகங்களின் தாத்பரியம் :

ஸ்ரீ பரமேஸ்வரனே சண்முகன், யாவுந் தெரிந்த தேவதேவனுகிய ஓ மஹாதேவா! விஸ்வகர்ம வம்சத்தார்களுடைய சதாசாரத்தை நான் அறியும்படி சொல்லுமென்று கேட்க ஸ்ரீ தேவதேவனுகிய பரமேஸ்வரன் இங்ஙனம் சொல்வதானுர்.

"நீ வினவியது வேதசாஸ்திரங்களினுலே நிர்ணயக்கப்பட்டது. ஸ்ரீ விஸ்வகர்மாவின் பஞ்சமுக தியானத்தால் ஐந்து பிரம்மகுலம் உண்டாயிற்று. அந்த விஸ்வகர்மாவின் சந்ததிகளாகிய ஐவர்களும் சிருஷ்டிப் பிரவர்த்தர்கள்.

அவர்கள் மனு-மய-த்வஷ்ட்ட-சில்பி-விஸ்வக்ஞ என்னும் நாமத்தை வகித்தவர்கள். அவர்களுக்கு, கிரேதாயுகத்தில் மானஸ சிருஷ்ட்டி, திரேதாயுகத்தில் நேத்திர சிருஷ்டி, துவாபரயுகத்தில் மந்திரசிருஷ்டி, கலியுகத்தில் அஸ்த சிருஷ்ட்டி, (கையினால் செய்வது) இவ்விதம் அவர்களது சிருஷ்ட்டிக் கிரமம் விதிக்கப்பட்டுள்ளது.

இன்னும் இவர்களுக்கு நிஷேக காலத்தில் கர்ப்பா தானம், கர்ப்பமடைந்த நான்கா மாதம் பும்சவனம், எட்டா வது மாதத்தில் சீமந்தம், சிசு பிறந்தபோதே ஜாதகர்மம், பதினோராவது தினத்தில் நாமகரணம், ஆறாவது மாதத்தில் அன்னப்பிராசனம், மூன்றாம் வருடத்தில் சூடாகருமம் அதாவது குடுமி வைத்தல், எட்டாம் வருடத்தில் உபநயனம், (பூணூல் கல்யாணம்), பதினாறாவது வருடத்தில் வேத விரதங்கள், நான்கு கோதானகர்மம், ஸ்நாதகம் அதாவது குருகுல வாசத்தில் வேதமோதி முடிந்தபின் ஒரு வருஷம் வெள்ளைவஸ்திரம் சந்தனம் மலர்மாலை முதலியன வணிந்து தீர்த்த யாத்திரை செய்வது, அப்பால் விவாகம், பிதரு மேதம், (பிதுர்களைக் குறித்துச் செய்யும் ஓர் யாகம்) இந்த விதமாக விஸ்வகர்ம வம்சத்தார்கள் சோடச கர்மங் களும் வேத விதியாகச் செய்யவேண்டும். இவை 20-வது அத்தியாயத்தில் மேலும் விளக்கப்பட்டுள்ளன.

இனி அவர்களின் தண்டவிதான மாவன :

மனுவுக்கு பலாசத்தண்டம், மயனுக்கு அரசுத்தண்டம், துவஷ்ட்டாவுக்கு அத்திமரத்தண்டம், சில்பிக்கு ஆலின் தண்டம், விசுவக்ஞனுக்கு கருங்காலித்தண்டம், இம்முறை யாக மனு முதலானவர்களுக்குச் சொல்லிய தண்டவிதான மாகும்.

இனி உபநயன காலவிதனம்.

வசந்த காலத்தில் மனுவர்களும், கிரீஷ்மருது காலத் தில் மயன்களும், சரத்ருது காலத்தில், துவஷ்ட்டர்களும்,

வர்ஷா காலத்தில் சிற்பிகளும், சிசிரருது காலத்தில் விஸ்வக்ஞர்களும் உபநயனம் செய்யவேண்டிய காலமாகும்.

மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆடி, ஆவணி, கார்த்திகை, மார்கழி மாதங்கள் உபநயனத்திற்கு சாதாரணமாகப் பொருந்தியமாதங்கள்.

இனி பூணூல் விதானம்.

மனுவுக்கு வெள்ளிப்பூணூல், மயனுக்கு தாமரை நூற் பூணூல், துவஷ்டாக்களுக்கு தாம்பிரத்தாலாகிய பூணூலாகும். சிற்பிகளுக்கு பருத்திநூற்பூணூலாகும். விசுவக்ஞர்களுக்குப் பொன்னாலாகிய பூணூலாமாகும். இந்த விதமாக இவர்கள் பூணூல் தரித்தல் விதியாம். இன்னும் லிங்க புராணத்தில் பஞ்சவிர்த்திய விவரம் : வேதம் முதலியவைகளிலும் பஞ்சால பிராம்மணோற்பத்தி மார்க்கண்டம் 51-ம் அத்தியாயம் லிங்கபுராணம் சைவாகமம் 7-ம் அத்தியாயம், 18 முதற் கொண்ட 4 சுலோகங்களிலும்,

18. அயசாம்ச்ச மனு : கர்த்தா-காஷ்டகாரோ மயஸ்ம்ருதா :
த்வாஷ்ட்ரகம் தாம்ர யகர்த்தாச-சிலாகர்த்தாச சில்பிக :

19. ஸைவர்ண ஸ்வர்ணகாரஸ்ச்ச-பஞ்சானும் கர்மபஞ்சகம்.
யோவேத பஞ்சகர்மாணி-ஸர்வபாபை : ப்ரமுச்யதே

20. ருக்வேதஸ்ச்ச மனோஸ்யைவ-யஜுர்வேதோ மயஸ்யச
ஸாமவேத-த்வாஷ்ட்ரகஸ்ய-த்வ சர்வாசில்பிகஸ்யச

21 ஸாங்க்யம்ஞாபிதவே தேரௌஸன-ஸைவஜ்ஞானும் ப்ராகீர்த்திதா:
பஞ்சவேதாஸ்ச்ச யோவேத-ஸாயுஜ்யம் லபதேநர :

இச் சுலோகங்களின் தாத்பரியம் : மனுவுக்கு இரும்பு வேலையும், மயனுக்கு மரவேலையும், கன்னானுக்கு செம்பு வேலையும், சில்பிக்கு கல்வேலையும், விஸ்வக்ஞனுக்கு பொன் வேலையும் உரியவைகளாம்.

மனுவுக்கு ருக்குவேதமும், மயனுக்கு யஜுர் வேதமும், துவஷ்டாவுக்கு சாமவேதமும், சில்பிக்கு அதர்வண

வேதமும், விஸ்வஜ்ஞனுக்கு சுழுமுனைவேதமும் (பிரணவ வேதமும்) உரியவைகளாம். (சுழுமுனையாவது பிரணவப் பொருளாகிய பரம்பொருளை நாடி மனம் நிலைகுலையாது ஒன்றிக்கும் வண்ணம் இருவிழிகளையும் சுழுமுனை நாடி என்று சொல்லும் மூக்கு நுனியில் சேர்த்து வைப்பதோரிட மாதலால் சுழுமுனை யென்பதை பிரணவமெனச் சிலேடைப் பொருளாற் குறிப்பித்துள்ளாரென்க. மேலும், யஜுர், சாமம், அதர்வணம், பிரணவம் ஆகிய ஐந்து வேதங்களும் முறையே பிரமச்சரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம், நிஷ்பரம் ஆகியவைகளைப் பிரதிபாதிப்பனவாம். பிரணவ வேதம் 32 அத்தியாயங்களையும் 32 மந்திரங்களையும், ஒவ்வொன்றிற்கும் 118 பாகிய மந்திரங்களையும் கொண்டது. அதன் முடிவான நிலை நிஷ்பரம். அதோமுக தியானமே நிஷ்பர நிலைக்கு அடிப்படை யென்று உணர்க.

ஆகவே, இந்த ஐந்து வேதமுணர்ந்துள்ள விஸ்வப் பிராம்மணர்களை தியானிப்பவர்கள் அதாவது விஸ்வாசிப்பவர்கள், சாயுஜ்ய பதவியையடைவார்கள் என்பதாம். ஆகவே மேலே கண்ட பிரமாணங்களால் விஸ்வப்ராம்மணர்களது வேதாதிகாரம் விளக்கப்பட்டது.

---

## 9. விஸ்வகர்மப் பிராம்மண யாகாதிகார விளக்கம்

இந்த அத்தியாயத்தின் கீழ் விஸ்வகர்மாவின் பஞ்சமுகத்திலிருந்து உற்பவித்த ஐந்து ரிஷிகளின் வழியே வந்த விஸ்வகர்ம்ம பிராமண குலோற்பவர்களுக்கு, வேதாதிகாரம் எவ்வாறு வந்ததென்பதைக் குறித்தும், எந்தெந்த வேதங்கள் எவ்வழியில் வந்தன என்பதைக் குறித்தும் அவ்வேதங்களை எவ்வாறு ஓதுவதென்பதைப் பற்றியும் இந்த அத்தியாயத்தில் விவரித்துக் கூறுவோம்.

இதற்கு முந்திய அத்தியாயத்தில் மேற்குறித்த ரிஷி யாதியோரின் கோத்திர சூத்திர சாகை, பிரவரங்கள் வெகு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. பஞ்சமுகத்திலுற் பவித்த மனு, மய, துவஷ்ட்ட, சில்பி, விஸ்வக்ஞராகிய பஞ் சப்ரம்மாக்களுக்கும், அவர்கள் சந்ததியார்களாகிய விஸ்வ கர்மப் பிராம்மணர்களுக்கும் உரிய, வேதங்கள் முறையே - ருக்கு, யஜுர், சாமம், அதர்வணம், பிரணவம் என்றும் கூறப்பட்டுள்ளது.

வேதங்கள் இவ்வாறு பிரிக்கப்பட்டிருந்தபோதிலும், இந்த ஐந்து ரிஷிகளும், எல்லா வேதங்களேயும் - ஐயந்திரி பற ஓதியுணர்ந்தவர்கள் என்பது ஒப்பமுடிந்த உண்மை யாம். அன்றியும் உபவேதங்கள் நான்காகிய, ஆயுர்வேதம், அருத்த வேதம், தனுர்வேதம், காந்தர்வ வேதம் இவைக ளோடு வேத அங்கமாகிய, சிட்சை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தஸ் இவைகளேயும் கற்றுணர்ந்தார்கள். அல்லாமலும், அவர்களது தொழி லுக்கு இன்றியமையாத உபவேதங்க ளெனப்படும் 32-சில்பங்களேயும் கற்றுத் தொழில்வன்மை பெற்றிருந் தார்கள் என்பது வேத சம்மதம் பெற்ற உண்மை. சிற்ப நூலில் தேர்ச்சி பெறவே, ஆகமங்கள் 28-யும் ஓதியுணர்ந் தார்கள். அவையாவன :

| | | | |
|---|---|---|---|
| காமிகம் | சகத்திரம் | வீரம் | புரோற்கீதம் |
| யோகசம் | அஞ்சுமான் | ரௌரவம் | லளிதம் |
| சிந்தியம் | சுப்ரபேதம் | மகுடம் | சித்தம் |
| காரணம் | விஜயம் | விமலம் | சந்தானசர்வோத்தமம் |
| அசிதம் | நிசுவாசம் | சந்திராஞானம் | பாரமேசுரம் |
| தீப்தம் | ஸ்வாயம்புவம் | பிம்பம் | பேதம் |
| சூக்குமம் | அனலம் | ஸ்ரீமுகம் | வாதுளம், ஆ 28 |

மேற் கண்டவாறு வேதசாஸ்திரங்களே யுணர்ந்த ஷ ரிஷிகளுக்கும் அவர்கள் சந்ததியார்களுக்கும் வேத பூர்வமாக

யாகாதிகாரமுண்டென்பதை இதனடியில் வரும் மந்திரங்க ளால் விளக்குவோம்.

கிருஷ்ணயஜுர் வேதம் 4-ம் காண்டம், 3 வது ப்ரச னம் 5 வது பஞ்சாதி :

1. ப்ராசீதிசாம், வசந்தருதூனா மக்னிர்தேவதாப்ரஹ்மத் விணம், த்ரிவ்ருத்ஸ்தோமஸ் ஸஉ பஞ்சதச வர்த்தனி ஸ்த்ர்ய விர் வய : க்ருதமயானும் புரோவாதோ வாதஸ் ஸானகரிஷி :

2. தக்ஷிணாதிசாம்க்ரீஷ்ம ருதூனும் இந்த்ரோதேவதாக்ஷத்ரந் த்ரவிணம் பஞ்ச தசஸ்தோமஸ் ஸஉஸப்த தசவர்த்தனிர்-திவ்ய வாட்வய ஸ்த்ரேதாயானும், தக்ஷிணாத்வாதோ வாதஸ் ஸநாதன ரிஷி :

3. ப்ரதீசீதிசாம் வர்ஷாருதூனும், விஸ்வேதேவா தேவதா விட்த்ரவிணம் ஸப்ததசஸ்தோமஸ் ஸஉ, ஏகவிம்ச வர்த்தனிஸ் த்ரி வத்ஸோவயோத் வாபரோ - யானும் பஸ்சாத்வாதோ வாத ஹபூனசரிஷி :

4. உதீசீதிசாஞ் சரத்ருதூனும், மித்ரா வருணௌ தேவதா புஷ்டம் த்ரவிண மேகவிம்சஸ்தோ மஸ்ஸஉ த்ரிண விவர்த்த னிஸ்துர்ய வாட்வய ஆஸ்கந்தோ யானு முத்தராத் வாதோவாத : ப்ரத்னருஷி :

5. ஊர்த்வாதிசாகும் ஹேமந்தசிசிரா ருதூனும் ப்ருஹஸ் பதிர் தேவதா, வர்ச்சோத்ரவிணம் த்ரிணவஸ்த்ரேஸ்தோமஸ் ஸஉத்ரய ஸ்த்ரிகும்சவர்த்தனி : பஷ்டவாட்வயோ பிபூயானும் விஷ் வக்வாதோ வாதஸ்ஸுபர்ணரிஷி :

6. பிதர : பிதா மஹா : பரேவரே தேன :, பாந்து தேவிஹ வந்த்வஸ்மின், ப்ரஹ்மம் ந்ஸ்மின் க்ஷத்ரேஸ்யா மாசிஷ்யஸ் யாம் புரோதாயா மஸ்மின் கர்மண்ய ஸ்யாம் தேவஹூத்யாகும் ஸ்வாஹா ஹேபிதா :, ஹேபிதா மஹாஹா ஹேபரே ப்ரபிதா மஹாதய :, வபரேப்ராது புத்ராதய :

மேற்கண்ட மந்திரங்களின் பொருள் :

கிழக்குத் திக்கில் யாகவேதிகைக்கு செங்கல் வைக்கும்போது அறிக்கும் மந்திரத்தின் கருத்து :

ஓ இஷ்டகமே!, பொற்கல், செங்கல் இவைகளின் அதிதேவதையே! நீ, திசைகளில் கிழக்குத் திக்கும், ருதுக்களில் வசந்த ருதுவும், தேவதைகளில் அக்னியும், தனங்களில் பிரம்ம ரூபதனமும் ஸ்தோமங்களில் திரிவிருத் என்கிற ஸ்தோமமும், அதனுடைய சொரூபமும், அந்த திரிவிருத்து என்னும் மந்திரமானது இனிவரப் போகும் பஞ்சதஸ்தோமப் பிரவர்த்தகமும், பஹிஷ்ப்பவமான ஸ்தோத்திரத்தில் திரிவிருத்து என்னும் ஸ்தோமம் பிரவர்த்தித்த பிறகு, பைசார்யஸ்தோத்திரத்தில் பஞ்சதசஸ்தோமம் பிரவர்த்தித்துக் கொண்டிருக்கிறதும், அந்தப் பிரகாரம் பிரவர்த்தித்து செய்யப்பட்ட மந்திர சக்தியும், வயதுகளில் ஒன்றரை வருஷங்களின் சொரூப வயதும், யுகங்களில் கிரேதாயுகமும், வாயுக்களில் கீழ் காற்றும், ரிஷிகளில் சானகரிஷியும் நீரே. அப்படிப்பட்ட **சானகரிஷியாகிய** நீர் மஹானுபாவராயிருக்கிறீர்.

தக்ஷிண (தெற்கு) திக்கில் இஷ்டகங்களை ஏற்படுத்துகிற காலத்தில் பிரவர்த்திக்கிற மந்திரார்த்தம்.

ஓ இஷ்ட்டகமே! நீ திக்குகளில் தக்ஷிண திக்கும் (தெற்கு திசையும்) ருதுக்களில் கிரீஷ்மருதுவும் தேவதைகளில் இந்திரனும், தனங்களில் க்ஷத்ரிய ரூபதனமும், ஸ்தோமங்களில் (யாகங்களில்) பஞ்சதசஸ்தோமமும், மாத்தியந்தின பவமானஸ்த்தோத்திரத்தில் பஞ்சதசஸ்தோமங்களையமர்த்தி, மேல் வரப்போகிற, ப்ருஷ்டுப் ஸ்தோமத்தில் சப்ததசஸ்தோமமும் செய்யவேண்டும். அப்போது பஞ்சதசஸ்தோமம் சப்ததசஸ்தோமத்திற்குப் பிரவர்த்தகமாகும். அந்த பிரவர்த்தன சக்தியும் நீயே! வயசுகளில் இரண்டு வருஷ வயதும், யுகங்களில் திரேதாயுகமும், வாயுக்களில்

தென் காற்றும், ரிஷிகளில் சநாதன ரிஷியுமாயிருக்கிறாய். நீர் மஹாதபாவரே.

மேற்குத் திக்கில் இஷ்டகங்களைச் செய்யும்போது பிரவர்த்திக்கும் மந்திரார்த்தம்.

ஓ இஷ்டகமே! நீ! திக்குகளில் மேற்குத் திக்கு, ருதுக்களில் வர்ஷருது, தேவதைகளில் விஸ்வேதேவதைகள், தனங்களில் மனுஷ்யரூபதனம், ஸ்தோமங்களில் ஸப்த தசஸ்தோமம். 21-வித ஸ்தோமப் பிரவர்த்தகரும் நீரே! வயதுக்களில் மூன்று வருஷத்திய வயது, யுகங்களில் த்வாபரயுகம், வாயுக்களில் மேற்கு நோக்கிய வாயு. ரிஷிகளில் அபுவன ரிஷியாயிருக்கிறீர். நீரும் மகாதபசையுடையவராவீர்.

வடக்குத் திக்கில் செங்கல் வைத்து ஆராதிக்கும் போது பிரவர்த்திக்கும் மந்திரார்த்தம்.

ஓ இஷ்டகமே! நீ, திக்குகளில் வடக்குத் திக்கு, ருதுக்களில் சரத்ருது, தேவர்களில் மித்ராவருணர்கள். தனங்களில் சுக்ரரூபதனம் ஸ்தோமங்களில் 21-ஸ்தோமம். 27-ஸ்தோமப் பிரவர்த்தகரும் நீயே! வயதுகளில் மூன்றரை வருடவயது. யுகங்களில் கலியுகம், காற்றுகளில் வடக்குக் காற்று, ரிஷிகளில் ப்ரத்னவ ரிஷியாகும். நீவிர் மஹாதபசியேயாகும்.

மேல் நோக்கிய திசையில் (மத்தியஸ்தானத்தில்) செங்கற்பொருத்தி ஆராதிக்கும்போது பிரவர்த்திக்கிற மந்திரார்த்தம்.

ஓ இஷ்டகமே! நீ திக்குகளில் மேல்நோக்கிய திக்கு, ருதுக்களில் ஹேமந்த சிசிர ருதுக்கள், தேவதைகளில் பல ரூபதனம். ஸ்தோமங்களில் 27 வதுஸ்தோமம், 33-ஸ்தோமப் பிரவர்த்தகரும் நீயே! வயதுகளில் 4 ஆண்டுகளுள்ள வயதாகும். யுகங்களில் கலியவசான காலயுகமாகும். காற்றுகளில் சுழல்காற்று. ரிஷிகளில் ஸுபர்ணரிஷியாகும். அவரும் மிக தபஸம்பன்னரே.

ஓ தகப்பன்மார்களே! பாட்டன்மார்களே! ஓ! முப்பாட்டன்மார்களே! ஓ சகோதரமார்களே! ஓ குமாரர்

களே! தேவதாரூபமாக நீங்கள் எத்தனை பேர்களுண்டோ அத்தனை பேர்களும் எங்கள் பயத்தை யொழித்து எங்களைக் காப்பாற்றுவீராக. அன்னவஸ்திராதிகளால் போஷிப்பீர்களாக. இப் **பிராம்மண ஜாதியினிடத்திலும்**, க்ஷத்திரிய ஜாதியினிடத்திலும், இந்த பிரார்த்தனையிலும் இந்த ராஜ பௌரோஹிதத்திலும், தேவதையை யழைக்கும் இந்த கர்மங்களிலும் ஓ இஷ்டகமே! உன்னை அழைக்கிறேம் என்று விஸ்வப்ராம்மணர்களின், யாகாகிருத்தியங்களைத் தெள்ளிதில் விளக்குகின்றன.

மேற்கண்ட யாகங்களைப் பற்றிய மேலும் சில விவரங்கள்.

### இஷ்டக விதானம்

யஜ்ஞவேதிகை நிர்மாணத்திலும் தேவாலயம் விமானம் முதலானவைகளை ஸ்தாபிப்பதிலும் (அமைப்பதிலும்) **வேதோக்தமந்திர பூர்வகமாய்** செங்கல் முதலியவைகளை வைப்பது சாஸ்திர ரீதியாக யிருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இந்த செங்கல்களின் பிரமாணத்தைக் குறித்து, அக்கினிபுராணம் 241-ம் அத்தியாயத்தில் கூறுவதாவது: பக்குவமாக வெந்த செங்கல்கள் பன்னிரண்டங்குல உயரம் அல்லது நீளம், ஒன்பது அங்குல முடைய அகலம், இரண்டங்குல கனம் உடையதாயிருக்கவேண்டும். அவை கருங்கற்களைப்போல கடினமுடையதாக யிருக்கவேண்டும். அதர்வண வேதயுக்தமாகிய ஸ்ரீ சூக்த மந்திரத்தினால் அந்த செங்கற்களை பரிசுத்தத்துடனும், அமுத்தமாகவும் சுத்தமான மண்ணினாலாகிய சாந்தினால் சக்தியுடன், ஸ்தாபிக்கவேண்டும். இன்னும் ஷை புராணத்திலேயே விகலாங்க மில்லாமல், அதாவது உடைந்து மூளிபடாமல்பூரணமானதும் ஆங்கீரஸ முனிவர்க்கு புத்திரியான ஓ இஷ்டகமே (செங்கல்லே) உன் இஷ்டமாகிய அனுமதியைக் கொடுப்பாய். உன்னை பிரதிஷ்ட்டை செய்கிறேன் என்னும் இந்த கருத்துள்ள மந்திரத்தினால் பிரதிஷ்டிப்பதனால் ஆங்கீரஸ முனி

வருக்கு புத்திரிமுறையாக வர்ணித்து அவ்வம்மையின் புத்திரனாகிய விஸ்வகர்மாவைத் துதிக்கும்படிச் சொல்கின்றது.

இன்னும் ஸ்ரீபாகவதம்-ஒன்பதாம் ஸ்கந்தம்-2-ம் அத்யாயம்: இந்த யஞ்ஞத்திற்கு எந்த பாத்திரங்களுண்டோ அவைகளெல்லாம் பொன்னினால் செய்யப்பட்டதும் பிரகாசிப்பதுமானதா யிருக்கவேண்டும். இதுவுமன்றி தாண்டிய மகா ப்ராம்மணத்தில் "ஸௌவர்ணம் - ஸ்ருசம்-ஸாமகாய ததாதி" என்று பொன்னால் செய்யப்பட்ட சுருக்கு என்னும் யாக பாத்திரத்தை அங்கு சாமகானம் செய்துகொண்டு அத்வர்யுவாக யிருக்கும் சாமகுண்ட இலிருக்குக் கொடுக்கிறான் என்று கூறுவதினால், ஸுவர்ண பாத்திரம் உபயோகிப்பதைப் பற்றி விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

ப்ராஸாத (கோவில்) நிர்மாணங்களிலும் ஸ்யனக்ருங்களிடத்தும் பக்ஷியின் ஆக்ருதி (உருவம்) ஆனகுண்ட நிர்மாணத்திற்கும், அல்லது யாக பூமியின் எல்லாமொத்த அளவின் நிர்மாணத்திற்கும் ஆரம்பத்தில் மந்திரபூர்வகமாய் செங்கல்களைப் பரப்புவதற்கே† இஷ்டகோபதானம், அதாவது, செங்கல்லைக்கொண்டு முதலில் கட்ட ஆரம்பிப்பது என்பதாம். மேலே சொன்ன அந்த சுருதியின் சயன யாகத்தின் பக்ஷிரூபமாகிய (கருடனைப்போல் - 54-செங்கல்களைக் கொண்டு கட்டுவதாகிய) குண்டநிர்மாணத்திற்கு, இஷ்டக உபாதான விதிசொல்லப்பட்டிருக்கிறது.

இந்த இஷ்டக உபதானம், பிராணபிருத்சம்ஞ்ஞும் என்றும், நபாணபிருத் சம்ஞ்ஞம் என்றும் இரண்டு விதங்கள். ப்ராணபிருத் ஸம்ஞ்ஞமாகிய இஷ்டகோபதானம் "அயம் புரோபவ" என்னும் மந்திரத்தால், நான்கு மகாதிக்குகளையும் முறையே, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு இந்த திக்குகளை, இஷ்டகோபதானகர்த்தர்களாய் அனுமதித்து அதன் பிறகு ஸயனப்ராஸாதி ஸர்வசில்பாதீஸ்வரனாய் மகாமேதாவியாகிய விஸ்வகர்ம பிரம்ம

ரிஷியை எல்லா யாக பூமியையும் ரக்ஷிப்பதற்கும், எல்லா யக்ஞ கர்மங்களையும் கண்காணிப்பதற்கும் மேல் நோக்கிய திசையில் (அதாவது மத்தியத்தில்) அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட விதமாக பிராணபிருத் ஸம்ஜ்ஞமாகிய இஷ்டகோபதானத்தில் மேலே சொன்னபடி நிர்த்தாரணம் செய்து, "ப்ராசிதிசாம்" என்பது முதலான மந்திரங்களினால் நபானப்ருத் ஸம்ஜஞமாகிய இஷ்டகோபதானம் அனுமதிக்கப்பட்டது.

இதுவும் பிராணபிருத் ஸம்ஜ்ஞத்தைப் போலவே கிழக்கு-தெற்கு-மேற்கு-வடக்கு-ஊர்த்துவம் ஆகிய திசைகளில் முறையே, ஸானக, ஸனாதன அபுவனஸ, பிரத்னஸ, சுபர்னஸவென்னும் ஐந்து ப்ரம்ம ரிஷிகள் அமர்த்தப்பட்டார்கள். இவர்களே விஸ்வகர்மான்வய சம்பூதர்கள், அதாவது விஸ்வகர்மாவினின்றும் தோன்றியவர்களாகிய பஞ்சப்ரம்ம ரிஷிகள். இவர்களைக் குறித்து, "பிராசிதிசாம்" என்னும் மேலே கூறிய மந்திரங்களால் "தசதசோபதாதி" என்னும் யஜுர் காண்டம். **5-2-10**-வது வசனத்தினால் திக்கு ஒன்றுக்குப் பத்து செங்கல்கள் வீதம் வேதிகையை கணக்கோடு கட்டவேண்டுமென்று நிர்த்தாரணம் செய்யப்பட்டுள்ளது. மூன்று அக்னிகளாவன: ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்னி என மூன்று.

**பஞ்ச யக்ஞங்களாவன :**

1. பிரம்மம் - வேதமோதல்.
2. தெய்வம் - தேவர்களின் பொருட்டு ஹோமம் செய்தல்.
3. பூதயாகம் - காக முதலியவற்றிற்கு பலிவைத்தல்.
4. பிதிர்யாகம் - அது பிதுர்களைக் குறித்து தர்ப்பணம் செய்தல்.
5. மானுடயாகம்-அது இரப்போருக்கு உணவு முதலியனவளித்தல்.

**ஆறு - அக்னிகளாவன:**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆரம்பணியம் | 4. | துவிராத்திரம். |
| 2. | க்ஷுத்ரக்ருதி | 5. | தசபேயம் |
| 3. | வியுஷ்ட்டி | 6 | சப்தபேயம் |

எனப்படுவனவாம்.

இனி யாககுண்டவிதானத்தை நிஷ்கரிப்போம்.

பிராம்மணோத்பத்தி மார்த்தாண்டம் 51-ம் அத்தியாயம், பாஞ்சாலப் பிராம்மணோத்பத்திப் பிரகரணம் 12-வது சுலோகம் :

"மனோ : குண்டம் த்ரிகோணஞ்ச, சதுஷ்க்கோணம் மயஸ்யச்ச
வர்த்துலம் த்வாஷ்ட்ரகம் சைவ-ஷட்கோணம் சில்பிகஸ்யவை"

"சைவஞ்ஞாஷ்ட்ட கோணந்து-பஞ்சகுண்டா நிதானிவை,
ஏதானிசைவயோவேத-ஸர்வதோஷாத் விமுச்யதே"

என்று தொடர்வனவாயுள்ள இருபத்தொன்று சுலோகங்களின்பொருள் :

மனுவுக்கு முக்கோணமாகிய குண்டமும், மயனுக்கு நாற்கோணமான குண்டமும், துவஷ்டாவுக்கு வர்த்துலாகார குண்டமும், சிற்பிக்கு அறுகோணமும், விஸ்வக்ஞனுக்கு அஷ்டகோணமுள்ளதுமான யாககுண்டங்களாகும். இவைகளே பஞ்சகுண்டங்கள் எனப்படும். இந்த வேதப்பிரவர்த்தகமான ஐந்து குண்டங்களையும் தியானிப்பவர்கள் சமஸ்த தோஷங்களினின்றும் விடுபடுகிறார்கள்.

மனுவுக்கு வெள்ளிதண்டமும், மயனுக்கு மூங்கில் தண்டமும், துவஷ்டாவுக்கு செம்புதண்டமும், சிற்பிக்கு இரும்புதண்டமும், விஸ்வக்ஞனுக்கு பொன்னலாகிய தண்டமும் உரியவைகளாகும். வேதவிதிதமான மேற்படி

தண்டங்களை நியானிப்பவர்கள் எல்லா பயத்தினின்றும் விடுபடுகிறார்கள்.

மனுவுக்கு வெள்ளிப்பூணூலும், மயனுக்கு தாமரை நூலின் பூணூலும், துவஷ்டாவுக்கு தாம்பரத்தாலாகிய பூணூலும், சில்பிக்கு பஞ்சினூலாகிய பூணூலும், சுவர்ன காரனுக்கு பொன்னினூலாகிய பூணூலும் உரியவைகளாம். வேத சம்மதமான இந்த ஐந்து பூணூல்களைத் தரிப்பவர் கள் சகல பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள்.

மனுவுக்கு இரும்புவேலையும், மயனுக்கு மரவேலையும், கன்னானுக்கு செம்புவேலையும், சிற்பிக்கு கல்வேலையும், விஸ்வக்ஞனுக்கு பொன்வேலையும் உரியவைகளாம். இந்த ஐந்து கர்மங்களைச் சிந்திப்பவர்கள் சமஸ்த பாபங்களினின்று விடுபடுகிறார்கள்.

மனுவுக்கு ருக்குவேதமும், மயனுக்கு யஜுர்வேதமும், துவஷ்டாவுக்கு சாமவேதமும், சில்பிக்கு அதர்வணவேத மும், விஸ்வக்ஞனுக்கு பிரணவவேதமும் உரியனவாம், ஏனைய சுருதிகளில் சாமவேதத்தை மனுவுக்கு உரிமையாகக் கூறப்பட்டிருப்பது சிறப்பு வகையால் என்பது அறியத் தக்கது. ஆகவே, ஐந்து வேதங்களையும் முறைப்படி அறிந்துள்ள பிராம்மணர்களை நியானிப்பவர்கள் சாயுஜ் ஜியத்தை அடைவார்கள். மேற்கண்ட ஆதாரங்களால் இவர் கள் யாகாதிகாரமுடைய தேவப்பிராம்மணர்களென்றும், பாஞ்சாலப் பிராம்மணர்களென்றும் கூறப்படுகிறார்கள்.

இனி யாகங்களைக் குறித்து சிந்திப்போம். யாகங்கள் பதினெட்டு வகைத்தென்றும், இருபத்தொன்று என்றும் வேதங்கள் கூறுகிற்கும். அஸ்வமேதம், ராஜசூயம் போன்ற யாகங்கள் மன்னரால் மேற்கொள்ளக்கூடியவை. இதர யாகங்கள் பிராம்மண, க்ஷத்திரிய, வைசியர்களால் மேற்கொள்ளத்தக்கவை. பிந்திய இரு வகுப்பாருக்கும் ஆதிப்பிராம்மணர்களான பௌருஷேயர்களே அக்கிருத்தி யங்களை நடாத்திவைக்கும் உரிமையுடையவராவர்.

யாகம் - 18 - ஆவன :

(1) ஜோதிஷ்டோமம், (2) அங்கிஷ்டோமம், (3) உக்தியம், (4) சோடசி, (5) வாஜபேயம், (6) அதிராத்திரம், (7) ஸோமயாகம், (8) சாதுர்மாசியம், (9) மைத்ர மேதம், (10) சவுத்ராமணி, (11) பௌண்டரீகம், (12) அங்கிரசயம், (13) ராஜசூயம், (14) அஸ்வமேதம், (15) விச்வஜித்து, (16) பிரம்மமேதம், (17) பிரணவமேதம், (18) பசுபந்தம், என்பனவாம்.

யாகம் - 21 - ஆவன :

(1) அக்னிஷ்டோமம், (2) அத்யக்னிஷ்ட்டோமம், (3) உக்தியம், (4) சோடாசி, (5) வாஜபேயம், (6) அதிராத்திரம், (7) அப்தோரியாமம், (8) அக்னியாதேயம், (9) அக்னிஹோத்ரம், (10) தர்ஸபூர்ணமாசம், (11) சாதுர்மாசியம், (12) நிருடபசுபந்தம், (13) ஆக்ராயணம், (14) சௌத்ராமணி, (15) அஷ்ட்டகை, (16) பார்வணம், (17) சிரார்த்தம், (18) ஸ்ராவணி, (19) ஆக்ரகாயணி, (20) சைத்ரி, (21) ஆஸ்வயுஜி, என்பனவாம்.

மேலே கூறியுள்ளவாற்றால் விஸ்வப்பிராமணர்களுக்குரிய யாகாதி கிருத்தியங்களும், அவைகளுக்கு அடிப்படையான ஹோமகுண்டங்களும், பலவகைப்பட்ட யாகங்களும், அவ்வெள்விகளை இயற்றும் காலங்களும் மிகத்தெள்ளிதில் விளங்கும். பொதுவாக யாகங்களில் பசுக்களை வதைத்தலும் தேவதா பிரீதியர்த்தம் சிரங்களைக் கொய்தலும் உண்டெனக் கூறப்படுகின்றது. வேதப் பொருள் சாரசங்கிரகம் என்னும் நூலில் 14 ம் பக்கம் முதலில் கூறுவதிது வாம்.

யஜுர் வேதத்தில் சொல்லியிருக்கும் அஸ்வமேத புருஷமேதாதி யாகங்களில் உண்மையிலே குதிரைகளையும் புருஷர்களையும் பலிகொடுப்பதாக சிலர் தவறுதலாக எண்ணுகின்றனர். அது முற்றிலும் தப்பிதமான எண்ணம்.

அஸ்வமேத யாகத்தில் 609 மிருகங்கள், பசு, பக்ஷியாதி ஜந்துக்களை 21 யாகஸ்தம்பங்களில் கட்டியும், வீட்டுக்குரிய சாது மிருகங்களை கல்தூண்களில் கட்டியும், யாக ஸ்தோத்திர மந்திரங்களைப் படனம் செய்தபிறகு, அப் பிராணிகளுக்கு எவ்வித இம்சையும், தீங்குமில்லாமல் அவை களை அவிழ்த்துவிட வேண்டுமென விதித்திருக்கிறது. அல்லா மலும் புருஷமேத யாகத்தில் பற்பல குலத்தைச் சேர்ந்த 185 புருஷர்களை 11 யாகஸ்தம்பங்களில் கட்டிவைத்து, நாராயண பலி கீதங்களைக் கோஷித்து முடிந்தபின் அவர் களை சந்தோஷமாக அவிழ்த்துவிட்டு யாக பூர்த்திசெய்யும் படி விதித்துள்ளது. இப்பெரிய யாகங்கள் நீங்கலாக மற்ற யாகங்களில் யாகப்பசுக்கள் என்று சில ஜந்துக்கள் யூக ஸ்தம்பங்களில் கட்டப்பட்டு பூஜிக்கப்படுவனவேயன்றி அவைகள் பலிகொடுக்கப்படுவனவல்ல. அறியாமையால் அப்படிச் செய்யப்படும் யாகங்கள் வேத சம்மதம் பெற்ற வையல்ல; தேவர்களுக்கும் பிரீதியளிக்காத பாபகிருத்தி யங்களாகுமெனக் கூறப்பட்டுள்ளது.

இனி தமிழ் நூல் கூற்றுக்களை நோக்குவோம்.

தமிழ் ஸ்காந்தபுராணம், தக்ஷகாண்டம், சாலைசெய் படலத்தில்,

"தொட்டாமனுத்தொன் மயனைத்தனுதி
சுதரொன்ன முன்ன முதவிக்
கட்டாமரைக்குள் விதிபோலநல்கு
கலைகற்றுளானை விளியா
முட்டாத வேள்வியது வொன்று செய்வன்
முனிவோர் கடேவருறைவா
னெட்டா தவெல்லை தனிலின்றொர்சாலை
யியல்பால் விதித்தி யெனவே"

என்பதால், மனு, மயன், துவஷ்டா முதலானவர்களைப் புத்திரராயுடையவரும், தாமரை மலரிலிருக்கிற பிரம்மா

னைப்போல் சிருஷ்டி கிருத்யமுடையவரும், சமஸ்த வித்தைகளில் பாரங்கதருமான விஸ்வகர்மாவை தக்ஷப் பிரஜாபதியானவர் அழைத்து யாகசாலையை நிர்மிக்கும்படி கேட்டுக்கொண்டார் என்றும், யஜுர் வேதத்தில்,

“ யேநயக் ஞமக்ரியதேசதே ஸப்ரீதோ விஸ்வகர்மா ”

என்னும் சுலோகத்தால், விஸ்வகர்மாவே யக்ஞகர்த்தர், யக்ஞ பிரீதியர்த்தர், யக்ஞ ஹவிர்பாகத்தைப் பெறும் முதல் தேவர் எனப்படுவதால், விஸ்வகர்மா யாககர்த்தர் என்பதும், அதிதேவதையாக விளங்குகிறார் என்பதும், அவருடைய சந்ததியார்களாகிய விஸ்வகர்மப் பிராம்மணர்கள் யாகாதிகார முடையவர்களென்பதும் உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும். இவ்வித யாகங்கள் தென்னாட்டின்கண் அண்மையிலும் பற்பல இடங்களில் நிறைவேறியும், சமஸ்த ஜனங்களாலும் வரவேற்கப்பட்டும், பாராட்டப்பட்டுமுள் ளன.

---

## 10. விஸ்வகர்மப் பிராம்மண வேத இதிகாச புராண ஆதாரங்கள்

விஸ்வகர்மப் பிராம்மணர்கட்கு முக்கிய வேத ஆதாரம் கிருஷ்ணயஜுர்வேதம் அல்லது தைத்திரிய ஸம்ஹிதை 4-வது காண்டம் 3-வது பிரஸ்னம் 5-வது பஞ்சாதியில் “ ப்ராசீதிராம் ” என்பது முதல் 6 மந்திரங்களாம். அவைகள் முந்திய அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. இருக்குவேதம் 10-வது மண்டலம் 6-வது அனுவாகம், 13-14-வது சூக்தம் “ யஇமா விஸ்வாபுவனானி ” என்பது முதல், “ விஸ்வசம்புரவசே ஸாதுகர்மா ” என்பது வரையுள்ள மந்திரங்களும், இன்னுமுள்ள சுருதி வாக்கியங்களும் பிரமாணமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அவை

களை உள்ளயிடங்களில் காண்க. ஆகவே, அவைகளை இங்கு மீண்டும் கூறுதல் மிகையாம். இனி இதிகாச புராண ஆதாரங்களை மட்டும் எடுத்தியம்புவோம்.

"ஸ்காந்தம்-நாகரகாண்டம். 5-ம் அத்தியாயம்.

1. ஸ்தபதிஸ் தாபகஸ்சைவ-ஆச்சார்யோவிஸ்வகர்மண :
ஆச்சார்யோவிஸ்வகர்மாச்ச-ஆதிப்ரஹ்ம குலோத்பவ :

2. தேசிகோ ரதகாராணும்-விஸ்வகர்ம மஹாதபா :
மனுர்மயஸ்ச த்வஷ்ட்டாச்ச-சில்பீ விஸ்வக்ஞயேவச

3. பஞ்சைதே தேவருஷயோ-விஸ்வகர்ம முகோத்பவா :
அயஸ்க்கர்ம மனூனஞ்ச-மயானும் தாருகர்மச

4. த்வஷ்ட்டாகாம்ஸ்யாதிலோஹானும்-கர்த்தாசூரஸ்ஸபண்டித:
சில்பீஸர்வசிலா பேதி-ப்ரஹ்மாதி ஸுரகல்பக :

5. தைவக்ஞோஹேமக்ருத் போகீ-நாநாபூஷண நைபுண :
சக்ஷுஸ்ஸர்வகு லஸ்ரேஷ்டோ-நாநாவித் யாகுரு : ப்ரபு :

6. ஏதானி பஞ்சகர்மாணி-விஸ்வகர்மே த்யஹம்ப்ரபு :
விதாயசைக மேகஞ்ச-ஸுரேப்ய : ப்ரததாமிச

7. முகேப்யஸ்தஸ்ய பஞ்சப்ய : குமாரா : பஞ்சஜஜ்ஞிரே
வதனேப்யோ பவம்தேஷாம்-பஞ்சபஞ்ச குமாரகா :

8. சதம்ச விம்சதி : பஞ்ச-வம்ஸஜா விஸ்வகர்மண :
தத்வம்ச ஸம்பவாஸ்ஸர்வே-பஞ்சபஞ்சாஸ் யசம்பவா :

9. ஜாயந்தை ங்யுகம்லேகே-ஸ்ருஷ்ட்டி ஸந்த்ராணதத்பரா :
க்ருதேது மானஸாஸ ருஷ்டிர்-த்வாபரே த்ருஷ்ட்டிஸாதனம்

10. த்ரேதாயாம் லிகிதா ஸ்ருஷ்டி : கலௌது காசாதனம்
தாருகாரஸ் வர்ணகாரஸ் சிலாகாரஸ்ததைவச

11. அயஸ்காரோ லோஹகார : பஞ்சைதே ரதகாரக :
விஸ்வகர்ம சுதாஹ்யேதே ரதகாரஸ்து பஞ்சச

12. வைதிகே நைவ மார்க்கேண தத்வம்ஸ் யானும்விசேதர்

மேற்கண்ட சுலோகங்களின் பொருள் :

விஸ்வகர்மர்களுக்கு ஆச்சாரியனும், ஸ்தாபகனும் ஐந்து ரிஷிகளில் ஒருவராகிய சில்பி விஸ்வகர்மா எனும் ஸ்தாபனகர்த்தர் ஆதிப்ரம்மகுலத்தில் பிறந்தவர். அந்த விஸ்வகர்மா மகா தபோ மகிமையடைந்து விஸ்வகர்ம ரதகாரர்களுக்கு ஆச்சாரியனாக இருந்தார். மனுமய - துவஷ்ட்ட - சில்பி - விஸ்வக்ஞன் ஆகிய இவர்கள் ஐவர்களும் விஸ்வகர்மாவின் முகத்திற் பிறந்த தேவரிஷிகள்.

அதில் மனுவுக்கு இரும்புவேலை, மயன் எனும் தச்சனுக்கு மரவேலை, துவஷ்ட்டாவுக்கு வெண்கல முதலிய லோகவேலை, தேவசமானமாக சிருஷ்டிக்கும் சிற்பிகளுக்குக் கல்வேலை, தைவக்ஞர்களென்னும் விஸ்வஞ்ஞர்களுக்கு பொன்வேலையும் பிரசித்தமாகவிருக்கிறது. இதில் தைவக்ஞரென்பார் நானாவித பூஷணங்களை நிர்மாணிக்கும் சாமர்த்தியத்தை அடைந்து இதர தக்ஷகுல சிரேஷ்ட்டர்களைப் போல் அவர்களுடைய வித்தைகளில் சிறந்திருந்தார்கள். இவைகளே மேற்கண்டவர்களுக்குள்ள வேதாதிகாச சம்மதமான ஐந்து தொழில்களாம்.

ஆதிவிஸ்வகர்மப் பிரபு மேலே காட்டிய தொழில்களை ஒவ்வொன்றாக சிருஷ்டித்து அந்தந்த தேவர்களுக்குக் கொடுத்தார். அப்படிப்பட்ட மகாதேவனாகிய விஸ்வப்ரம்மாவினுடைய ஐந்து முகங்களிலிருந்து ஐந்து குமாரர்களும் அந்த ஐவர்களின் முகமாய் ஐந்தைந்தாக இருபத்துஐந்து புத்திரர்கள் விதம் உதித்தார்கள். அதனால் விஸ்வகர்ம வம்ச கோத்ரரிஷிகளாக நூற்றிஇருபத்தைந்துபேர்கள் ஆனார்கள். இவர்கள் சந்ததியார் பிரம்மசிருஷ்டியைத் தொடர்ந்து உலகை பஞ்சகிருத்தியங்களால் ரட்சிக்கும் பொருட்டுப் பிரதியுகங்களிலும் உண்டானார்கள்.

இவர்கட்கு கிரேதாயுகத்தில் மனதினால் சிருஷ்டி, திரேதாயுகத்தில் மந்திர சிருஷ்டி, துவாபரயுகத்தில் தேத்

திர சிருஷ்டி, கலியுகத்தில் கையினால் சிருஷ்டி செய்வது முறை என்று ஸ்ரீ பரமசிவன் சண்முகனுக்குக் கூறினார்.

இவை புராணங்களில் முக்கியமாகிய ஸ்காந்தபுராணம், நாகரகாண்டத்திற் கூறியுள்ள பிரமாணங்களாகும்.

எனவே, விஸ்வகர்மப் பிராம்மணர்கள் என்றால், சராசரமான உலகப்பொருள்களை சிருஷ்டிக்கின்ற பிராம்மண வம்சத்தில் பிறந்தவர்கள் எனப்படும். அந்தந்த மரபில் வந்தவர் அவரவருக்குரிய பிதிரார்ஜிதமான குலதர்மங்களைச் செய்வது இயற்கையாம். அதுபோலவே, ஸ்ரீ விஸ்வகர்மா வழியே தோன்றிய விஸ்வகர்மப் பிராம்மணர்கள் பிரம சிருஷ்டிக்குச் சமமான உலக சிருஷ்டியில் ஈடுபட்டுள்ளார்கள். மூல புருஷராகிய விராட் விஸ்வகர்மாவைக் குறித்து விஷ்ணு சகஸ்திர நாமங்களிலும் "விஸ்வகர்மணே நம:" என்றும், சகஸ்திரநாம பாஷ்யத்தில் விஸ்வகர்மாவைக் குறித்து "பிரம்ம சிருஷ்டே ஹிபிராக் ஊர்த்துவஞ்ச வித்யமானம் விஸ்வகர்ம ஜெகத் வியாபாரக: அஸ்தியே வேதி" எனவும், நிருக்தத்தில் "விஸ்வஸ்ய ஜெகத் கர்ம வியாபாரோயஸ்ய லக்ஷணம், பிராக் பிரம்ம சிருஷ்டேஹி ஊர்த்து வஞ்ச விஸ்வகர்மேதிகத்யதே" என்றும், புருஷ சூக்தத்தில் "விஸ்வகர்மண ஸமவர்த்ததாதி" என்றும், பாரதத்தில் "புருஷம் விஸ்வகர்மாணம் ஆதிதேவம் அஜம் விபும்" என்றும், மூலஸ்தம்ப புராணத்தில் "பிதாச் சர்வ தேவனும் சர்வலோக பிதாமகஹ, சர்வலோக குருஸ் சைவ விஸ்வகர்மா பரசிவஹ" எனவும், விஸ்வகர்ம புராணத்தில் "பூத்வார்த்த புருஷாகாரோ விஸ்வகர்மாதி பூருஷஹ பிருதிசேஷுவா சுருஜதேவான் விஸ்வவோத்பத்தி சிகீரிஷையா" என்றும், விஸ்வகர்மோபாக்கியானத்தில் "தர்மார்த்த காமமோக்ஷானும் ஆச்சார்யோ வேதபாரகஹ, ஏதத்கர்மா மகாமூர்த்தி விஸ்வகர்ம ஜெகத்குருஹு" என்றும் விஸ்வகர்மாவின் பிரபாவம் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

மேலும், சமுத்திர ஸ்நானம் செய்யுங் காலத்தில், "சமுத்திராய, வயுனாய, ஸிந்துநாம், பதயேநம; நதிநாகம் சர்வா சாம்பித்ரே ஜுஹுதா விஸ்வகர்மனே விஸ்வாஹா மர்த்திய கம்ஹவிஹி" என்னும் மந்திரத்தை பக்தி பூர்வமாகக் கூறி நமஸ்கரித்து ஸ்நாநம் செய்யவேண்டுமென சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன.

இனி, பாரதாதி காவியங்களில் கூறியிருப்படி, தேவலோக சிற்பியாகிய விஸ்வகர்மாவானவர் பிரதியுகங்களிலும் நகர நிர்மாணத்தை பூலோக சிற்பிகளுடன் கலந்து செய்ததாக, துவாரகை, இந்திரப்பிரஸ்தம் முதலியவற்றை நிர்மாணித்ததிலிருந்து தெரியக்கிடக்கின்றது.

மேலே கூறிய தேவலோக விஸ்வகர்மாவைப் பற்றி முன்னுள்ள அத்தியாயங்களில் கூறப்பட்டிருப்பினும் மூன்றாமத்தியாயத்திலும் "விஸ்வகர்மா மனஸா:" என ருக்வேதப் பிரமாணத்தில் வரும், ஆங்கீரசாதி ரிஷிகளோடும் சம்பந்தித்தும் வந்த தேவசில்பி விஸ்வகர்மாவைப் பற்றியும் மேற்குறித்த மந்திரங்களில் குறிப்பிட்டிருக்கும் ஏகாதசருத்திரர் நாமத்தைக் குறித்தும் இங்கு எடுத்துக் கூறுவது அவசியமாகிறது.

மேலே கூறியுள்ள, மந்திரப்படி நவப்பிரஜாபதிகளுள் ஒருவராகிய, ஆங்கீரச ரிஷியின் குமாரத்தி, யோகசித்திக்கும், அஷ்டவசுக்களில் ஒருவனாகிய பிரபாவசுவுக்கும், தேவசிற்பி விஸ்வகர்மா உதித்தார். அந்த யோகசித்தியினிடம் மீண்டும், விஸ்வகர்மாவின் சகோதரர்களாக அஜைகபாத், அஹிர்புத்தனன் துவஷ்டா, ருத்திரன் என்னும் நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள் என முன்பு கூறப்பட்டுள்ளது. துவஷ்டாவுக்கு விஸ்வரூபனென்கிற மஹா தபசியும் தேவப்புரோகிதனுமான புத்திரன் ஜனித்தான். மேலே கண்ட 4-வது ருத்திரனுக்கு, அரன், பகுரூபன்- திரியம்பகன் - விருஷாகபி - சம்பு, நீலலோகிதன் கபர்த்தி- ரைவதன் - மிருகவியாதன் - சர்வன் - கபாலி - என்னும்

பதினொருவர் பிறந்து ஏகாதசருத்திரர்கள் என்னும் பெயர் படைத்தார்கள்.

மேற்கண்ட துவஷ்ட்டாவானவர் தனது புத்திரனை விஸ்வரூபன் இந்திரன் கோபத்தால் மறைந்த பிறகு வேறு புத்திரனைப் பெற வேண்டுமென்று பூலோகத்துக்கு வந்து இலங்கைத் திவிலுள்ள திருக்கேதீஸ்வரமென்னுந் தலத்தில் தவங்கிடந்து திருக்கேதிஸ்வரர் அனுக்கிரகத்தினால், விஸ்வ கர்மாவைப் பெற்றார். விஸ்வகர்மாவென்னும் நாமதேய முடைய அந்தச் சிறுவன் பூலோகத்தில் ஒரு விஸ்வகர்ம தபசியிடம் குருகுலவாசம் செய்யும்போது, குரு, குருபத்தினி, குருபுத்திரர்கள், இட்ட கட்டளையை நிறைவேற்றமாட்டாதவனாகி ஒரு மகருஷியின் அனுக்கிரகத்தால் காசிக்குச் சென்று விஸ்வகர்மேசலிங்கத்தைப் பூஜித்து, அவரது அருள் பெற்று குரு முதலாயினோர் ஏவிய பணிகளை முற்று வித்து அந்த காசியம்பதியில் வதிந்திருந்தான்.

காசி காண்டம் (66-ம் அத்தி) (ஷடசீதிதமாத்யாயம்) உமாமஹேச்வர சம்வாதம் :

பார்வதி - வாக்கியம்.

விச்வகர்மேச்வரம் லிங்கம் - யத்காச்யாம் பதிதம்புரா, தஸ்யலிங்கஸ்ய கதய - தேவதேவ ஸமுத்பவம்,

தேவதேவ : உவாச்ச :
ச்ருணுதேவி-ப்ரவக்ஷ்யாமி கதாம் பாதகநாசினீம்
விச்வகர்மேச லிங்கஸ்ய-ப்ராதுர்ப்பவம் மனோஹரம்
விச்வகர்மாபவத்பூர்வம்-ப்ரஹ்மணஸ் த்வபராதனு :
த்வஷ்ட்ரு ப்ரஜாபதே : புத்ரோ-நிபுணஸ் ஸ்ர்வகர்மஸு
க்ருதோபநயன ஸ்ஸோத பால்யே குருகுலேவசன்
சகாரகுரு சுச்ருஷாம் பிக்ஷான்னக்ருத போஜன :
ஏகவாரம்குரு : ப்ரா : ப்ராவ்ருட்காலே ஸமாகதே
குருடஜம் மதர்த்தம் த்வம்-யதாப்ராவுண் நபாதமுத
கதாசின் நைவபஜ்யேத-நபுராதநதாம் வ்ரஜேத்

என்று தொடர்ந்து,

> தஸ்யாபி வாஞ்சிதம் தேயம்-கிம்புனர்யதி காசிகாம்.
> யேநகாச்யாம் ஸமப்யர்ச்யம்-யேநகாச்யாம் ப்ரதிஷ்ட்டிதம்
> யேநகாச்யாம் ஸ்துதம்-லிங்கம் ஸமேரூபாய தர்ப்பணம்
> த்வம் ஸ்வச்சம் ஹிமுகுரம்-மமநேத்ர த்ரயஸ்யஹி
> தகாச்யாம் லிங்கார்ச்சனத்வாஷ்ட்ர-வரம்வரய ஸுவ்ரத
> பார்வத்யா ப்ருஷ்ட்டோ தேவதேவ : காச்யாம் லிங்க
> ஸமுத் பவமுக்தவான் எனவும்,

காசிகாண்டம் 66-ம் அத்தியாயம், 1 முதல் 54 ல் முடிவடைகிற சுலோகங்களின் தாத்பர்யமாவது : பார்வதி வினு : தேவர்களுக்கு தேவனுகிய ஓ பரமேச்வரா ! ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில் விஸ்வகர்மேச்வரம் என்னும் பெயருடைய ஒரு பிரசித்திபெற்ற இலிங்கமூர்த்தியின் உற்பத்தியைப் பற்றிச் சொல்லுமெனக் கேட்க ஸ்ரீ பரமேஸ்வரர் கூறலானுர்.

ஓ ! பார்வதி கேள்: மகா பாதகங்களையெல்லாம் போக்கடிக்கத்தக்கதும், மனோகரமிக்கதுமான விஸ்வகர்மேச லிங்கத்தினுடைய உற்பத்தியின் விர்த்தாந்தத்தைச் சொல்லுகிறேன். பூர்வத்தில் இரண்டாவது பிரம்மாவென்று சொல்லத்தக்க துவஷ்ட்டப் பிரஜாபதியினுடைய குமாரன் விஸ்வகர்மா என்னும் ஒருவன் இருந்தான். அவன் குருவினுல் உபநயனம் செய்விக்கப்பட்டு, குருகுல வாசம் செய்து குரு பணிவிடை செய்துகொண்டிருந்தான். மாரிகாலம் வரவே, மழையினுல் பாதிக்கப்படாமலிருக்கும் பொருட்டு, குரு தமக்கு ஒரு சாஸ்வதமான வீட்டை நிர்மாணித்துத் தரக் கட்டளையிட்டார். குருபத்தினி துவட்ட புத்திரனைத் தனக்குத் தகுந்த உடையை சிருஷ்டித்துத் தரக் கேட்டாள். குருபுத்திரன், தனக்கு பூமியிலும், ஆகாயத்திலும், ஜலத்திலும் நடக்கக்கூடிய பாதக்குறடுகளை நிர்மாணித்துத் தரக் கேட்டான். குருபுத்திரி பொன்னினுலும், மணியினுலுமான

காதணி முதலிய ஆபரணங்களைச் செய்துதரக் கேட்டாள். மேலும், குருவானவர் தம் பிள்ளைகளுக்கு ஒரே மாத்தி றனும், ஒற்றைக்கம்பமுடைய வீடு ஒன்றை அமைத்துத் தரக் கேட்டார். அந்த துவிஜ சிரேஷ்டனாகிய விப்வகர்மா எனும் அச்சிறுவன் அவர்கள்முன் அப்படியே ஆகட்டுமெனக் கூறி, பின்னர் அடர்ந்த காட்டினுள் பிரவேசித்து புலம்பலுற்றான். அதைக்கேட்ட ஒரு தபசி அவன் கண்முன் தோன்றினார். விப்வகர்மா அவரை நமஸ்கரித்து தனது குறைகளைச் சொன்னான். அத்தபசி, ஓ! பிரம்மசாரியே கேட்பாயாக! விப்வேஸ்வரனுடைய அனுக்கிரகத்தால் பிரம்மதேவனும் சிருஷ்டி கிருத்தியத்தில் பாண்டித்தியம் பெற்றான். ஆகையினால் நீ காசிக்ஷேத்திரத்திலுள்ள விப்வகர்ம இலிங்கத்தைப் பூஜித்தால், அதன் மகிமையினால் விப்வகர்மாவைப்போல் சிருஷ்டித் தொழிலில் வல்லவனுவாய். மேலும் அக்காசியம்பதியிலிடத்துள்ள விப்வேஸ்வர ஆராதனம் எல்லா இஷ்ட காமியார்த்தத்தையும் அளிக்க வல்லது என்றார். விப்வகர்மா எனும் அந்தச் சிறுவன் காசிக்குச் சென்று கங்கையில் புனலாடி ஸ்ரீ விப்வேஸ்வரனை பூஜித்துவந்தான். அவனுக்கு விப்வேஸ்வரர் பிரத்தியட்சமாகி அவன் கோரிய எல்லா வரங்களையும் தந்தருளினார். மேலும், தேவாலயங்களையும் விக்ரகங்களையும், ஆபரணாதிகளையும், இயற்றும் வகைகளைக் கற்காமலே அறிந்து, நீ இரண்டாவது பிரம்மனைப்போல் ஆவாய், என்று அனுக்கிரகித்தார். அந்த விப்வகர்மாவுக்கு இறவா வரமளித்து பின்னர் அந்த இலிங்கத்துள்ளே மறைந்தருளினார்.

மேற்குறித்த விப்வகர்மா, தநு முதலானவர்கள் விரும்பியவாறு சகல வஸ்துக்களையும் நிர்மாணித்துக் கொடுத்து மீண்டும் காசியம்பதியைச் சேர்ந்தார் என்பதாம். இதனையே தமிழில் அதிவீரராமபாண்டியன், காசிகாண்டம் 85-ம் அத்தியாயம் 14-ம் செய்யுளில்,

“ சிற்பத்தொழில் விதிபோகிய சிறுவன் கடிதேகி
அற்பிற்குரு முதலோர் தமையலர் தூவிவணங்கிப்
பொற்புற் றிடநனி பன்னிய பொருள் யாவும் வழங்கி
கற்பத்தினும் அழியா துயர் காசிப்பதி யுற்றான்”

எனக் கூறியிருப்பதாலும், நல்லாப்பிள்ளை பாரதம் பிர பஞ்ச உற்பவச் சருக்கம் 28-ம் பாடலில்,

“ முன்வரு பிரத்தியூஷன் முதன்மை தேவலனையீன்றான்
பின் பிரபாவசுவினுக்கும் பிரகஸ்பதிக் கிளையாளான
மன்வலியோக சித்திமாதுக்கு முதித்தெழுந்தான்
மின்புவி பொலிவுண்டாக்கும் விச்சுவகருமன்றானே”

எனக் கூறியுள்ளவாற்றால், தக்ஷன் புத்திரிகள் பதின்மரில் அதாவது, அருந்ததி, வசு, ஜாமி, லங்கை, பானு, மருத்வதி, சங்கல்பை, முகூர்த்தை, சாத்தியை, விசுவை ஆகியவர்களில், இரண்டாம் புத்திரியாகிய வசு என்பவளிடத்தில் வசுக்கள் எண்மர் பிறந்தார்கள். அவர்களுள் எட்டாமவனாகிய பிரபாவசு என்பவன் தேவகுருவாகிய பிரகஸ்பதியின் தங்கையாகிய யோக சித்தியை மணந்து விஸ்கர்மவாகிய புத்திரனைப் பெற்றார். அந்த விஸ்வகர்மா விசித்திரமான அநேக சிற்பங்களை அறிந்து தேவர்களுக்குச் சிற்பி ஆனான் என்று கூறப்பட்டுள்ளது. துவஷ்ட்டாவின் புத்திரன் ஆன விஸ்வரூபன் இந்திரனால் சங்கரிக்கப்பட்டபின், வேறொரு புத்திரனை அடைய துவஷ்ட்டா பூலோகத்துக்கு வந்து இலங்கைத் தீவிலுள்ள திருக்கேதீஸ்வரம் என்னும் தலத்தில் தவங்கிடந்து திருக்கேதீஸ்வரர் அனுக்கிரகத்தால் விஸ்வகர்மாவைப் பெற்றான் என்றும் அவனே காசியம்பதி யிலுள்ள விஸ்வகர்ம இலிங்கேஸ்வரரைப் பூஜித்து நிர் மாணநூல்களை ஓதாதுணர்ந்து இரண்டாவது பிரம்மாவெனத் திகழ்ந்தான் என்றும் முன்னமே கூறப்பட்டுள்ளது. அவனே காசியம் பதியில் தங்கியிருந்தவன் என காசி காண்டம் கழறலைக் கண்டு தெளிக.

மேலே கூறிய தேவசிற்பி விஸ்வகர்மாவானவர் இரு லோகங்களிலும் பூஜிதைக்குரியரானார். சிதம்பர மகாத்மியத்தில், சிவன் - காளி நடனத்தைப் பற்றி விளக்கப் பட்டுள்ளது. அந்த சுலோகம் பின்வருமாறு:

" சூத்ரதாரா அஜஹரௌ திரிபுராரி மஹாநடஹ:
தஸ்யாம் சபாய மதிபோ விஸ்வகர்ம குருபவேது "

இதன் தாத்பரியம்: சிவனும் காளியும் போட்டி போட்டுக் கொண்டு அமோகமாக நிர்த்தனம் செய்தபோது, பிரம்மா விஷ்ணுவாதியோர் சூத்திரதாரிகளாகவும், மகா குருவாகிய விஸ்வகர்மா நடுவராகவும் இருந்து நிர்மானித்தார்கள். இந்த சம்பவத்தை அறியார் சின்னமாகத் திருச்செந்தூர் தேவாலய முகப்பிலுள்ள ஒரு ஸ்தம்பத்தில் ரூபிகரிக்கப் பட்டுள்ளது. இன்னும் சிவனுக்கும் உமாதேவிக்கும் தம்மில் எவர் அழகிற் சிறந்தவர் என்னும் வாக்குவாதம் நிகழ்ந்த காலை, பிரம்மா, விஷ்ணு ஆதியோர், சிவனை உயர்த்திச் சொன்னால் பரமேஸ்வரியின் கோபத்திற்கும், அம்பிகையை உயர்த்திச் சொன்னால் சிவனுடைய சாபத்திற்கும் ஆளாக வேண்டி வருமே என அஞ்சி பின்னடைந்தார்கள். விஸ்வ கர்மாவை அழைத்துக் கேட்கவே, அவர் ஒரு பெரிய நிலைக் கண்ணாடியை சிருஷ்டி செய்து அவர்கள் முன்னிறுத்தி உங்கள் இருவர் அழகைப் பார்த்து உங்களுக்குள்ளேயே நிர்மானித்துக்கொள்ளுங்கள் என்றார். சர்வான் தன்னுருவைப் பார்த்து வெட்கிப்போனார். உமையாள் பரமசந் தோஷமடைந்தவளாய், நாம் சக்தியாகி நின்று விஸ்வகர்ம குலத்தைக் காப்பேன் என்றாள், என்பது சுருதிவாக்யத்தின் தாத்பரியமாம். எனவே, திரிமூர்த்திகள் வாசமாயுள்ள தேவலோகங்களில் ஏற்படும் சிக்கல்களைக் களைவதும் ஸ்ரீ விஸ்வகர்மாவின், சிருஷ்டி போதம், ஸ்திதியென்னும் அவர் காத்தல் தொழிலையும் பிரசித்தப்படுத்துவதாகும்.

இன்னும், பூலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கு துவாரகாபுரி நிர்மாணத்தைச் செய்ததாக முன்னர் குறிப்பிட்டுள்ளபடி, வியாசபாரதம், சபாபர்வம், 57-வது அத்தியாயத்தில், கீழே கண்டவாறு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மகா விஷ்ணுவின் அமிசமான கிருஷ்ணபகவான் அந்த துவாரகாபுரியைக் கண்டு களிப்புற்று எல்லாப் பொருள்களோடும் நகரப் பிரவேசம் செய்தார். நகரத்தின் நாற்புறங்களிலும் பலவகை மலர்களும், கனிகளும் நிறைந்துள்ள மரங்களையும், ஜனங்கள் நிறைந்த அநேக அழகிய தோட்டங்களையும் கண்டு ஆனந்தித்தார். சூரியனைப்போலவும், சந்திரனைப்போலவும், மேருவின் சிகரம் போலவும் பிரகாசிக்கின்ற மாளிகைகளைக் கண்டு களித்தார். அன்னங்களாலும், செந்தாமரை மலர்களாலும் நிறைந்து கங்கா நதியையும் சிந்து நதியையும் ஒத்த அகழிகளையும், மேகங்களைத் தொட்டுக்கொண்டிருக்கிற கோட்டைக் கொத்தளங்களையும் கண்டு பிரமித்துப்போனார். எல்லா மாளிகைகளிலும், 'கேதுமான்' என்னும் அவர் மனைவியின் கிரகம் விஸ்வகர்மாவால் எல்லா சிற்பிகளுடன் சேர்ந்து கட்டப்பட்டபடியால் அது அழகே திரண்டு ஒளி வீசிற்று.

இனி இந்திரப் பிரஸ்த நகரம், தேவசில்பி விஸ்வகர்மாவால் சிருஷ்டிக்கப்பட்டதென்பதற்குப் பிரமாணம் : வியாச மஹாபாரதம் - ஆதிபர்வம் - 127-ம் அத்தியாயம் :

இந்திரப் பிரஸ்த நகரத்தை உண்டாக்கவேண்டுமென்ற கருத்தை தருமபுத்திரர் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்குத் தெரிவிக்க, அதன்படி லோகநாயகராகிய கண்ணபிரான் இந்திரனை நினைத்தார். அந்த தேவேந்திரன் விஸ்வகர்மாவைப் பார்த்து, அறிவிற் சிறந்த விஸ்வகர்மாவே ! நீர் பூலோகத்திற்குச் சென்று, என்பேரால் ஒரு நகரம் பூமியிலுள்ள தேவலோகமாக புகழ்பெற்று விளங்கும்படி சிருஷ்டி செய்யவேண்டுமென்றான்.

அவ்வாறே விஸ்வகர்மா பூவுலகுக்கு வந்து ஸ்ரீ கண்ண பிரானைச் சந்தித்து, நான் என்ன செய்யவேண்டு மென்று கேட்டார். கிருஷ்ணபகவான் விஸ்வகர்மாவைப் பார்த்து இந்திரன் பெயரால் இந்திரப்பிரஸ்தம் என்று சொல்லப் பட்டதும் அவனுடைய அமராவதி நகரத்துக்கொப்பானது மான ஒரு மகா நகரத்தை யுதிஷ்டிரருக்காக நிர்மாணம் செய்தருள்வாயாக, என்றார்.

விஸ்வகர்மாவானவர் பவித்ரமும், மங்களகரமுமான பிரதேசத்தைத் தேர்ந்து சாஸ்திரப்படி, சாந்திஹோமமும் ஸ்வஸ்திவாசனமும் செய்து இந்த இடத்தில் இந்திரப் பிரஸ்தம் என்னும் நகரம் உண்டாகட்டும் என்று சங்கற் பித்துக்கொண்டு சிற்பமானமென்னும் முழக்கோலால் அள வெடுத்தார். பின்னர் அந்த நகர சிருஷ்டியைச் செய்யத் தொடங்கினார்.

முன்னே, துவாரகா நகரத்தை நிர்மாணித்துக் கைதேர்ந்த இவர் பற்பல ஸ்தானங்கள் இருக்கவேண்டிய முறைப்படி விஸ்வகர்மா, கர்த்தாவாகயிருந்து இந் நகரத்தை வெகு அழகாக சிருஷ்டி செய்தார். அதன் பிறகு அங்கே சமஸ்தப்பிரஜைகளும் வந்து குடியேறினார்கள்.

பிறகு தருமபுத்திரர், விஸ்வகர்மாவை அர்க்ய பாத் யாதிகளால் பூஜித்து விடை கொடுத்து அனுப்பினார். பின்னர். இதர மகா ரிஷிகளுக்கும் பூசனை புரிந்தார். இதனாலும், மேலே கண்ட வேதஇதிகாச புராண ஆதாரங்களாலும், தேவலோக சிற்பியாகிய விஸ்வகர்மா வும் பூலோக விஸ்வகர்மாக்களும் அன்னியோன்னிய சம்பந் தம் பெற்றிருந்தார்களென்று நன்கு பெறப்படுகின்றது.

இவ்வாறு விஸ்வகர்மப் பிரபாவத்தை பொய்யாமொழி களான வேத இதிகாச புராணங்கள் சிறப்பித்துக் கூறுவ தால், விஸ்வகர்ம பிராம்மணீகத்தின் தொன்மையும் அப் பிரம்ம வித்துக்களாகிய பிராம்மணர்களின் லோகோபகார கிருத்தியங்களும், பற்பல யுகங் கண்டவைகளென நன்கு

விளங்கும். இத்தகைய சாஸ்திர ஆதாரங்களை உரிமையாகக் கொண்ட வேறு தலம் ஒன்று இன்றளவும் இல்லையாதலால், விஸ்வகர்மப் பிராம்மணர்களின் பிறப்பினுயர்வு வெள்ளிடைமலையென விளங்குவதாம்.

---

## 11. விஸ்வகர்மப் பிராம்மண இரதகார விளக்கம்

இரதகாரர்கள் என்ற சப்தத்திற்கு, இரதத்தையுடையவர்கள் என்றும், இரதத்தைச் செய்பவர்கள் என்றும், இரதத்தை ஓட்டுகிறவர்கள் என்றும், மூவகையாகப் பொருள் கொள்ளலாம். சூரியன், இந்திரன், குபேரன் ஆகிய தேவர்களில், சூரியனுக்கு ஆதிவிஸ்வகர்மாவாலும், மற்ற இருவருக்கும் தேவசிற்பி விஸ்வகர்மாவாலும் இரதங்கள் நிர்மாணித்துக் கொடுக்கப்பட்டன என்பது வேதபுராண இதிகாசங்களால் அறியக் கிடப்பதாம். இதனல் தேவசிற்பி விஸ்வகர்மாவுக்கும், அவன் சந்ததியார்களுக்கும் இரதத்தைச் செய்துகொடுக்கும் ஆற்றலும், இரதகாரர் என்ற பெயரும் சித்திப்பதாகும். எனவே, விஸ்வகர்மர்கள் இரதகாரப் பிராம்மணர்கள் என்பதும் பொருந்தும். மேலும், ஆதிவிஸ்வகர்மா வழிவந்த 125 ரிஷிகளும், அவர்களது கோத்திரத்தின் வழிவந்த பின்சந்ததியார்களனைவரும் இரதகாரப் பிராம்மணர்கள், அல்லது இரதங்களைச் சிருஷ்டித்துக் கொடுப்பவர்கள் என்பது விளக்கமாகிறது.

ஆதிவிஸ்வகர்ம இரதகாரர் விவரம், ஸ்காந்தம் நாகரகாண்டம் 5-ம் அத்தியாயம் :

“ பகவான் சர்வலோகேச-ஸர்வஜ்ஞ ஜகதாம்ப்ரபோ
ஏதேஷாம் ரதகாராணும்-கர்ப்பா தாஞுதிகர்மச

வதகேந ப்ரகரேண கர்த்தவ்யம் பரமேஸ்வர."

ஈஸ்வர வாக்கியம்.

"ஸம்யக் ப்ருஷ்டம் த்வயாபுத்ர-ஷடானன ஸாவாசகம்
ஸாவதான மனோபூத்வா-ச்ருணுலோக ஹிதம்வச :
விஸ்வகர்ம ஸுதாஹ்யோத-ரதகாரஸ்ச்ச பஞ்சச
வைதிகே வைவமார்க்கேண ஸர்வம்யானும் விசேஷத :
கர்ப்பாதானாதிகம் கர்ம்ம-கர்த்தவ்யம் வேதமார்க்கத :
கர்ப்பாதானம் பும்சவனம்-ஸீமந்தோந்நயனம் ததா
ஜாதகர்ம ததாநாம கர்மா பிசவிசேஷத :
உபநிஷ்க் ரமணம் கர்ம்ம-அந்நஸ்ய ப்ராசனம் ததா
சௌளகர்மாபி கர்த்தவ்ய-முபநீதிர் விசேஷத :
புனர்ஜனன ரூபாஸ-உபநீதிக்ரியா மதா
வர்ஷே கர்ப்பாஷ்டமே சைவ-ஹ்யுபநீதிக்ரியா மதா
கர்த்தவ்யம் தத்விசேஷேண ஸ்வர்சார்யேண ஸாதிநு
புண்யாஹ வாசனம்பூர்வம்-வேதகோஷ புரஸ்ஸரம்."

மேற் சுலோகங்களின் தாத்பர்யம் : எல்லாவற்றையும் இரட்சித்து யாவும் தெரிந்து விளங்கும் உலகிற்கு இறைவனாகிய ஓ ! ஸ்வாமீ ! இரதகாரர்களுக்கு கர்ப்பாதானாதி கர்மங்கள் எவ்விதத்தில் செய்யவேண்டும் ? அதை அருளிச் செய்தல் வேண்டுமென்று குமாரஸ்வாமி வினவ அதற்கு ஸ்ரீ பரமேஸ்வரன் இங்ஙனம் அருள்வதானார்.

ஓ குமாரனே ! உலகத்துக்கு இதமாக இதைச் சொல்லுகிறேன். இரதகாரர்கள் ஐவரும் விஸ்வகர்மாவின் சந்ததியார்களே. அந்த வமிசத்தார்களெல்லோருக்கும் வேத வழியாகவே எல்லா சமஸ்காரங்களும் செய்யவேண்டும். கர்ப்பாதானம், பும்ஸவனம், சீமந்தோந்நயனம், ஜாதகர்மம், நாமகரணம், உபநிஷ்க்ரமணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம் முதலானவைகள், முக்கியமாய், வேத மார்க்கமாகவே செய்ய வேண்டும். அந்த உபநயனம் புனர்ஜன்ம ரூபமானது. அதுவே இரண்டாம் பிறப்பாகும். அதை கர்ப்ப முதல்

எட்டாம் வருஷத்தில் ஆச்சாரியன் சாவதான சித்தமுடைய வனைக இருந்து செய்யவேண்டும் என்று கூறப்படுவதால், இவர்கள் வேதாதிகாரமுடையவர்களென்றும் இவர்களுக்கு **இரதகாரர்** என்று மற்றொரு பெயரும் கூறப்பட்டிருப்பதால் இவர்களே முதன்மையான விஸ்வகர்மப்ராம்மண இரதகாரருமாவார்கள் என்றும் அறியத்தக்கதாம்.

இதற்கு ஆதாரமாக, ஸ்ரீ பரமசிவன் திரிபுரதகனத்திற்குச் செல்லும்போது தேவசில்பி விஸ்வகர்மாவினிடம் இரதம்வேண்டுமென்றுகேட்க, அவ்விஸ்வகர்மா அங்ஙனமே செய்துக்கொடுத்திருக்கிறார். திரிபுரதகனம் நம்பத்தக்கதாயின், இதுவும் நம்பத்தக்கதேயாம். இதை சிவமஹாபுராணம் 24 வது அத்தியாயம், (ஞானசம்ஹிதை) திரிபுரதகனம், உரைத்த பகுதியில் சூதபுராணிகர் நைமிசாரணிய ரிஷிகளுக்குக் கூறுகிறார். ஓ! மகரிஷிகளே! 14 உலக மயமான திவ்ய இரதத்தை பிரயத்தனத்துடன் தேவதேவனுயுள்ள மஹாதேவனுக்கு விஸ்வகர்மா செய்து முடித்தார், என்பதனுல் விஸ்வகர்ம சந்ததியார்களுக்கு இரதங்களை சிருஷ்டிப்பது உண்டென்றும் நிச்சயமாகிறது.

யஜுர் வேதப்ராஹ்மணம் அ-3-ப்ர-8 அனுவாகம் 12ல் கூறியுள்ள வாக்கியத்திற்கு பாஷியம்: அஸ்வமேதயாக ஆரம்பத்திலிருந்து சமாப்தி பரியந்தம் யஞ்யாபி மந்த்ரிதமான அஸ்வம், அஸ்வரக்ஷகர்களாகிய இராஜபுத்திரர்கள் அந்த அஸ்வத்துடன் செல்லுமிடங்களிலெல்லாம் தேச சஞ்சாரம் செய்கிறார்கள். இராக்காலமாகும்போது அஸ்வத்துக்குப் பகைவர்களால் யாதொரு தீங்கும் நேராதபடி அந்த ஊரிலுள்ள இரதகாரப் பிராம்மணர் கிருகத்தில் அந்த அஸ்வத்தை நிறுத்திவைத்து அதன் நான்கு கால்களிலும் "ஓம் இஹத்ரு திஸ்வாஹா" என்னும் நான்கு மந்திரங்களைக் கொண்டு ஹோமம் செய்வித்து அந்த அஸ்வத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்லப்படுகிறது. அல்லாமலும் "தீக்ஷிதஸ்ய க்ருஹா" என்னும் யஜுர்

ஆரண்யக, பஞ்சமப்ரபாடக, த்விதீயானுவாகத்தின் முடிவி லுள்ள வாக்கியத்தை ஆராய்ந்தால், பிராம்மணோத்தமர் களாகிய (இரதகார) தீக்ஷிதர் கிரகத்தில் அஸ்வத்தை நிறுத்திவைத்து அந்த ஹோமத்தைச் செய்யவேண்டுமே யன்றி இதரர்கள் வீடுகளில் செய்யலாகாதென கூறப்பட் டிருக்கிறது. இதற்குப் பிரமாணம் யஜுர்வேதப்ராஹ்மணம். அஷ். 3. ப்ரபாடகம் 8. அனுவாகம். 12-ல்,

> " ஏஷ்யைரோவா அஷ்வ : ப்ரமுக்த :-பராம்பரா வர்த்ம்சோ
> இஹாக்ருதிர் ஸ்வாஹேஹ ஹவிக்ருதி : ஸ்வாஹேஹ ஹோம்தி :
> ஸ்வாஹேஹஹ-ரமதி : ஸ்ஹாஹேஹஸ்சக்ருஷ்யபக்ஸாதுஉஹோதி"

என்பது சுருதி வாக்கியமாகும்.

தீக்ஷிதன் என்றால் திரேதாக்னி ஸ்தாபகனான அக்னிஹோத்திரி. இரதகாரர்களே அப்படிப்பட்ட யஜ்ஞமுடையவர்கள். இதனால் இரதகாரப் பிராம்மணர் களின் குலப்பிறப்பினுயர்வும் வைதிகக் கரும யோக்கியதை அல்லது அருகதையும் தெற்றென விளங்கும். இவர்களை கேவலம் இரதம் ஓட்டும் சாரதிகளுடன் அறியாமையால் ஒப்பிடுவதும், சமத்துவம் கற்பிப்பதும் பொருந்தாது.

இனி, இரதம் ஓட்டுபவர்களை சூதஜாதி இரதகாரர்கள் என்றும், அந்தராள சுதன்வா இரதகாரர்களென்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

அவர்களில் சூதஜாதி இரதகாரர்களின் விளக்கம் : சூதஜாதியானது, தேவாம்சமும், பிராம்மணப் பிறப்பும் இல்லாமல் இரதம் ஓட்டுவதைத் தொழிலாகக் கொண்ட ஒரு தாழ்ந்த வகுப்பார் இருந்தனர் என்றும், அவர்களும் ஒரோவழி விஸ்வகர்ம இரதகாரர்களிடமிருந்து இரதம் செய்யுந் தொழிலைக் கற்றிருந்தனரென்றும் சில பிரமாணங் களால் பெறப்படுகின்றன. இச்சந்ததியார்கள் இரதங்களை ஓட்டும் சாரதிகளாகவே இருந்தனரென்பது பிரசித்தம். இவர்களுக்கு விஸ்வகர்ம இரதகாரரை யொத்து இரதத்தின்

சொந்தக்காரர்களால் வெள்ளோட்டம் எனும் நகரப் பிர தக்ஷணம், மாலை மரியாதைகள் வழங்கல், பீதாம்பரங் கள் போர்த்தல் முதலானவை செய்தல் துர்லபம். ஆகை யால் அவர்கள் தாழ்ந்த இழிகுலத்தோர் என்பது தானே பெறப்படும். முக்கியமாக இனி அவர்களின் உற்பத்தியைப் பற்றிப் பேசுவோம்.

இரத, அஸ்வ, வஜ்ராயுதங்களை இந்திரனுக்குக் கொடுத்ததினால் ஆங்கிரஸரும் அவர்வழிவந்த ரிபுவிஸ்வகர் மர்கள் மிகப் பெரியவர்கள்; இந்திராதி தேவர்களால் துதிக்கப்படுவதற்கு யோக்கியதாம்சம் உடையவர்கள் என்பதை,

ருக்வேதம் 4-1-31-4ல் வரும் கீழ்க்கண்ட சுலோகம் ஸ்பஷ்டமாக உணர்த்துகின்றது.

அதன் வேத பாஷ்யம்! ஹே "புருஹூதெத்பஹூபிரா ஹூதேந்த்ர! தேத்வதீயம், ரதமஸ்வா யாஸ்வாப்யாம் ஸம்யோகார்ஹ மநவோ மனுஷ்யாரு பவஸ்தக்ஷன் அதக்ஷன் அகுர்வன் த்வஷ்ட்டா சத்வரீயம் வஜ்ரம் த்யுமந்தம் தீப்தி மந்தமகரோத் 12 அபிச மஹயந்த இந்த்ர பூஜ்யந்தோ ப்ராஹ்மணோங்கிரஸ் : பரிவ் ருடா மஹதோவா, அஹயே உஹிம் வ்ருத்ரம் ஹம்தவே ஹம் தம் அம்பிகாஸ் தோத்ரை : அவர்யன் வாயித வந்த :

மேற்படி பாஷியத்தின் கருத்துரை :

ஓ! இந்திரனே! எல்லா தேவர்களுக்கும் அரசர்களுக் கும் தலைவனே! புகழ்தற்கரிய இரதம், அஸ்வங்கள் இவை களை உமக்குச் சிருஷ்டித்துக் கொடுத்தவனும், மனுக்களில் சிறந்தவனும், தவத்தினால் ருபுத்தன்மையை யடைந்தவனும், தக்ஷன்-அதக்ஷன்-அகுர்வன்-துவஷ்ட்டாவென்னும் நான்கு நாமங்களைப் பெற்றுள்ளவனும், வஜ்ராயுதமாதிய ஆயுதங் களை உமக்குச் செய்துக்கொடுத்தவனும், உம்மால் பூஜிக்கத் தக்கவனும், ஆங்கிரஸ பிராம்மணரின் வழிவந்தவனும், பெரியோர்களால் துதிக்கத்தக்கவனும், விருத்திரனை அழிக்க

உதவியவனுமான அந்த விஸ்வகர்மா மிகவும் சிரேஷ்டர் என்று அறியக்கடவாய் என்பதாம்.

மேலும், அமரம், துதீயகாண்டம், வைச்யவர்க்கம், 690-ம் சுலோகம் :

"ரதகார ஸதுமாஹிஷ்யாத்-காண்யாம் யஸ்யசம்பவ :"

அதாவது, இரதகார உற்பத்திக்கு ஆதாரமாக, வைசியப் பெண்ணுக்கும், க்ஷத்ரியனுக்கும் பிறந்தவன் மாஹிஷ்யன் ; சூத்ரப்பெண்ணுக்கும் வைசியனுக்கும் பிறந்தவன் கணி தன். இம்முறையில் பிறந்த இரதகார வர்ண கணிதப்பெண் ணுக்கும், அம்முறையில் பிறந்த மாஹிஷ்ய புருஷனுக்கும் பிறந்த இவனுக்கு இரதம் செய்ய உதவிபுரிதலும், இரதம் ஓட்டுதலும் தொழிலாகும்.

க்ஷத்ரியனுக்கும் பிராமண ஸ்திரிக்கும் பிறந்தவன் சூதன். இவனுக்குப் புராணக் கையேடு படித்தல், விடுகட்டு தல், இரதம் நடத்துதல் முதலிய தொழில்களாகும்.

க்ஷத்ரியப் பெண்ணுக்கும், வைசியனுக்கும் பிறந்தவன் மாகதன். இவனுக்கு குதிரை நடத்துதல், இரதம் ஓட்டுதல் முதலிய தொழில்கள். எனவே, சூத-மாகாதி இரதகாரர் கள், ஒரேவழி பிறப்பினாலும், தொழிலினாலும், நெருங் கிய சம்பந்தமுடையவர்கள் என்றறியத் தக்கதாம்

சூதஜாதி இரதகாரர்களுக்கு வேதாதிகாரம், யாகாதி காரம் இல்லை என்பதற்குப் பிரமாணம் :

ஸ்ரீ வியாச மஹாபாரதம் அநுசாசனபர்வம். 51-ம் அத்தியாயம் : ஜனமேஜயன் சர்ப்பயாகம் செய்தபோது, அந்த யாகசாலையை சிறந்த புத்தியுள்ளவனும் விடு கட்டுகிற வேலையில் மகா நிபுணனுமான ஒரு சூதசிற்பி, அப்பொழுது கேட்ட ஒரு பெரிய நிமித்தம் இனி வரப்போகிற ஸர்ப்பயாகத்தில் ஆபத்து நேரிடுவதை முன்னமே தெரிவிக்கிறது என்று சொன்னான். வேலைக்கு நூல் பிடிக்கிற தலைவனும், புராணங்கள் தெரிந்தவனும், சூத

ஜாதியிற் பிறந்தவனும் ஆகிய அந்த சிற்பி சில அளவு நடந்த இடத்தையும், காலத்தையும் பார்த்துச் சொன்னதாவது : ஒரு பிரம்மகுலத்தான் யாககுண்டத்தில் வீழ்ந்து இறக்கப் போவதனுல் இந்த யாகம் நிறைவேருது என்றுன்.

இதனுல் சூதஜாதியிலும் வீடு, இரதம் முதலியன செய்யத் தெரிந்த சில சிற்பிகள் இருந்தார்கள் என்றும், அப்படி இருந்தாலும், அவர்களை வேதம் அறிந்தவர்கள் என்று கூருமல், "புராணங்கள் தெரிந்தவனும், சூதஜாதியிற் பிறந்தவனுமாகிய அந்த சிற்பி" என்று எச்சரிக்கையோடு கூறியிருப்பதனுல் அவர்கட்கு வேதாதிகாரம், யாகாதிகாரம் இல்லை என்றும், அவர்கள் எவ்விதத்திலும் விஸ்வகர்மப் பிராம்மண இரதகாரரைச் சேராதவர்கள் என்றும் நன்கு விளங்கும்.

இனி, விஸ்வகர்மப்பிராமணர்களை விடுத்து சூதஜாதியார், மற்ற பிராம்மணுதி நான்கு வகுப்பிலும் தாழ்ந்தவர்கள் என்பதற்குப் பிரமாணம்.

மதுரை கடைச்சங்கப் புலவர்களிலொருவராகிய பெருந்தேவனுர் பாடிய பாரதம், உத்யோகபருவம் 316-ம் செய்யுள்,

"கொன்னவிலுந் தேர்ப்பாக னென்று குலம்பேசி
யென்னைப் பலரு மிகழ்ந்துரைப்பப்-பின்னையுந்தான்
என்னெச் சிலென்னேடு முண்டானை யெங்ஙனே
உன்னச் சிறப்பே னுரை."

என்று கூறும், அப்பாடலின் கருத்தாவது : கர்ணன் குந்திக்கு சொல்லுகிருன். "அன்னையே ! பயனற்ற தாழ்குலத்தானுகிய சூதஜாதி இரதகாரன் மகன் என்று என்னைப் பல பேர்களும் இகழ்ந்து சொல்லவும், அப்படிச் சொல்லும் அவர்களை கோபித்தும், அவர்களின் நிந்தையை பொருட்படுத்தாமலும். என்னுடன்கூடி இனிய அன்னத்தையுண்டு, மன்னர்கள் என்னை வணங்கும்படி எனக்கு முடி சூட்டிய ராஜாதி ராஜனுகிய துரியோதனனை நான் கைவிட நினைப்

பேறுயின், தாழ்வடைவதன்றி எவ்வாறு சிறப்படைவேன். நீ சொல்வாயாக" என்று கூறினன் என்பதாம். எனவே, மேற்கண்ட பாடலின்படி தாழ்ந்த இரதகார குலமொன்று இருந்ததாகத் தெளிவாகத் தெரிவதால் அவர்கள் ஆதி பிரம்மகுலத்தவரான விஸ்வகர்ம இரதகாரர்களை எவ்வகையிலும் சேர்ந்தவர்களல்லர் என்பது நன்கு பெறப்படும்.

இனி, அந்தராளஜாதி, சுதன்வ, இரதகாரர்கள் விவரம்: மனுஸ்மிருதி 10 வது அத்யாயம், 23-வது சுலோக வுரை, இதனடியில் வருமாறு: இவர்கள் தாழ்ந்த இரதகாரர்களுக்கு உதவியாகயிருப்பவர்கள்.

விராத்திய வைசியனுக்கும் அவ்வித வைசிய விதவைக்கும் பிறந்தவன் அந்தரான சுதன்வன். இவன் ஆங்கிரஸர் வழிவந்த சுதன்வா ரிஷியினிடமுள்ள தொழிற் பெருமையை சிறப்பிக்கக் கருதி அதே பெயரைத் தானும் பூண்டான். இவனுக்கு இரதகாரனென்றும், இவனுக்கு ஐந்து விதமான பெயர்களுண்டென்றும் கூறப்பட்டிருக்கிறது. அதாவது - ஆசாரன், காரூசன் - விஜன்மா - மைத்ரன் - சாத்விதன் என தேசாசாரப்படி வெவ்வேறு பெயருடன் அழைக்கப் படுகிறார்கள் என்றும் கூறுகிறது. எனவே, இவர்கள் மிஸ்ரஜாதி (கலப்பு சாதி) யார்கள் என்று தெளிவாக ஏற்படுவதால் இவர்கள் எவ்வாற்றானும் அற்புதர் கண்ணாளர், அக்கசாலைத் தலைவர், ஸ்தபதி துவஷ்டா எனப்படும் விஸ்வகர்ம இரதகாரரைச் சேர்ந்தவர்களல்லர் என்று தெள்ளிதிற் புலனாகும்.

மேலே காட்டிய மிஸ்ரஜாதி சுதன்வாவின் சந்ததிக்கு அடுத்தபடியாகப் பிறந்த ஆயோகவனைக் குறித்தும் இங்கு பிரஸ்தாபிப்போம்.

வியாசபாரதம் - அனுசாசனபர்வம், 83-வது அத்தியாயம், சங்கர ஜாதியின் வரலாறு.

வைசியப்பெண்ணினிடம் சம்பந்தப்பட்ட சூத்திரனுக்கு, தான் சம்பாதிக்கும் தனத்தினால் ஜீவிப்பவனும், ப்ராம்

மணர்களிடமிருந்து தக்ஷிணை வாங்கத் தகாதவனுமாகிய ஆயோகவன் என்னப்பட்ட மரத்தொழிலாளர் பிறக்கிறார். இவர்கள் தங்கள் ஜாதிப்பெண்களிடத்தில், தங்கள் ஜாதிப் பிள்ளைகளையே உண்டாக்குகின்றனர். கீழ்ஜாதிப் பெண்களிடத்திலும் தாம் கலந்து கொண்டு, கீழ்ஜாதிப் பிள்ளைகளைப் பிறப்பிக்கின்றனர் எனக் கூறுகின்றது.

பராசர ஸ்மிருதியிலும் ஆயோகவனைப் பற்றி மேற் கண்டபடியே பிறப்பு விபரம் கூறப்பட்டிருப்பதுடன் அவர் கள் மலைகளில் மரம் வெட்டியும் அதனைச் செதுக்கியும் பிழைக்கும் ஒருவகை காட்டு ஜாதியினர் என்றும் கூறப்படு கிறது. இவ்வாறு பற்பல சங்கர ஜாதி (கலப்புஜாதி) இரதகாரர்களைப்பற்றி விரித்துச் சொல்லப்பட்டுள்ளது.

ஆகவே, இந்த மிச்சிர ஜாதியை உண்டாக்கிய சுதன்வா என்ற பெயரை வகித்தவனும், வேதப்பிரவர்த்தகரும், ஆங்கீரஸ ரிஷியின் வழிவந்த **சுதன்வா விஸ்வகர்ம** ரிஷியும் பிறப்பில் வேறுபட்டவர்கள் என்பது கீழ்க்கண்ட வேத வாக்கியம் நிரூபிக்கும்.

ருக்வேதம்-1-வது அட்டம். 7-வது பன்னம், 30-வது அனுவாகம், "சௌதன்வா, அல்லது சுதன்வா என்னும் விஸ்வகர்ம சந்ததிக்கு ருபுக்கள் (தேவர்கள்) என்றும், ரதகாரை முதலான பஞ்சகிருத்திய முடையவர்களென்றும், பிராம்மணர்களென்றும், ருக் வேதத்திற் கூறப்பட்டிருக் கிறது. ஆகவே, வேதத்தில் பிரஸ்தாபித்துள்ள **சுதன்வா** என்னும் விஸ்வகர்ம ரிஷிக்கும் அவரது பாரம்பரையார்களுக் கும், பிருகியஸ்மிருதியில் கூறும் மிஸ்ரஜாதி சுதன்வாவுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லையென்பது அகங்கைக் கனியெனக் காணக்கிடக்கிறது.

இஃதிவ்வாறாக, இனி ருத்திரத்திற் கூறும் இரதகாரர் களைப் பற்றி விசாரிப்போம்.

ஸ்ரீ ருத்திரம் - சதுர்த்தானுவாகம் - ருத்திரனை தியா னிக்கும் 7-ம் மந்திரம் கூறுவதாவது :

மணர்களின் அதிதேவதையாகச் சொல்லப்பட்டிருப்பதால், வித்யாரண்யர் தமது பாஷியத்தில் தக்ஷர்களிடத்தில் உருத்திரன் நிரந்தரம் வசிப்பதாக உரை கூறியுள்ளார். அவ்வாறே, கம்மியர் உருவத்திலும் கலந்திருக்கும் உருத்திரரே உமக்கு அடிக்கடி நமஸ்காரம் என்று கூறியிருப்பதனாலும், "தக்ஷப்யோ" எனப்படுவதாலும், "கர்ம காரேப்யஸ்ச" என்றதாலும் விஸ்வகர்மப் பிராம்மண இரதகாரர்கள், மற்றைய கீழ்க்குல இரதகாரர்கள், அதாவது இரதத்தொழிலைக் கற்றுக்கொண்டு செய்வோர்களையும், இரதங்களை நடத்துபவர்களையும்விட, பிறப்பினாலும், கர்மத்தினாலும் மேம்பாடுடையவர்களென்பது சந்தேகமற விளங்குவதாம். சில்பம், காசிபம்-ரதஸம்ப்ரோக்ஷணம், அம்சுமான் தந்திரம்: "ஆச்சார்ய சிஷ்யஸம்யுக்தம் ரதஸ்தானேப்ரவேசயேத்" என்பதாலும், சில்பம், சகலாதிகாரம், ரதப்பிரதிஷ்டாவிதியில், "யானேவா கஜமூர்த்நேவா ஸர்வ மங்களவாத்தியகை: சில்பாச்சார்யக்ரஹம்கத்வா க்ரமாதப்யுபசாரகை:" என்பதாலும், சிற்பாச்சார்யரும் அவர் சிஷ்யராகிற பந்துவர்க்கமாகிய தொழில் செய்தவர்களையும் சேர்த்து இரதத்தில் ஆரோகணிக்க வேண்டுமென்றும், இரதப் பிரதிஷ்டை கழிந்தபின் சகலவித உபசாரத்துடன் சிற்பாசாரியரை பல்லக்கின் மேலாவது, யானையின்பேரிலாவது வைத்து வாத்திய கோஷத்துடன் அவருடைய கிருகத்தில் கொண்டு சேர்க்க வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது. சுருதிகளாலும், வழக்கப்பாட்டாலும் விஸ்வகர்மப்பிராம்மண இரதகாரர்களுக்கே உரித்தான இவ்விததனி மரியாதைகள், உபசரிப்புகள், எவ்வளவு கைதேர்ந்த வேலைக்காரர்களானாலும் இதர கீழ்மக்களான இரதகாரர்களுக்கும், தேர்வேலையை ஏகதேசத்தில் செய்பவர்களான கீழ்மக்களுக்கும் வழங்கப்படுவதில்லையென்பது கண்கூடு.

எனவே, விஸ்வப்பிராம்மண இரதகாரர்கள், மற்றைய கீழ்க்குல இரதகாரர்கள், அதாவது இரதம்கட்டுந் தொழிலை,

சில்ப ரீதியாகக் கற்றுத் தேராமல், இரதத் தொழிலை அல்லது கொத்தொழிலை ஒருவாறு வழக்கப்பாட்டால் கற்றுக்கொண்டு செய்வோர்களையும், கேவலம் சாரதிகளாக இரதங்களை ஓட்டுபவர்களையும் விட, சாஸ்திர சம்மதத்தாலும், பிறப்பினாலும், கர்மத்தினாலும் மேம்பாடுடையவர் களென்பது சந்தேகமற விளங்கும். மலைக்கும் மடுவுக்கும், சூரிய வெளிச்சத்துக்கும் இருளுக்கும், உள்ள வித்தியாசத்தைப்போல், பிறப்பினுயர்வாலும், தொழிலுன்னதத்தாலும் பூர்வந்தொட்டே பிரகாசியா நிற்கும் விஸ்வகர்ம இரதகாரர்களையும், சூத இரதகாரர்களையும் ஒன்றெனக் கூற முனைவது அடாத பாப கர்மமாகும்.

---

## 12. விஸ்வகர்மப் பிராம்மண பராசக்தி வழிபாடு

இன்றுள்ள விஸ்வகர்ம மரபினர்கள், காளிகாதேவியைத் தங்கள் குலதேவதையாக எங்கனும் கொண்டாடுவதைக் காண்போம். ஆதிவிஸ்வகர்ம ரிஷிகட்கு பற்பல சத்திகள் மனைவியர்களானார்களென்றும், அவர்கள் வழியே விஸ்வப்பிராம்மண சந்ததியுண்டாயிற்றென்றும், 4-வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. சத்தியின்றி சிவமில்லை யென்பது அதனால் சித்திப்பதாகும். படைப்பு அல்லது சிருஷ்டித்தொழிலுக்குப் பூர்வ ரிஷியாதியோர் சத்திகளை மணந்து, அந்த சத்திகளைத் தம்முள் ஐக்கியமாக்கிக்கொண்டு அதன் காரணமாக சிருஷ்டிகளை எவ்வாறு லோகோபகாரமாக செய்தனரோ, அதுபோலவே அவர்கள் வழிவந்த விஸ்வப்ராம்மண வம்சத்தார், தமது பூர்வ தாய்மார்களாகிய சத்திகளில் முதன்மைபெற்ற ஸ்ரீ காளிகாதேவியை அதிதேவதையாகக் கொண்டு, அடிபணிந்து தங்கள் பணி

களைச் செய்துவருவதில் ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை. மேலும், இப்பராசத்தி வழிபாட்டிற்கு அடியிற் குறிக்கும் இரண்டொரு முக்கிய காரணங்களும் உள்ளன. பின்னும், இவை விஸ்வகர்ம புராணம் தர்ப்பணை பாக்கியானத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

முதலாவது - ஸ்ரீ காளி, ஆதிசத்தியின் முதல் அவதாரமாவாள். ஆதிசத்தியின் அவதாரங்கள் எல்லாவற்றுள்ளும் **லலிதா** அல்லது இராஜராஜேஸ்வரி மிகவும் **முக்கியமானவள்**. நவராத்திரியில் லலிதா ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லி லலிதாவைப் பூஜிப்பது சர்வசாதாரணமான வழக்கம். புராணங்களில்சொல்லியுள்ளபடி ஸ்ரீ சக்கரத்தை உபாஸிப்பதால் சகல தேவதைகளின் உபாஸனையும் அதில் அடங்கியுள்ளது. லலிதா பூஜையில், சகல சத்திகளின் பூஜையும் கலந்திருக்கிறது. உலகத்திலுள்ள சகல மந்திரங்களும் சத்தியைக் குறித்துள்ளன. ஆனால், அவற்றின் அர்த்தங்கள் புருஷாகாரத்தையும் சேர்த்து உணர்த்துகின்றன. சிவபஞ்சாக்ஷரி, அஷ்ட்டாக்ஷரி, துவாதசாக்ஷரீ முதலிய யாவும் பெண்பாற் பெயர்களாகவே இருப்பதால் எல்லா மந்திரங்களும் சத்தியையே உபாஸிக்கின்றன. ஆதலால், சத்தி எல்லோருக்கும் மிகத் தேவையும், சம்மதமுமான தெய்வமாக இருப்பதால் சத்தி பூஜை எல்லோருக்கும் அத்யாவசியமாகும்.

சத்தியின் புருஷாகாரத்தாலும், ஸ்திரீ அவதாரத்தாலும் அனேக அசுரர்கள் சம்ஹாரம் செய்யப்பட்டார்கள். ஸ்ரீ காளிதேவியின் உருவில் இந்த அவதாரங்களைப் பூஜிப்பதற்கே நவராத்திரியில் லலிதா பூஜை சங்கிரகித்துச் செய்யப்படுகிறது. ஸ்ரீ காளிகாதேவி விஸ்வப்பிராம்மண வகுப்பாரின் குலதெய்வமானது எவ்வாறெனின், "விஸ்வகர்ம புராணத்திலுள்ள" தர்ப்பணை பாக்கியானம் கூறுவதாவது : ஒரு காலத்தில் சிவபிரானும், விஸ்வகர்மாவும் யார் பெரியவர் என்ற விவாதத்தில் ஒருவரையொருவர் சபித்துக்

கொண்டார்கள். இந்த சாபங்களால் உலகம் ஸ்தம்பித்து மிகுந்த கஷ்டங்களுக்கு உள்ளாயிற்று. இதனால் இருவருக்கும் பொதுவாயுள்ள சக்திகள் திரண்டு காளி உருவமாக அங்கே பிரசன்னமாகி இருவரையும் சமாதானப் படுத்தினாள். அவள் விஸ்வகர்மாவைப் பார்த்து, “ சிவபிரான் உங்கள் குலத்தைச் சபித்தது நியாயமன்று. உங்கள் வகுப்பார் தமது பஞ்சகிருத்தியங்களால் உலகிற்கு உபகாரம் செய்வதால், நான் அவர்களுக்கு அச்சக்தியைக் கொடுத்து அவர்களுடைய அதிதேவதையாக இருக்கிறேன் ; அவர்கள் என்னை வழிபடுவதால் நான் அவர்களை இரட்சிக்கிறேன் ” என்று சொன்னாள். இதைக் கேட்டு திருப்தியடைந்து காளிகாதேவியை விஸ்வப்பிராம்மண குலத்தார் தமது தெய்வமாக ஏற்க வாக்குதானம் செய்தார்கள். மற்றொரு காரணமாவது :

முன்னொரு காலத்தில் விஸ்வப்பிராம்மண குலத்தைச் சேர்ந்த மூவர் தாம் அமைத்த அரிய சிற்பவிதானங்களுக்கு அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வரியைக் கொடுக்க மறுத்துவிட்டார்கள். தனது உத்தரவை மீறி நடந்த அவர்களைக் கழுவிலேற்றும்படி அரசன் கட்டளையிட்டான். பொதுநன்மைக்காக ஒரு குலத்தார் செய்யும் தொழிலுக்கு வரி விதிக்கவும், செலுத்தவும் தங்கள் கௌரவத்திற்குத் தாழ்வு என்றும், ஒரு அரசனால் சிக்ஷிக்கப்படுவது மானஹீனமென்றும் கருதி தங்கள் உயிரைத் தாங்களே யோகசக்தியால் போக்கிக்கொண்டனர். அவர்களுடைய சிரங்கள் ஜோதி மயமாகப் பறந்து காளிதேவியின் சரணங்களை அடைந்தன. அப்பொழுது எல்லோருக்கும் காளிகாதேவியின் தரிசனம் கிடைத்தது. அவர்கள் யாவரும் பிழைத்தெழுந்தனர். அதன்பின் அரசனால் அந்த வரி நீக்கிவிடப்பட்டது. அந்த மூன்று வீரர்களும் தங்கள் குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகத் தங்கள் பிராணனைத் தியாகம்

செய்தார்கள் என்று பெறப்படுகிறது. இன்னும் வேறொரு காரணமாவது :

முற்காலத்தில், சோழமன்னர் ஆட்சியில் அமரசிங்கன் என்ற பிரதம மந்திரி விஸ்வப்ராம்மணர்களுக்கு அரசனிட மிருந்த செல்வாக்கைக் கண்டு பொருமை கொண்டான். அவர்கள் பிரதம மந்திரியிடமுள்ள குற்றங்களை அரசனிடம் சொல்லாதிருக்கும் பொருட்டு அவர்களைக் குலநாசம் செய்துவிட எண்ணி அதற்காக அவன், அரசனை கைலாச பர்வதத்திற்கு யாத்திரை போகும்படிச் செய்து அவன் திரும்பி வருவதற்குள் விஸ்வப்ராம்மணர்களை ஒழித்துவிடத் தீர்மானம் செய்தான். அதற்கஞ்சி விஸ்வகர்மர்கள் காடு களில் ஒளிந்துகொண்டனர். அவர்களை துஷ்ட மிருகங் களைக் கொல்வதுபோல் வேட்டையாடிக் கொன்றான். யாத்திரையாகச் சென்றிருந்த சில விஸ்வப்பிராம்மணர்கள் காளியின் அனுக்கிரகத்தால் அந்த அரசனுடைய ஆதர வைப் பெற்றார்கள். அரசன், பிரதம மந்திரி அமரசிங்க னுடைய அட்டூழியங்களுக்காக அவனை கழுவேற்றினன். அதனால், விஸ்வப்ராம்மணர்கள் சதா காலமும் காளியை பூஜித்து அவளது அனுக்கிரகத்தைப் பெற்றுவந்திருக்கிறார் கள். இந்த சரித்திரம் "தீரஜன மனேவிராஜிதம்" என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

இன்னும் ஸ்ரீ காளிகாம்பாள் அல்லது காமாக்ஷியம்மை விஸ்வப்ராம்மணர்களின் குலதெய்வம் என்பதற்கு பதி னெண் புராணங்களில் ஒன்றான காளிகா புராண ஆதாரம் :

இற்றைக்குச் சுமார் 2500 வருஷங்களுக்குமுன் விஸ்வ கர்மர்களுக்குக் கோட்டையான மாந்தைமாநகரம் அழிவு பட்டவுடன் அவர்கள் வெளிப்பட்டு சீனம் சென்ற சிலர் போக பெரும்பாலார், காசி முதல் காஞ்சிநகரம் வரை பரவி வசித்துவந்தார்கள். அவர்கள் ஐம்பத்தாறு தேசத்தாருக்கும் பஞ்ச கிருத்தியத்தால் நிர்மிக்கப்பட்ட சாமான்களை தேசா

திச் செட்டிகள் மூலமாய் வியாபாரம் செய்துவரும் நாளில் விப்பிரர்கள் அப்போது அரசாண்ட தரணி மகாராஜனை விஸ்வப்ரம்ம வம்சத்தாரிடத்தில் திர்வை கேட்கும்படி தூண்டுதல் செய்தார்கள். விஸ்வப்ராம்மண வம்சத்தார்கள் எந்த அரசர்களுக்கும் திர்வைகொடுப்பது அவர்கள் வழக்கமில்லை என்றார்கள். அதற்கு அரசன் காரணம் கேட்டான். ஐம்பத்தாறு தேசத்தார்களுக்கும், விஸ்வப்ரம்ம வம்சத்தாராலேயே அதாவது மனு-மய-துவஷ்ட-சில்பி-விஸ்வக்ஞர்கள் புரியும் பஞ்சகிருத்தியமென்னும்-இரும்பு-மரம்-செம்பு-கல்-பொன்-வகைகளாலாகிய ஐந்து தொழில்களையும் நடத்தி வருகிறபடியாலும், அந்த பஞ்சகிருத்தியத்தினால் அரசர்கள் அரசாளுவதினாலேயும், அந்தந்த ராஜசபையில் விஸ்வப்ரம்ம வம்சப் பெரியோர்கள் ஆச்சாரிய பீடமாயிருந்து மனுநீதி வழுவாமல், அரசர்கள் அரசு செலுத்தவும், அதற்கு காலக்கியானப்படி திரிகாலவர்த்தமானங்களையும் சொல்லி வருகிறபடியாலும் எங்களிடத்தில் திர்வை வாங்க நீதியில்லை யாகையால் தாங்கள் நூதனமாக எங்களிடம் திர்வை கேட்கிறது மனுநீதிக்கு விரோதமென்று மறுத்துச் சொன்னார்கள். அதனால் அத்தரணி மகாராஜன் வெகுண்டு அவர்களையும் அவர்களது பஞ்சகிருத்தியத்திற்கு ஆதாரமான சாமான்களையும் சிறைப்படுத்தினான்.

தரணி மகாராஜன் விஸ்வப்ரம்ம வம்சத்தாரையும் அவர்களுடைய பஞ்சகிருத்திய சாமான்களையும் சிறை வைத்ததைக் கேள்விப்பட்ட தேசாதிபதிகளில் பெத்தன்ன ராஜுகாரு தம்முடைய நால்வகைச் சேனைகளுடன் வந்து தரணி மகாராஜனை எதிர்த்து யுத்தம் செய்யும்போது அச்சேனைகள் நடுக்கிட்டோடுவதைக் கண்ட தரணி மகாராஜன் உக்கிரங்கொண்டு சிறைச்சாலையிலிருப்பவர்களில் துவஷ்டாச்சாரியை சிரச்சேதம் செய்வேனென்றான். அதற்கு துவஷ்டாச்சாரி தம்மைச் சிரச்சேதம் செய்தால் அவன் சிரம் அதே கதிக்கு ஆளாகுமென்றான். அதைக்

கேட்ட அரசன் தனது உடைவாளால் துவஷ்ட்டாச்சாரி யின் சிரசைத் துண்டித்தான்.

அந்த சிரமானது "கஞ்சிபிஞ்சுக்கு சுங்கம் லேது" அதாவது கஞ்சி காமாக்ஷியின் குழந்தைகளுக்கு வரியில்லை என்று ஸ்ரீ காமாக்ஷியம்மையின் பாதத்தைச் சென்றடைந்தது. அந்த காமாக்ஷியம்மை மாகாளி ரூபமாய் ஆர்ப்ப வித்து தரணி மகாராஜன் குடலைப் பிடுங்கி அருகில் துதி செய்துகொண்டு நின்ற தேசாயி செட்டி கழுத்தில் மலர் ஆரமென்று மாலையாய்ப் போட்டு அந்த அரசன் தோலை உரித்து கம்பளமாகக் கொடுத்து, விஸ்வப்ரம்ம குலத்தாரை நோக்கி நீங்கள் இருதரத்தாரும் என்னை எப்பொழுதும் தியானித்து வந்தால் உங்கள் இஷ்ட சித்தியாகுமென்று அநுக்ரகம் செய்தாள்.

அந்தக் குடல்தான் தேசாதி செட்டிகள் கழுத்தில் மலராரமென வளையல்கள் கோர்த்து மாலையாய் விளங்குகின்றது. அந்த அரசன் சர்மமானது, கம்பளமாயிற்று. அக்கம்பளம் சத்துருவின் தோலாகையால் இந்நாளும் தேசாதிச் செட்டிகள் தங்கள் இடதுகால் பெருவிரலால் அதை எடுப்பார்களே யொழிய, வலதுகால் பெருவிரலாலாவது, அல்லது கையினுலாவது, கீழே விரிக்கப்பட்டிருக்கிற கம்பளத்தை யெடுப்பதில்லை. இவைகளே விஸ்வப்ராம் மணர்களின் பராசக்தி வழிபாட்டிற்குக் காரணங்களாம். 10-வது அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளதும் உமாதேவியாரின் வழிபாட்டிற்கு மற்றுமொரு காரணமாகலாம்.

மேலே கூறியவற்றுல், விஸ்வகர்மப்பிராம்மணர்கள் கேவலம் சாக்தேய மதத்தினர் அல்லர் என்பதும், அவர்கள் தம் ஐந்தொழில்கட்கு இன்றியமையாத சத்தியை - சிவத்தோடு ஐக்யப்பட்ட தேவியை உபாசித்தும், பூஜித்தும் வந்தவர்களென்பதும், வருபவர்களென்பதும் நன்கு பெறப்படும். பின் காளையப் புராணக் கூற்றுக்களாலும், மூட பக்தியின் காரணமாகவும், நாட்டின் வழக்கப்பாட்டை

யொட்டியும் காளிக்கு மிருகபலி, நரபலி, சுராபானம் ஆகிய வற்றால் ஆராதனை நடைபெறுகின்றது. ஆதிசைவர்களென வேதங்களில் கூறப்படும் விஸ்வகர்மப்பிராமணர்கள் மேற் கூறிய காளிகாதேவியின் பக்தர்களானாலும், அவர் களிடையே மிருக பலியோ, சுராபான ஆராதனையோ வழங் கப்படுவதில்லையென்பது உலகப்பிரசித்தம். விஸ்வகர்மர்கள் நாளும், கையாண்டு வரும் லலிதா பூஜை, சரஸ்வதி பூஜை, விஸ்வகர்ம பூஜையெனப்படும் ஆயுதபூஜை ஆகியவைகள் சக்திபூஜைகளாகயிருப்பினும், சைவ ஆகமங்களையொட்டி பரம வைதிகச் சடங்குகளாக எங்ஙனும் நிகழ்த்தப்பெறு வதே இதற்குப் போதிய சான்றும்.

---

## 13. சிற்பசாஸ்திரங்களும், உபசிற்பங்களும்

சிற்பம் எனப்படுவது பலவகையிலும் விரிந்துசென்று, ஆராய்ந்தறிந்து ஒருமுகப்பட்டு, நுவியும் கூரிய அறிவும், அதன் பயனுல் வினையும் கைவினைத் தேர்ச்சியுமெனப் பொருள் தருவதாம். ஆக்ருதி, அலங்காரம், விசித்திரம், வேலைப்பாடு முதலியனவற்றையும், முக்கியமாக அழகை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரம் எனவும் பொருள் கொடுக்கும். அதுகட்டிட, விக்ரக நிர்மாணங்களின் பல திறப்பட்ட பேதங்களைக் கூறு கூறாகக் கூர்ந்தறிந்து, கற்பனு சாமர்த்தியத்தைக் கராதனத்தால் உலகறியக்காட்டும் கட்டுமுறைத் தேர்ச்சி அல்லது பரந்த விஞ்ஞான நூல் அறிவு எனவும் விரியும். இவைகளனைத்தையும் உள் ளடக்கி "விஞ்ஞானம் சில்பசாஸ்த்ரயோ:" என்னும் அமரகோசம் தெளிவுறுத்துகின்றது. மேலும், நாம் உலகில் காணும் எப்பொருளும், பஞ்சபூதங்களும் பற்பல அணுக்களின் பேதாபேதங்களாலும், கூட்டுறவாலும்

உண்டாவன என்பதை அறிவுறுத்தும் விரிந்த விஞ்ஞான - சாஸ்திரீய அறிவைத் தந்து மோட்ச சாதனங்களை விளக்கும் நூல்களே சிற்பசாஸ்திரங்கள் என்பது மேற்காட்டிய சுலோகத்தால் தெள்ளிதில் விளங்கும்.

இச்சிற்ப நூல்கள் ஆதியில் தேவசிற்பி விஸ்வகர்மா, அல்லது உலகப்படைப்பாளர் ஆக்ஞாபிக்க, அவர் வழிவந்த ரிஷியாதியோராகிய விஞ்ஞான அறிவு படைத்த முனிவரர்களால் உலகுக்குத் தரப்பட்டவைகளென்பது ஆராய்ச்சியால் உறுதிப்படும் உண்மையாம். அந்த சாஸ்திரங்களைப் பின்பற்றியும், அளவை, பரிமாணம், கட்டுமுறைத் தேர்ச்சி, அழகைப் பிறப்பிக்கும் ஆற்றல் ஆகியவற்றை ஒருங்கே கொண்டவர் அன்றிருந்த விஸ்வகர்மர்களும், இன்றுள்ள அவர்கள் சந்ததியார்களுமாவர் என்பதை எவரே மறுத்துக் கூறுதற்கியலும் ?

உலகிலுள்ள மக்கள் யாவரும் இகபர, சுகங்களை ஒருங்கே பெற்று, உடம்பினலாகும் பயனுகியமோட்ச சாதனத்தைப்பெறவேண்டுமென்ற உயரிய நோக்கங்கொண்டு அதற்கான தேவாலயங்களையும், விக்ரக நிர்மாணங்களையும் விளக்கும் நூற்களே சிற்பசாஸ்திரங்கள் என்பது மிகையன்று. பொதுவகையில், இந்நூற்கள் மக்களின் வாசஸ்தலங்ககளைக் குறித்தும், நகர நிர்மாணங்களைப் பற்றியும் மண்டபங்களைக் குறித்தும் பொதுவாகக் கூறுவதாயினும், தேவாலய பேதா பேதங்களையும், அவைகளின் நிர்மாணங்களைக் குறித்தும் பெரிதும் பேசுவனவாம், இத்தேவாலயங்களை மத்தியில் கொண்டு, சுற்றிலும் மக்கள் வதியும் நகரங்களை நிர்மாணித்தல் முறையென அந்நூற்கள் பகராநிற்கும். இன்றுள்ள நகரங்களே அவ்வாறு தோன்றியுள்ளனவென்பதற்குப் போதிய சான்றுக்களாம்.

இனி சிற்பத்தாலாகிய தேவாலயங்களை நோக்குவோம். அவைகளுக்குப் பல அங்கங்களைச் சிற்ப நூற்கள் வகுத்துக் கூறும். கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், அந்தராள

மண்டபம், மஹாமண்டபம், ஸ்தபனமண்டபம், வாத்ய மண்டபம், சோபனமண்டபம், கோபுரத்துவாரசாலமண்டபம், பஞ்சப்பிரகாரம், பஞ்சகோபுரங்கள் ஆகியனவற்றை தத்துவார்த்தமாக சிருஷ்டித்தும், விக்னேஸ்வராதிய சகல பிம்பங்களை சிலையினாலும், தாம்பிரத்தினாலும் அழகுபட உண்டாக்கியும், இரதம், தேர் முதலிய வாகனாதிகளை மரத்தினாலும், உலோகத்தினாலும் செய்துகொடுத்தும், ஓவிய நூல் தேர்ச்சியால் பற்பலவற்றைச் சித்தரித்துக் காட்டியும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முறையையும் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நிலைகளைத் தெளிவுப்படுத்தியும் மக்களை உய்விக்கச் செய்தும் வருவனவாய் சிற்பசாஸ்திரங்களும், சிற்பநூல் வல்லோர்களாகிய விஸ்வகர்ம சந்ததியார்களும் பூர்வந்தொட்டே இருந்து வருவது யாவராலும் ஒப்பமுடிந்த உண்மைகளாம்.

இன்னும், அந்த சிற்பிகள் வான சாஸ்திரத்தைப் பழுதறவோதியும், கோள்கள் நிலைகளையும், அவற்றின் சஞ்சாரங்களையும் நன்குணர்ந்தும், சூரிய சந்திர கிரகணங்களையும், அந்நாட்களையும் தவறுதலின்றிக் குறிப்பிட்டுக் காட்டியும், உலகம் தோன்றிய காலந்தொட்டு சூரியனுக்குக் கெதி பேதம் இல்லையென்பதை நன்குணர்ந்து அதை நிரூபிக்கும் வண்ணம் பல தேவாலயங்களிலுள்ள மூலஸ்தான இலிங்கங்களின்மீது குறிப்பிட்ட தினங்களில், குறிப்பிட்ட மணி நேரங்களில் சூரிய கிரணங்கள் விழும்படி தங்கள் அரியசிற்ப வன்மையை உலகமக்கள் நன்கறிய நிலைநாட்டியுமுள்ளார்கள். இதற்கு சூரிய பூஜை எனப் பெயரிட்டுமுள்ளனர். இந்த சூரிய பூஜை நடைபெறும் சில ஸ்தலங்களை இனி இங்கு குறிப்பிடுவோம். பிரதி சித்திரை மாதம் 11, 12, 13-உ கும்பகோணம் நாகேஸ்வரர் கோவிலிலும், மாசி மாதம் 13-ந் தேதி முதல் 15 ந் தேதி வரையில் திருக்கண்டியூர் தேவாலயத்திலும் பங்குனி மாதம் 13 முதல் 16 ந் தேதி வரை திருவேதிகுடியிலும், ஆவணி 31, புரட்டாசி

1, 2 தேதிகளிலும், பங்குனி மாதம் 14, 15, 16 தேதிகளில் கள்ளப்பிரம்பூர் திருக்கோயிலிலும், மாசி மாதம் 17-ந் தேதி முதல் 21-ந் தேதி வரை குன்றத்தூர் சேக்கிழார் சுவாமிகள் ஆலயத்திலும், பூவிருந்தவல்லி தேவஸ்தானத்திலும் இந்த சூரிய பூஜை எத்தனையோ ஆயிரம் வருடங்களாக நடைபெற்று வருகின்றது. சிருங்கேரி சங்கராச்சார்ய மடாலயத்திலும் 12 மாதங்களை சூரியகிரணங்களால் அறிந்து கொள்ளத் தக்கவாறும் சரியான நாழிகையை உணர்த்துமாறும், சூரியகடிகார இயந்திரம் ஒன்று துவஷ்ட்ட சந்ததியிலுதித்த ஆதிசங்காரச்சாரியரால் நிருமிக்கப்பட்டுள்ளது. இன்றைய விஞ்ஞான உலகம் இவ்வாறு செய்தற்கியலுமாவென்பது அறிவாளிகளால் ஆராயத்தக்கதாம்.

இங்கு சிற்பங்களுக்கு உரிமையாளரான விஸ்வகர்ம சந்ததியாரின் வரிசைக்கிரமத்தைச் சற்று ஆராய்வதும் நன்றாகும். விஸ்வகர்மர்களின் மூலரிஷிகள் ஐவருக்கும் முறையே இரும்புத்தொழில், மரத்தொழில், உலோகத் தொழில், கல்தச்சு, ஆபரணத்தொழில் ஆகிய ஐவகைப் பட்டவைகளென முந்திய பல அத்தியாயங்களில் பன்னிப் பன்னிக் கூறப்பட்டுள்ளது. பின்னால் கூறிய நான்கு தொழில்களைச் செய்வதற்கு முதலில் கூறப்பட்ட இரும்புத் தொழில் மிக இன்றியமையாததென்பதை அவ்வரிசைக் கிரமமே உணர்த்தும். முந்திய நான்கு தொழில்களும் அவைகளால் ஆகிய சிருஷ்டிகளும் கைவந்தபின் மக்கள் தங்களையும், தாம் பூஜிக்கும் தேவர்களையும், பிந்திய ஆபரணத்தொழிலால் அழகுப்படுத்தினார்களென்பது நன்கு விளங்கும். எனவே, மேற்குறித்த ஐந்தொழில்களும் சிற்ப சாஸ்திரங்களின் அங்கங்களாகவும், வேறுபடுத்தக்கூடாதவாறு ஒன்றுக்கொன்று அந்நியோன்ய சம்பந்தம் பெற்றவைகளாகவும் இருப்பனவாம்.

இன்றும், சிற்பக்கலையறிவில் சிரியர்கள் விஸ்வகர்மர்களேயாவர். அக்கலைக்கு ஆதாரமான சிற்பநூற்கள் இரு

வகையாம். ஒன்று பிரதம சிற்பங்கள் எனப்படும். மற்றொன்று உபசிற்பங்களெனப்படும். பிரதம சிற்ப நூற்கள் முப்பத்திரண்டாம். உபசிற்ப நூற்களும் முப்பத்திரண்டு எண்ணிக்கை கொண்டவைகளாம். பிரதம சிற்பங்கள் பல மூலரிஷிகளால் ஆக்கப்பட்டவைகள். உபசிற்பங்கள் அவர்கள் வழிவந்த ஆன்றோர்களால் விரிவாக்கப்பட்டவைகளாம். சிற்பநூல்கள் 260 வரை உள்ளனவெனக் கூறுவோரும் உண்டு. அவைகளில் பல கடலால் அழிவுற்றனவென அவர்கள் அறைகின்றனர். சிற்பநூற்கள் அனைத்தும் ஆரிய மொழியாகிய வடமொழியில் எழுதப்பட்டுள்ளனவாம். எனவே சிற்பசாஸ்திரிகள் வடமொழியில் பாண்டித்தியம் பெற்ற வேதவித்துக்களான ஆரியர்கள் - அறிஞர்களென்பதில் ஐயமில்லை.

இனி சிற்பநூல்களை முறையே நோக்குவோம்.

### பிரதம சிற்பநூற்கள்—32

1. விஸ்வதர்மம்
2. விஸ்வேசம்
3. விஸ்வசாரம்
4. விர்த்தம்
5. தாவட்டம்
6. நளம்
7. மயம்
8. ஹனுமான்
9. பானு
10. கற்பாரியம்
11. ஸ்ருஷ்டம்
12. மானசாரம்
13. வாஸ்துவித்யாபதி
14. பாராசாரியம்
15. ஹரிஷிகம்
16. சயித்தகம்
17. வாஸ்துபோதம்
18. விஸ்தாரம்
19. ஐந்த்ரம்
20. வஜ்ரம்
21. சௌமம்
22. விஸ்வகாசிபம்
23. மகதந்த்ரம்
24. விசாலம்
25. சித்ரம்
26. காபிலகாலயூபம்
27. நாமஸம்ஹிதை
28. ஸாத்திகம்
29. விஸ்வபோதம்
30. ஆதிசாரம்
31. பஹுஸ்ருதம்
32. மானபேதம் ஆக 32

உபசிற்ப நூற்களாவன :

1. காஸ்யபம்
2. கௌதமம்
3. கிரகவாஸ்துசாரம்
4. விஸ்வேசம்
5. வாஸ்துபோதம்
6. மகா தந்திரம்
7. சைத்ரிகம
8. ஆயாதிலக்ஷணம்
9. மனுதந்த்ரம்
10. குமாரவாஸ்து
11. விஸ்வபோதம்
12. விஸ்வகர்மீயம்
13. விஸ்வகலாதீதம்
14. மயசில்பதந்த்ரம்
15. த்வஷ்ட்ருதந்த்ரம்
16. விஸ்வகர்மப்ரகாசம்
17. விஸ்கர்மசில்பம்
18. விஸ்வகர்மசித்தாந்தம்
19. வாஸ்துமஞ்சரி
20. வாஸ்துவிசாரம்
21. வாஸ்துசாஸ்திரம்
22. விமானுதிமானம்
23. சில்பசம்ஹிதை
24. மகாமயஜயம்
25. வாஸ்துஸாரம்
26. சில்பரத்னகரம்
27. மூலஸ்தம்ப நிர்ணயம்
28. விஸ்வகர்மாவதாரம்
29. அகத்தியசில்ப போதம்
30. சகலாதிகாரம்
31. சூர்யசித்தாந்தம்
32 கௌமாரஸம்ஹிதா

ஆ 32

சிற்பங்கள் அழகைக் குறிப்பனவாதலாலும், பிரதிமை நிர்மாணம் சாமுத்திரிகா லட்சணத்தில் வரையறுத்துக்கூறியுள்ள 32 அழகைச் செயலளவில் காட்டவேண்டிய வித்தையாக இருப்பதாலும், பிரதம சிற்பநூற்களும் அத்தகைய எண்ணிக்கைகொண்டவைகளெனக் கருதுவது தவறன்று.

வேதங்களிலிருந்து சிற்பம் பிரிக்கப்படாதவாறு இணைக்கப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. 7-வது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள பல பேதங்கொண்ட யாககுண்டங்களும் அவைகளைக் கட்டுமுறைகளும் வேத சம்மதம் பெற்றவைகளென விரிவாகக் கூறப்பட்டிருப்பனவாம். ஒன்பதாவது அத்தியாயத்தில் இரதகார விஸ்வகர்மர்களை விளக்குமுகத்தான் சிற்பசாஸ்திரங்கட்கும், வேத இதிகாச புராணங்களுக்குமுள்ள பிணைப்புக்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இனி வேதங்களில் கூறப்பட்டுள்ள சிற்பங்கள், விக்ரக நிர்மாணங்கள் ஆகியவற்றைக் குறித்து விளக்கு

வோம். கிருஷ்ண யஜுர்வேதம், தைத்திரீய சம்ஹிதை காண்டம், 5-வது பிரஸ்னம், 7-வது அனுவாகம் 1 ல்,

" ஸம்வத்ஸரஸ்ய ப்ரதிமா, யாம்த்வாராத்யுபா
ஸதே, ப்ரஜாப்ஸுகீராம் க்ருத்வா விஸ்வமா
மூர்வ்யச்னவது, பிரஜாபத்யாம் "

இதன் பொருள் :

ஸம்வத்ஸர அதாவது கால சொரூபியான பரமாத்மாவாகிய உம்முடைய ரூபம் எதுவோ, அதைப் போன்ற பிரதிமையை, அதாவது விக்ரகத்தைச் செய்து ஆலயத்திலிருத்தி, இருட்டாகிற அஞ்ஞானம் போக உபாசிக்கிறார்கள். அவ்வாறு உபாசிக்கிறவர்கள் வல்லமை பொருந்திய புத்திரர்களையும், பூரண ஆயுளையும் அடைகிறார்கள். பிரஜைகளுக்கு எஜமானத்துவத்தையும் அடைகிறார்கள் என்றும்,

யஜுர்வேதம் மைத்ராயண்ய ஸம்ஹிதை காண்டம் 3, பிரஸ்னம் 1 ல்,

" பாஷாண லோஹமணிம் ருண்மய விக்ர
ஹேஷு பூஜாபுனர்யோக சரிமாமுமூகேஷா :" எனவும்,

இதன் பொருள் :

பாஷாணம் எனப்படும் கருங்கல், உலோகங்கள், இரத்தினங்கள், மண் ஆகியவற்றால் சிற்ப விதிப்படி செய்யப்பட்ட விக்ரகங்களைப் பூஜிப்பதனால், பசுக்கள் பந்தங்களிலிருந்து விடுபட்டு, சுகத்தை அடைகிறார்கள் என்றும், விக்ரகங்கட்கு சிற்பிகளால் செய்யப்படும் மூர்த்திகர ஸ்தாபனத்தை விளக்குங்கால், அதர்வணவேதம், காண்டம் 1, கற்பகம் 2, த்வனி 3ல்,

" ஏகஸ்யமான மாதிஷ்டத் - அஸ்மாபவது
தேதனு : தேதனு : " எனவும்,

இம்மந்திரத்தின் பொருள் : ஓ பகவானே ! வாரும், இக் கற்பிரதிமையில் எழுந்தருளியிரும். உமது சரீரமானது

கல்விக்ரகமாக இருக்கட்டும் என்றும், இன்னும் விக்ரகங்களின் மூர்த்திகரத்தைப் பற்றிய சிற்பாச்சாரியர்களின் பிரார்த்தனையாக, தைத்திரீய சம்ஹிதை - காண்டம் 5, பிரஸ்னம் 6, கண்டம் 7ல்,

" அக்னே ஹிரண்ய கர்ப்பதேவபாவக, ஸர்மஸூக, ஸர்ம நிவாஸ ஆஸாம் மூர்த்திநாப் ஸர்மாம் கேவ்யஸ்ஸாவ தாதுப் யஸ்ஸகாபபாந்தி நிர்க்கச்சதாபம் தாஹம் சமய சமய சீதலதா மங்காவயவ தாதுஷூ குரு குரு " எனவும்,

இதன் பொருள் : ஓ அக்னியே ! ஓ அக்னி சொரூபமான ஹிரண்யகர்ப்பா ! சகல ஸ்வரூபியே ! சமஸ்தத்திலும் கலந்து வாசம் செய்கிறவரே ! லோக சொரூபமான இந்த விக்ரகங்களின் எல்லா அவயவாதிகளினின்றும் வெளிப்படும், வெளிப்படுவீராக ! எங்களை மூவகை தாபங்களிலிருந்தும் விடுதலைசெய்து விடுவியும் ! எங்களுடைய அங்கம், அவயவம், நரம்பு ஆகியவைகளைக் குளிர்ச்சி பொருந்தியதாகச் செய்யும் ! என்றும், இன்னும், விக்ரகங்கள் இன்னின்ன ரூபமாக இருககவேண்டுமென்பதற்கு, தைத்திரியம் அல்லது கிருஷ்ண யஜூர்வேதம், காண்டவ ஸம்ஹிதை காண்டம் 4, பிரஸ்நம் 3, கண்டம் 4 ல்,

" ஸூரூபாம் ப்ரதிமாம் விஷ்ணே ப்ரசன்னவதனேக்ஷணம்,
தாமர்த்ச்சயேத்தாம், ப்ரணயேத்தாம், யஜேத்தாம் விசிந்தயேத்"
என்றும்,

இதன் பொருள் : பிரசன்னமான முகம், கண்கள் இவைகளோடு கூடிய விஷ்ணுவைப் போன்ற நேர்த்தியான ரூபமுள்ள விக்ரகம் எதுவோ அதைப் பூஜிக்கவேண்டியது, தியானிக்க வேண்டியதென்பதாம். மேலும், சானகமகரிஷி, ஆதிசக்தியாகிய தம்பதிகள் மூலம் பிறந்த பஞ்சாருஷேய ரிஷிகளில் இரண்டாவது புத்திரரான காசிபர், சுராசுரர்களுக்குப் பொதுத் தந்தையாவார். அவர் தேவ - அசுர

சிற்பங்களுக்கு அதிபர் என்றும் பல சிற்பநூற்களை ஆக்கியுள்ளவர் என்றும், அவைகளில் முக்கியமாகக் குறிப்பிடத் தகுந்தது காசியம் ஆகும் என்பதாம். அஃது உபசிற்பங்கள் 32ல்தலையாயதாம். இதனால் ஆதிசிற்பநூற்கள் தோன்றிய காலம் அல்லது யுகத்துக்குப் பின்னரே காசியபரிஷி, தோன்றினரென்பது நன்கு விளங்கும்.

தைத்திரிய காண்டம் - ப்ராஹ்மணம் - அனு - 2. ப்ரபா - 7, அர்த்தியாயம் 25, த்வனி 3ல் உள்ள சுருதி வாக்கியம்,

" யத்தே சில்பம் கஸ்யப ரோசனாவத் இந்த்ரியாலத்
புஷ்க்கலம் சித்ராபானு யஸ்மின் ஸூர்ய அர்ப்பிதாஸ்,
ஸப்தபாகம் தஸ்மின் ராஜான மதிவிஸ்வயேமம் "

பொருள் : ஐத்ரேய ப்ராம்மணத்திலுள்ள "கஸ்யபோ விஸ்வகர்மாணம் பௌவனமபிஷிஷேச" என்னும் சுருதி வாக்கியத்தை அனுசரித்தும், ஸ்காந்தபுராணம் நாகர காண்டம் விஸ்வகர்ம உபாக்யானத்தில் " கஸ்யபோ விஸ்வகர்மாச விஸ்வலோக பிதாமஹௌ " என்பதாலும், விஸ்வகர்ம அம்சத்தில் அவதரித்த கஸ்யப ப்ரம்மரிஷி தமது சில்ப சாமர்த்தியத்தினால் அளவிற்கடங்காத சகல பிரஜா நிர்மாணத்தைச் செய்து பிரஜாபதியென்னும் நாமத்தை வகித்தார். கஸ்யபன் என்னும் பெயருடைய ஓ பிரஜாபதியே! உமது சில்ப சாமர்த்தியம் பிரகாசமுடையதாயும், வீரியத்தோடு விளங்குவதாயும், சம்பூரணமுடையதாயும், சித்ர விசித்திரங்களோடு பிரகாசிப்பதுமாகும். அப்படிப்பட்ட உமது சிற்பத்தில் கோடிக்கணக்கான சூரியர்கள் ஒருங்கு கூடிப் பிரகாசிப்பதாக இருக்கிறது. எனவே, விஸ்வகர்ம கஸ்யபாதி பிரம்மரிஷிகள் சில்பகலா துரந்தரராய், லோக நிர்மாண சாமர்த்தியமுடையவராய், ஆலய விக்ரக நிர்மாணங்களில் கியாதி பெற்றிருந்தனரென்பது விளக்கமாகிறது.

மேலும், யஜுர்வேதம் காண்டம். 3-1-9, ன்,

" பாவ்ஷ்யம், அங்கிரோ நாமகா இமேமஹர்ஷய:
ஸத்ர மனுதிஷயந்தி - தேதுர் ஸ்வர்க்க ப்ராப்தி
ஸாதநா நார நாபாநேதிஷ நாமகா பஸ்த்ரா
தீநா - மபரின் ஞானத் ஸ்வர்க்கம் ரஜாநந்த்யத
ஸ்தேப்ய இதம்தவ யாயீதம் பஸ்த்ரா தீப்ர தீபா
தகம் ப்ராஹ்மணம், ப்ரூஹி "

ஆங்கீரஸர்களாகிய ரிஷிகள் சத்ரயாகம் செய்தார்கள். அவர்கள் சுவர்க்கலோகத்தை யடைவதற்கான சாதனங்களாகிய நபானேதிஷ்டம் என்ற சஸ்திர சிற்பஞானத்தை தெரிந்துகொள்ளாமல் போனார்கள். அதனால் சுவர்க்கத்தை யடையும் சுலபமான மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளாமல் போனார்கள். ஆகையினால், அந்த சுலோகத்தினால் சில்ப சாஸ்திரங்களை அறிந்துகொள்வதோடு அவைகளின் அங்கங்களாகிய சஸ்திர உற்பத்திச் சாஸ்திரங்களையும் சிற்பிகள் உணர்ந்திருப்பதால், சுவர்க்க ஞானம் எளிதிற் கைகூடுமென்பதாம்.

இன்னும் சிற்பம்-விஸ்வகர்மீயம்- விமானோத்ஜீரணோத்தாரவிதியில்,

" எவம் பரீக்ஷ்ய கர்த்தசயம் - சில்பி சாஸ்திரேண மார்க்கவேத்
சில்பி சாஸ்திரந்த வத்கிருத்யம் ராஜ ராஷ்டிர விவர்த்தயேத்"

என்பதற்கு, ஜீரணோத்தாரம் செய்வதற்கு சிற்பசாஸ்திர விதிகளை யறிந்து, அந்த சிற்ப சாஸ்திரப் பிரகாரமே நிர்மாணம் செய்தால் ராஜாவுக்கும், ராஜ்யத்திற்கும் க்ஷேமமுண்டாகும் என்றும், சிற்பம் காசிபத்தில்,

" ராம பாத ரஜஸ் பரிசாது அகல்யா பூன்மகா சிலா
விஸ்வகர்ம வமர்சாத்த சிலா தைவத்மாகத "

என்பதால், அகல்யா என்ற கல்லானது ஸ்ரீராமர் பாதம் பட்ட மாத்திரத்தில் பெண்ணாயிற்று. ஆனால் சிற்பிகள்

மனதில் நினைத்தால் கல்லானது தெய்வங்களாகின்றன வென்றும், சிற்பம் ஐந்தரத்தில்,

"மனஸந்த காணுந்தம் பாதஜீவம் பிரகல்பயேத
ஆரம்பே அர்த்த ஜீவம் வியாத கர்ம பூர்வதிரி பாதகம்
அக்ஷமோக்ஷ கும்பம்வியாத அபிஷேகம் பூர்ண மாசரேத"

என்பதால், சிற்பிகள் நினைத்த மாத்திரத்தில், தாம் செய்ய எண்ணிய விக்ரகங்களுக்கு கால் ஜீவனும், ஆரம்பித்த மாத்திரத்தில் அரைஜீவனும், கண் திறக்கும்போது முக்கால் ஜீவனும், அபிஷேகத்திற்குப் பின் முழுஜீவனும் பெற்று, தெய்வமாகின்றன என்றும், சிற்பம் விப்வபோதத்தில், "சிவஸ்யபாலநேத்ராக்னி சாபோர் கௌதமசன்முனே, ஹே வியர்த்தாம் யாதினே வைதி - விப்வகர்ம விரோத வாக்கு விஷ்ணு சக்ரவஜ்ர வஜ்ரம், பிரமாஸ்திரம், கால தண்டம், கதாசித்விபல துவஸ்யா - நவிரோ தோஷிசில் பினவா" என வரும் இச்சுலோகத்தால், சிவனுடைய மூன்றும் கண்ணும், கௌதமர் சாபமும் வியர்த்தமாயின. ஆனால், விப்வ கர்மசிற்பியின் விரோதவாக்கு, விஷ்ணுவின் சக்கராயுதத்தையும், இந்திரனின் வஜ்ஜிராயுதத்தையும், பிரமாஸ்திரத்தையும், கால தண்டத்தையும் விட மிகப் பலம் பொருந்திய தெனப் பெறப்படுவதாம். இன்னும் சிற்பம் விஸ்வசாரம் எனும் நூலில்

"விருக்ஷ கர்பஞ்ச பீஜஞ்ஜ பீஜகர்பஞ்ச விருக்ஷகம்,
சில்பிகர்பஞ்ச லிங்கஞ்ஜ லிங்ககர்பஞ்சசில்பிக:
பீஜசில்பி வினுலிங்கோ சோவிருக்ஷா புவனத்திரயே"

எனப்படுவதால், விருக்ஷத்தில் விதையும். விதையில் விருக்ஷமும் இருப்பதுபோல், சில்பியின் கர்பத்தில் லிங்கமும், லிங்கத்தின் கர்பத்தில் சில்பியும், இருப்பதுபோல் விதையும் சில்பியும் இல்லாவிடில் மூன்று லோகங்களில் பலன் தரும் விருக்ஷங்கள் ஏது? என்றும், உபசிற்பமாகிய

கௌமார ஸம்ஹிதை எனும் பிற்காலத்திய நூலில் உண்மையான சிற்பியை சிறப்பித்துக் கூறுமிடத்து,

> "சூத்ரகோடி சகஸ்த்ராணும் ஏகவிப்ர ப்ரபூஜிதம்
> விப்ரகோடி ஸகஸ்த்ராணும் ஏகவிஷ்ணுப் பூஜிதம்
> விஷ்ணுகோடி ஸகஸ்த்ராணும் ஏகலிங்கப்ர பூஜிதம்
> லிங்க கோடி ஸகஸ்த்ராணும் ஏகசில்பி ப்ரபூஜிதம்"

எனப்படுவதால், இந்நூல் வருணாச்சிரம தர்மங்கள் தோன்றிய பின் ஆக்கப்பட்டதெனத் தெளிவாகின்றது. ஆயினும், ஆதி சிற்ப சாஸ்திரங்களை யொட்டியே இதன் கருத்து விளக்கம் இருப்பதால் இதை இங்கு எடுத்து ஆளலாயிற்று. மேலும் விஸ்வகர்மீயம் 12 வது அத்தியாயத்தில்,

> "ஸர்வவாத்யைஸ்து கோஷஸ்து ஸ்தபத்யாச்சார்ய புத்திமான்
> ஸர்வகர்மாஸ மஸாஹம் ஸர்வேதிரவ்யந்தைத் புத:"

என்பதால், வாத்திய கோஷங்களோடு ஸ்தபதியாகிய ஆச்சார்யரானவர் சகல திரவியங்களையும் சேகரித்துக் கொண்டு சிற்ப கர்மங்களை ஆரம்பிக்க வேண்டுமென்றும்; காசிபம் - ரத ஸம்ப்ரோக்ஷணம், அம்சுமான் தந்திரத்தில்,

> "ஆச்சார்ய சிஷ்யஸம்யுக்தம் - ரதஸ்தாநேப்ரவேச யோத்"

என்பதற்கு, சிற்பாச்சாரியாரும் அவரது சிஷ்யராகிய பந்துவர்க்கதொழில் செய்தவர்களையும் சேர்த்து இரதத்தில் ஆரோகணிக்க வேண்டுமென்றும்; சிற்பம் - சகலாதிகாரம், ரதபிரதிஷ்டா விதியில்,

> "யானேவாதஜ மூர்த்தேசா - ஸர்வமங்கள வாத்தியகை:
> சில்பாச் சார்யக் கிரஹம் கத்வா - க்ரமாதப்யுபசாரகை"

என்பதால், இரத பிரதிஷ்டை கழிந்தவுடன் சகலவிதமான உபசாரத்துடன் சிற்பாச்சார்யரை பல்லக்கின் மீதிலாவது

ஆஜ்ஞையின் பேரிலாவது வைத்து வாத்திய கோஷ முழங்க அவர் கிருகத்தில் கொண்டுவிட வேண்டுமென்றும், அதற்கு முன் சிற்பாசாரியரைப் பூஜித்து வஸ்திரம், சுவர்ண மோதிர முதலியவைகளை மனமொழி மெய்யால் வணங்கிக் கொடுக்க வேண்டுமென்றும் மிக விஸ்தாரமாக சில்ப சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. ஸ்கந்த புராணம், சம்புடம் 1, பக்கம் 49ல் கூறப்பட்டுள்ள ஈஸ்வர வாக்கியத்தின் தாத்பரியம்: ஓ குமாரா! சில்பிகளுடைய உற்பத்தியைச் சொல்லுகிறேன். அந்த விஸ்வகர்மாவினுடைய அங்கத்திலிருந்து ஜடாதாரிகளாக ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் கை வேலைத் திறத்தில் சம்பூரணர்கள். பஞ்சப் பிரம்மத்தியானம் செய்பவர்கள். அந்த சிற்பர்கள் எனக்குச் சமானமானவர்கள். ஓ பார்வதி நீயும் கேள், சிற்பர்களுக்குத் தேவதைகளை இயற்றுதல் தொழில்; நான் யாவையும் நிர்மாணிக்க வல்லவன். அந்த தேவசில்பிகள் என்னைச் செய்பவர்கள்; என்னுடைய கற்பத்தில் அவர்கள் பிறந்தவர்கள். அவர்களுடைய கர்பத்தில், சிந்தனையில் நான் அவதரிக்கிறேன். ஆகையினால், எனக்கும் அவர்களுக்கும் பேதமில்லை என்று கூறப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்டவாறு வேதங்களின் அங்கமாகிய சிற்பநூற்களுக்கிணங்க சாஸ்திரியமாகச் செய்யப்பட்ட விக்ரகங்கள் அல்லது பிரதிமைகள் முன் நாம் ஓவியமாவதால் அவைகள் முற்காலத்தில் பேசினவென்பதும், இக்காலத்திலும் பேசுமென்பதும் வேதங்கள் கூறும் உண்மைகளாம். இதற்குப் பிரமாணம்: சாமவேதம், ஷட்விம்சப்பிரமாணம் 5ம் அத்தியாயம் 10வது கீதம் அல்லது சுருதி வாக்கியம் இதுவாம்:

“ தேவதாயதனாநி கம்பந்தே தைவதா :
பிரதி மாஹஸந்தி, ருதந்தி காயந்திந்ருத்
யந்தி ஸ்புடந்தி ஸ்வித்யந்த்யுன் மீலந

*ரீதிநி யீல ஸாந்திப்ரதிமா : ப்ரயந்தி*
*நத்ய : கபந்தாத்ரு ஸந்தே விஜலேனச்ச*
*பரித்ருச்யதே "*

மேற்படி மந்திரத்தின் பொருள்: சிற்பசாஸ்திர ரீதியாகக் கட்டப்பட்ட தேவாலயங்கள் சிற்பாசாரியின் வார்த்தைக்கு நடுங்கும். பிரதிமை ரூபமாயுள்ள தெய்வங்கள் சிரிக்கும். விக்ரகங்கள் அழவும் செய்யும். பாடு என்று ஏவினால் பாடும்; நடனமிடும்; வாய்களைத் திறக்கும்; மூடும்; ஓரிடம் விட்டு வேறிடத்துக்கு நடந்தும் செல்லும் என்பதாம்.

இக்கலியுகத்திலும் கணிக்கண்ணர் எனும் விஷ்ணு பக்தரை மக்கள் வருத்தியதால் அவர் அவ்வூரை விட்டு வெளிப் போந்தகாலே, தாம் வழிபட்டு வந்த பரந்தாமனை "பைந் நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று அவரையும் உடன் அழைத்துச் சென்றதாகவும், பின்னர் ஊரார் வேண்டிக் கொள்ள அக்கற்கடவுளை அழைத்து வந்து" நீரும் பைந்நாகப்பாய் விரித்துக்கொள்" என்றும் பாடி அவரை அத்திருக் கோவிலில் எழுந்தருளச் செய்தார் என்றும் கூறப்பட்டுள்ளது,

எனவே மேற்கண்ட வேதப் பிரமாணங்களால் சிற்பங்கள் வேதாங்கங்களிலிருந்து பிறந்தவைகளென்பதும், சிற்பாச்சாரியர்கள் கல்லை - சிலையை பேசவும், நிலை பெயரச் செய்யவும் வல்ல தேவதாஸ்வரூபிகளென்றும் பெறப் படுவதாம். மேலும் விஸ்வகர்ம சிற்பாச்சார்ய சிருஷ்டிப் பிதாக்களுக்கும், அவர்கள் மகவுக்களாகிய தேவதா பிரதிமைகளுக்கும் யாதொரு பேதமில்லை யென்று சாஸ்திரங்கள் கோஷிப்பதால், அந்த தேவதைகளுக்கு நிவேதனம் செய்யப்படும் நைவேத்தியங்கள் சிற்பிகளின் உச்சிஷ்டமாகும். ஆனாலும், அவைகளை சமஸ்த மக்களும் ஏற்றுக் கொண்டு உண்டு கிருதார்த்தம் பெறுகிறார்களென எல்லா சிற்ப நூற்களும் கோஷிப்பனவாம்.

இனி தேவ சிற்பி விஸ்வகர்மாவைக் குறித்துப் புராணங்கள் கூறுவதை நோக்குவோம். வியாச பாரதம், ஆதி பர்வம், 67 ம் அத்தியாயம்:

அஷ்டவசுக்களில் ஒருவரான பிரபாஸன் என்பார் பிரகஸ்பதியின் சகோதரியும் சர்வசாஸ்திர பண்டிதையுமான யோக சித்தை என்பவளை மணந்தார். அவளிடமாக, சிற்பசாஸ்திர நிபுணரும், பிரம்ம சிருஷ்டியில் கை தேர்ந்தவரும், பல்லாயிரம் கைத்தொழில்களுக்கு அதிபரும், தேவர்களுக்கு தக்ஷரும், விநோதமான பூஷணங்களைச் செய்ய வல்லவரும், சிற்பிகளுக்கெல்லாம் ராஜாவுமாகிய மகிமை பொருந்திய விப்பவகர்மா பிறந்தார். அவர் தேவர்களுக்கு ஆகாய விமானங்களைச் செய்து கொடுத்தார். பல சில்ப நூல்களை லோகோபகாரார்த்தமாகச் செய்தருளினர். அவைகளை அவரது சந்ததியார்களும் மனிதர்களும் அனுசரிக்கின்றனர். அந்தமும் அழிவுமில்லாத அந்த விஸ்வகர்மா யாவராலும் பூஜிக்கப்படுகிறார் என்பதாலும், எட்டாம் அத்தியாயத்தில் விவரித்துள்ளபடி மேற்குறித்த தேவ சிற்பி விஸ்வகர்மா பூலோகத்திற்கு அழைக்கப்பட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு துவாபரயுகத்தில் துவாரகாபுரி நிர்மாணமும், பாண்டவருக்கு இந்திரப் பிரஸ்தத்தையும் நிர்மாணித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இவ்விரு நகர்களையும் சிருஷ்டிக்குங்கால், தேவலோக, பூலோக சிற்பிகள் யாவரையும் கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணனுக்கு, நான்குயோசனை நீளமும், அகலமும் உள்ள நகரையும், மாடமாளிகை, கூடகோபுரங்கள், கோட்டைக் கொத்தளங்கள் உய்யான வனங்கள், தாமரைத் தடாகங்கள், பொன் மயமான ஸ்தூபிகள், அர்த்த சந்திர வடிவமான சபாமண்டபங்கள் ஆகியவற்றைச் செய்து கொடுத்தார்.

மேலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாரியைகளான, ருக்மினி, ஸத்தியபாமை, ஜாம்பவதி, ஸுகேசி, ஸுப்ரபை, லக்ஷ்மணை சுமித்திர விஜயை, கேதுமான் ஆகியோருக்குப்

பல அலங்காரங்கள் பொருந்திய விசித்திர மாளிகைகளை யும், விஸ்வகர்மா அமைத்துக் கொடுத்தார்.

இன்னும், இந்திரன் கேட்டுக்கொள்ள, பாண்டவர் களுக்கு இந்திரப் பிரஸ்தம் என்னும் நகரத்தை நிர்மாணித் தார். கடலுக்கொப்பான அகழிகளாலும், ஆகாயமளா விய மதில்களாலும் அந்நகரம் சூழப்பட்டிருந்தது. அரண் மனைகளும், ஆயுதச் சாலைகளும் நிரம்பியிருந்தன. ராஜாங்க பொக்கிஷச்சாலை உயரிய கோபுரங்களால் அலங்கரிக்கப் பட்டு விளங்கிற்று. யானை, குதிரை, ஒட்டகம், பசு முத லியவற்றிற்கு விஸ்தாரமான சாலைகள் உண்டாக்கப்பட் டன. சுருக்கிச் சொல்லுமிடத்து, அந்த நகரம் இரண் டாவது இந்திரலோகமென சகல அலங்காரங்களுடன் பொலிவுற்று விளங்கிற்று. தர்மபுத்ரர் விஸ்வகர்மாவை முறைப்படி பூஜித்து விடை கொடுத்தனுப்பினர் எனப் படுவதால், துவாரகை, இந்திரப் பிரஸ்தம் ஆகிய இருமகத் தான நகர நிர்மாணங்களுக்குப் பின் சிற்ப சாஸ்திரங்கள் நூல் வடிவில், விஸ்வகர்மாவாலும், அவரோடு கூடி அநு பவம் பெற்ற மகத்தான சிற்பிகளாலும், முன்னிலும் விஸ்தாரமாகச் செய்யப்பட்டவைகளென்பதும், அவர் களுடைய சந்ததியார்கள் அந்த சிற்ப நூற்களைத் தங்கள் அரிய பொக்கிஷமாகக் கொண்டு, அத்தொழிலை நாளும் லோகோபகாரார்த்தமாகச் செய்து வருகிறார்களென்பதும் நன்கு விளங்கும்.

மேற்காட்டியவாறு அந்தவம்சத்தார் செய்து வரும் ஆலய நிர்மாணங்கள் பற்பல யுகங்களாக நடைபெற்று வந்திருக்கின்றன. நான்கு யுகங்களாகிய கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகியவற்றில் திரேதா யுகத்தில் சிருஷ்டிக்கப்பட்ட அயோத்திமாநகரை விடுத்து துவாபர யுகத்தில் விஸ்வகர்மாவாலும் அவர் சந்ததியார் களாலும் சிருஷ்டிக்கப்பட்ட துவாரகை, இந்திரப் பிரஸ் தம் ஆகிய இருநகர்களின் சிறப்புமட்டும் மேலே கூறப்பட்

டுள்ளது. திரேதாயுகம் 1296000) (பன்னிரெண்டு லட்சத்து தொண்ணூற்ராயிரம்) வருடங்கொண்டதாகும். இந்த யுகத்தில் 17000 வருடங்கள் கழிந்து அதற்குமேல் பிரபவ வருடம் பிறந்து அதிலிருந்து இருபத்தெட்டாம் ஆண்டாகிய ஜெயவருடம் கார்த்திகை மாதம் எட்டாம் நாள் சோமவார தினத்தில் திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் தேவாலயம் விஸ்வகர்ம சிற்பிகளால் முகூர்த்தம் செய்யப் பட்டதாகும். அதே வருடம் தை மாதம் 12ம் தேதி வெள்ளிக் கிழமையன்று சிதம்பரம் நடராஜர் ஆலயம் முகூர்த்தம் செய்யப்பட்டது. அவ்வருடம் சித்திரை மாதம் 10ம் தேதி திருவாரூர் தியாகராஜர் ஆலயமும், கமலாலயத் தீர்த்தமும் துவக்கப் பெற்றன. அதே வருடம் வைகாசி மாதம் 21ம் தேதியன்று திருக்கடையூர் அமிர்தகடேசர் ஆலயத்திருப்பணி துவங்கியது. ஜெய வருடம் ஆவணி மாதம் 6 ம் தேதியன்று திருவானைக்காவல் ஸ்ரீ ஜம்புகேஸ்வரர் ஆலயம் முகூர்த்தம் செய்யப்பட்டதாகும். இவைகளனைத்தும், சிதம்பரம் நடராஜர் ஆலய கர்ப்பக் கிரகத்தை யடுத்த வாசக்கால் ஒன்றில் தீட்டப் பெற்றிருக்கும் அக்காலத்திய முழக்கோல் அளவை அனுசரித்துக் கட்டப் பட்டவைகளாம். மேலே கூறியுள்ளவை மய சிற்பத்தில் மயவிஸ்வகர்மாவால் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. மேலும் 'மய நூல்' எனும் சிற்ப சாஸ்திரத்தில் காணப்படும் கீழ்க் கண்ட பாடல் மேற்கூறியுள்ளவற்றை உறுதிப் படுத்தும்.

### சிவஸ்தலங்கள் முகூர்த்தம் செய்த காலம்

### "மயநூல் சாஸ்திரம்"

சீர் பெருந் திரேதாயுகம் பதினேழாயிரஞ்
சென்றுபிர பவவுதித்து
திகழிருப தெட்டின் மேல் ஜெயவாண்டு தேள் திங்கள்
திகதி யெட்டினில் மதிதினம்,
சார்பெருகு திருவண்ணாமலை முகூர்த்தஞ் செய்த
தாமந்த சம்வத்சரம்
தருமகர மீராறில் சுக்ரவாரந்தனில்
தண்தில்லைநல் முகூர்த்தம்,

தேர்பெருகு மேடமதி யீரஞ்சிலாரூர்
தியாகராலயங் குளமதாம்,
தேறவிடை திங்களின் மூவேழு தேதியில்
திருக்கடையூர் முகூர்த்தம்
கார்பெருகு மாவணித் திங்களோராறில் திரு
வானைக் காவல் முகூர்த்தம்
கனகசபை மூழமதி லெடுத்த பெருமாலயம்
கனிவொடு மயன் சொன்னதே

மேலும், பல ஆதாரங்களைக் கூறப்புகின் மிக விரிவாகும். ஆயினும் இக்கலியுகத்திலும் விஸ்வகர்மர்களே சிற்ப நூல் வல்லவர்வளாகவும் ஆச்சார்யர்களாகவுமிருந்து தேவாலயப் பிரதிஷ்டை, விக்ரக, நகர நிர்மாணங்களைச் செய்து புனிதமாக்கினரென பட்டினத்தடிகள், திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில், "தெய்வக்கம்மியர் கைம்முயன்று வகுத்த ஓவிய சிற்பப் பூவியல் வீதி" என அழகுபடக் கூறியுள்ளார். மேலே கூறியுள்ளவாற்றால் சிற்ப சாஸ்திரங்கள் தெய்வீகத்தன்மை யுடையவைகளென்றும்,அவைகளின் கர்த்தாக்களான சிற்பிகள் பிராணப் பிரதிஷ்டை தரும் தேவதாம்ஸமான விஸ்வகர்ம பிராம்மணர்களென்றும் சந்தேகமற நன்கு விளங்கும்.

---

## 14. விஸ்வகர்மப் பிராம்மண பௌருஷேய விளக்கம்

இந்த அத்தியாயத்தில் விஸ்வகர்மப் பிராம்மணர்களை பௌருஷேயர் அல்லது விஸ்வகர்மப் புருஷத்துவமுள்ளவர்களென்றும், கோப்பிராம்மணர்களை ஆருஷேயர்களென்றும், (ரிஷிவழி வந்தோர் என்றும்,) வழங்கப் படுவதற்கான காரணங்களை விளம்புவோம். பௌருஷேயர் என்பது ஆதி பிரம்மமாகிய பரமபுருஷன் முகத்தினின்றும் பிறந்தவர்கள்.

தேவப்பிராம்மணர்கள், பாஞ்சாலர்கள் எனப்பொருள் தருவதாம்.

ஆருஷேயர் என்பது வசிஷ்டாதி கௌதம ரிஷிகள் மூலம் வந்த கோப்பிராம்மணர்களென்றும், ஸ்தானிகப் பிராம்மணர்களென்றும் பொருள் கொடுக்கும். இவைகட்கு ஆதாரம் இதனடியில் வருமாறு ;

பிரம்மாண்ட புராணம் சுவிரத காளஹஸ்திமுனி சம்வாதம். "ஸ்ருஷ்டி கர்த்தா பவே த்வஷ்டா" என்ற முதற் சுலோகத்துக்கு அடுத்த 2-ம் சுலோகம்

"ப்ராம்மணானும் குலம் பூர்வம்-த்வேதா விராஜிதம் சுரை :
ஆருஷேயம் பௌருஷேயஞ்ச கர்ம ஜென்ம விசேஷத :
ஆருஷேயம் ருஷிகோத்ரேஷு வசிஷ்யாஞ்சயேபவ:
ஜென்மனா ஜாயதே சூத்ர : கர்மனா ஜாய தேத்விஜ :
வேதபாடேன விப்ரஸ்யாத் ப்ரம்மஞானேன ப்ராம்மண :
யச்விப்வகர்மணஸ் சாஸ்ய புருஷஸ்ய முகோத்பவம்
பௌருஷேயம் இதிக்யாதம் பஞ்சகோத்ரம் மஹாத்குலம்
மநுஸ்தத்ரகுலம் முக்யம் விஸ்வகர்ம முகோத்பவம்
ஆருஷேயஞ்ச குலம்பேதம் கர்மாண்யஸ்யவிசேஷத :"

மேற்படி சுலோகத்தின் தாத்பரியம்: பூர்வம் பிராம்மண குலம் இரண்டாக தேவர்களினால் பிரிக்கப்பட்டது. அவையானது, பௌருஷேயமென்றும் ஆருஷேயமென்றும், ஜன்மகர்ம விசேஷத்தினால் நிரூபணமாகிறது. அதில் வசிஷ்டர் முதலான ரிஷிகளின் கோத்திரத்தில் உண்டானவர்கள் ஆருஷேயரென்றும், விராட் புருஷனாகிய விஸ்வகர்மாவினுடைய முகத்தில் ஜனனமாகிய ஸானகாதி ஐந்து பெரிய கிளைகளோடுள்ள ராஜ விருக்ஷமாகிய குலத்தினால் விர்த்தியடைந்தவர்கள் எவர்களோ அவர்கள் பௌருஷேயரென்றும், பிரக்கியாதியடைந்துள்ளார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆருஷேயர்கள் கர்மத்தினால் சிறந்தவர்கள். அதாவது ஜன்மத்தினால் சூத்திரனும் கர்மத்தினால்

துவிஜனும், வேதாத்தியத்தினுல் விப்பிரனும், பிரம்மக் கியானத்தினுல் பிராம்மணனும் ஆகிருர்கள் என்பது சுருதி வாக்கியம். ஆனுல், ஜன்மத்தினுல் விசேஷமுடையவர்கள் பௌருஷேயப் பிராம்மணர்கள். ஆருஷேயர்களோ பிரம்மக்யானத்தினுலும் வேதாக்கியானத்தினுலும் பிராம்மணர் ஆனவர்கள்.

ஆருஷேயப் பிராம்மண ஆந்திர பண்டிதர் பிரம்மஸ்ரீ அகிரிந்தல நரசிம்ஹம் பந்துலு அவர்கள் தந்துள்ள அபிப்பிராயத்தின் தமிழ்மொழிப் பெயர்ப்பு.

"பரதக் கண்டத்தை அலங்கரித்திருக்கும் நான்கு வருணத்தாராகிய பிராம்மண-க்ஷத்ரிய-வைசிய-சூத்ரரெனப்படுபவர்களில் முதலானவர்களாகிய, பிராம்மண வருணத்தில், விஸ்வகர்மப் பிராம்மணர் என்னும் ஒரு வகுப்பாருளர். அவர்கள் பிராம்மணர்களில் சிரேஷ்டஸ்தான உரிமை கொண்டிருப்பதற்கொப்ப, சுருதி . ஸ்மிருதி, புராணங்களும் பல ஆதாரங்களும் கணக்கற்று இருக்க, மற்ற வகுப்பாகிய பிராம்மணர்கள் ஏனே சம்மதியார்? ஒருவரிடம் சிரேஷ்டத்துவம் இயற்கையாயமைந்திருக்க, அதை நன்கு விளக்கக் கூடியவாறு பெருமைப்படுத்தி அச்சகோதர வகுப்பாருடைய உன்னதத்தை கண்ணுரக் கண்டானந்திக்கும் பாக்கியம் பெருதொழிதல் மற்ற உயர்குலத்தார்க்குப் பெரும் இழுக்காகும். அப்படிக்கின்றி அவர்களுடைய மேன்மையைக் குறைவுபடுத்த முயல்வது வித்யாஞானமுடையார்க்குச் சிறப்பன்ரும்.

உலகில் இயற்கையாய் விளங்கும் வஸ்துக்களை ஜனங்களுக்கு வெளிப்படையாகக் காட்டுவதற்குப் பிற சாதனங்கள் அவசியமாகும். சூரியனைக் காட்ட தீவர்த்தி வேண்டுமா? அவ்வாறே பிராம்மண வருணத்தில் ஒரு வர்க்கமாகயேற்பட்டுள்ள விஸ்வகர்மப் பிராம்மணரின் மேன்மையை தெரிவிக்க சுருதிஸ்மிருதி- புராணங்களாலாகிய தீவர்த்திகள் அவசியமல்ல. சூரியனுடைய கிரணங்களின் பிரகாசத்தைப் போல விஸ்வகர்மப் பிராம்மணருடைய மேன்மை

யைக் காட்ட பிரசித்தியான அவாது இயற்கைத் தர்மங்கள் யாவை என்னும் ஆசங்கையைத் தீர்க்க முயல்வதே இச் சிறு பிடிகையின் முக்கிய நோக்கமாகும்.

இனி, மனோவாக்குகளால் நிச்சயிக்க முடியாத கால முதல், அதாவது சற்றேறக்குறைய சிருஷ்டி காலத்திலிருந்து இவ் வகுப்பார்க்குத் தேவப்பிராம்மணர் என்ற பெயர் உண்டு. அதற் குப் பிறகு இவர்கள் பாஞ்சாலர் என்றும் பெயரை வகித் தனர். இவையிரண்டும் இவர்களுக்கு ஜன்மசித்தமான பெயர்கள். இவற்றைப் பற்றிச் சற்று விஸ்தரிப்போம்.

இந்துதேசத்துட்புகுந்த முதற் குழுவினரான ஆரியர் கள் தாங்கள் தேவர்கள் என்றும் தங்கள் வாசஸ்தலம் தேவ பூமி, அல்லது பிரம்மதேசமென்றும் கூறியிருக்கி றார்கள். அக்கூட்டத்தாருடைய வம்சத்தினர் தேவப்ராம் மணர்களென்றும் பெயர் கொண்டு விளங்குவதால் பிரம்ம வர்த்தத்திலுள்ள ஜனங்கள் பிராம்மணர்களாவரும் அவர்கள் பிற நாட்டார்கள் போலிராது தேவதேசத்தாரே யாவரும் விளக்க மாகிறது. இதற்கு ஆதாரமாக மனுஸ்மிருதியில்

“ ஸாஸ்வதீத்ருஷத் வத்யோர் தேவநத்யோர் யதந்தரம்
தம்தேவநிர்மதம் தேசம் பிரம்மா வர்த்தம் பிரசக்ஷதே ”

சரஸ்வதி நதி, திருஷத்வதிநதி யென்னும் தேவ நதி களின் மத்திய பாகம் எதுவோ அது, தேவர்களால் நிர் மிக்கப்பட்டுள்ள பிரம்மா வர்த்தம் என்று சொல்லப்பட் டிருக்கிறது.

பிறகு தேவபூமியை அடுத்து வசிப்பவரும், தேவப்ராம் மணரது அனுக்கிரகத்தைப்பெற்றுத் தவத்தாலும் அத்தவப் பயனாலும் சில ரிஷி மக்கள் பிராம்மணர்களானார்கள். இவ்வாறு சில காலத்திற்குப் பின், இயற்கையான ஆதிப் பிராம்மணத்துவ முடையவர்களும், அங்கிகாரத்தாலும், செயற்கையாலும் பின் பிரம்மஞான மடைந்து பிராமணத் துவம் பெற்றவர்களுமாக, இருவகைப் பிராம்மணர்

ஏற்பட்டனர். இந்த பேதங்களை யறிந்து கொள்ளும் பொருட்டே அவரவர்களுடைய பிரவரத்தில் "தேவ ப்ராம் மணேப்ய :" என்றும் "கோப்ராம்மணேப்ய :" என்றும் இரு பிராம்மணவர்க்கப் பெயர்கள் பிரித்து இன்றும் சொல்லப்பட்டு வருதல் பிரசித்தமாயிருக்கிறது.

இனி கோப்ராம்மண சப்தத்தாலேயே **கோ என்னும் சப் தம்**, பசு என்றும் பூமி யென்றும் பொருளைத் தருவதால் பசு வயிற்றிற் பிறந்த பிராம்மணர் என்றும் பொருள் கொள்ள இடமுண்டு. **ஸ்தாலிகப்ராம்மணர்** என்னும் அர்த் தம் வெளிப்படும். இவ்வித பேதங்களாலேயே பிராம்மணர் களுக்குள், 'கோ, தேவ' சப்தங்களுக்கு இடந்தருவதாம். அந்த சப்தங்கள் இன்றுமிருப்பதினால், இந்த முக்கிய பேதங்களை, வெளிப்படுத்தவே அவை ஏற்பட்டனவென் பது வெளிப்படையாம்.

மேலும், பிறப்பினாலும் சந்ததியினாலும், பிராம்மணத் துவத்தை வகித்த **தேவப்ராம்மணர்கள், பௌருஷேயரென்றும்**, தவ யோக்யதை ஒன்றினால் மட்டும் பிராம்மணத்துவத்தை அடைந்த **கோப்ராம்மணர்கள் ஆருஷேயரென்றும்** சொல்லப்படு கிறார்கள்."

மேற்கண்டவாறு ஆந்திர பண்டிதர் மனச்சான்றுடன் கூறியுள்ள நியாயங்களால் ஆருஷேயர், பௌருஷேயர்க ளென்னும் இருபிரிவுடைய பிராம்மணர்கள், ஆரியாவர்த் தத்தில் வாழ்ந்து வந்திருக்கிறார்களென்னும் உண்மை வெளிப்படையாகின்றது.

மேலும், பௌருஷேயர்கள் ஆரியாவர்த்தமென்று கூறும் பாஞ்சால தேசத்தில் வசித்தமையால் பாஞ்சாலப் பிராம்மணர்களானார்கள் என்பதற்கு ஆதாரம் :—

"பிரஹஜ் ஜோதிஷார்ணவ" கிரந்தகர்த்தா ஆருஷேயப் பிராம்மணோத்தமர், பிரம்மஸ்ரீ, ஹரிகிருஷ்ண சர்மா அவர் களால் தொகுக்கப் பெற்ற பிராம்மணோத்பத்திகாண்டம் என்னும் சமஸ்கிருத நூல் 51-ம் அத்யாயம், பாஞ்சால

ப்ராம்மணோற்பத்திப் பிரகரணம்: " லிங்கபுராணம் சைவா கமம்" கூறுவதாவது :

" ப்ராஹ்மணானாஞ்ச-ஜன்மைவ-சிவவக்த்ராச்சஜாயதே
பஞ்சவக்த்ர சமுத்பந்நா:- பஞ்சபி: கர்மபிர்த்விஜா :"

2. மனுர்மயஸ்ததா த்வஷ்டா-சில்பிகஸ்ச ததைவச
தைவஜ்ஞ: பஞ்சமஸ்சைவ-ப்ராஹ்மணா: பஞ்சகீர்த்திதா:

3. மனு: சம்ஹாரகர்த்தாஸ-மயோபாலகை லோக லோக பாலக:
த்வஷ்டா சோத்பத்தி கர்த்தாச சில்பிகோ க்ருஹகாரக :

4. தைவஜ்ஞ: ஸர்வபூஷாதி கர்த்தாவை ப்ரிதகாம்யயா
லோகனும் பர்த பர்த பார்தலா:, அபூர்வம் சிவவக்த்ரதக:

5. பாஞ்சாலானும்ச-பாஞ்சானும்-வக்த்ரே லக்ஷண முத்தமம்
தஸ்யவிஜ்ஞான மாத்ரேண சில் பாசார: ஸ்புடோ பவத்

6. ஐஸ்வர்யம் மனுரூபஞ்ச-மயரூ பஞ்ச வைஷ்ணவம்
வைரிஞ்சம் த்வாஷ்ட்ரு ரூபஞ்ச-மாஹேந்த்ரம் சிகல்யச

7. ரூபம் நாராயணஸ்யைவ தைவஜ்ஞஸ்யப்ரகீர்த்திதம்
பஞ்சரூபாணி யோவேத ரூச்யதே ஸர்வசில்பிஷாத்

20. ருக்வேதஸ்ச மனோஸ்சைவ யஜுர்வேதோ மயஸ்யச
ஸாமவேத த்வாஷ்டகஸ்ய-த்வதாவா சில்பிகஸ்யச

21. ஸாத்ருமனுபித வேதோஸௌ-தைவஜ்ஞனாம் ப்ரகீர்த்தித
பர்த வேதாஸ்தத யோவேத-சாயுஜ்யம் லபதேநர :"

ஷை சுலோகங்களின் பொருள் :—உலகின் கண் பஞ்ச கிருத்தியங்கள் செய்யும் பொருட்டு ஸ்ரீ பரசிவமாகிய விஸ்வகர்மாவினது ஐந்து முகங்களினின்றும் ஐந்து பிராம் மணர்கள் உண்டானார்கள், அவர்கள் மனு - மயன் - துவஷ்டா சிப்பி விஸ்வஞ்ஞன் என்னும், ஐவர்களாம்.

அவர்களில் மனு சங்காரகர்த்தா, மயன் ரக்ஷிப்பின் கர்த்தா, துவஷ்டா உற்பத்தி கர்த்தா, சிற்பி கிரக முதலி

யன சிருஷ்டி கர்த்தா, விஸ்வக்ஞர் பூஷணாதிகளை சிருஷ்டிப்பவர். எனவே மேற்கண்ட ஐந்தொழில் வகையால், ருத்திரன், விஷ்ணு, பிரம்மன், இந்திரன் - சூரியன் என்னும் ஐவர்களின் அம்சமாக வந்தவர்கள் என்பது குறிப்பாகும். ஆகவே, மேற்கண்ட சிருஷ்டிகளால் இவர்கள் உலகிற்கு இதத்தைச் செய்யும்பொருட்டு பரமசிவமாகிய விஸ்வகர்மாவின் முகத்தினின்றும் தோன்றியவர்களாவர்.

இனி அவர்களின் உத்தமமான லக்ஷணங்களைச் சொல்லுகிறோம். அவர்கள் விஞ்ஞானமென்னும் சிற்ப சாஸ்திரங்களை உணர்ந்து அதன்படியே நடப்பவர்கள். இன்னும் இவர்கள் ருத்திரன்,விஷ்ணு,பிரம்மன்,இந்திரன், சூரியன் என்னும் பஞ்சமூர்த்திகளின் சொரூபம் உடையவர்கள். இன்னும் இவர்களில் மனு ருக்வேதமும், மயன் - யஜுர்வேதமும், துவஷ்ட்டா - சாமவேதமும், சில்பி - அதர்வணவேதமும், விஸ்வக்ஞன் ஸூக்ஷும் ஞபிதம் என்னும் பிரணவ வேதமும் உரிமைபாகக் கொண்டு அத்தியயனம் செய்பவர்கள், அப்படி பஞ்சவேதங்களையும் உணர்ந்த ஐவகை பிராம்மணர்களை விஸ்வாசிப்பவர்கள் இம்மைமறுமைப் பயன்களாகிய தர்மார்த்தமாதி நான்கையும்அடைவார்கள் என்று ஸ்ரீநந்திகேஸ்வரர் பிருகு புத்திரருக்குச் சொன்னார்.

இதுவே அநாதி விஸ்வகர்மப் பிராம்மண பௌருஷேய விளக்கமாகும்.

---

## 15. விஸ்வகர்மப் பிராம்மண ஆச்சார்யப் பட்டம்

இமையம் தொட்டு கன்னியாகுமரிவரை வதியும் விஸ்வகர்மப்பிராம்மணர்கள், மொழி, நடை, உடை முதலியவற்றில் வேறுபாடுடையவர்களாயினும், பொதுவாக, தங்கள் பிதாவாகிய ஆதிவிஸ்வகர்மாவை எங்கும் வழிபடுப

வர்களாவர். இவர்களனைவருக்கும் அவரே குலதெய்வமாம். இச்சந்ததியார் எம்மதத்தையும் சாராத அநாதி விப்வ கர்ம மதத்தைச் சார்ந்தவர்களெனினும் பொருந்தும். பிற் காலத்தில் தோன்றிய சைவம், வைணவம், மத்துவம், புத்தம், ஜயினம், கிறிஸ்துவம், மகம்மதிய மதங்களைப் போலன்றி, அநாதி காலந்தொட்டே அதாவது, படைப்புக் காலந்தொட்டே விப்வகர்ம சந்ததியென ஒரு குழுவினர் தனித்து வாழ்ந்து வந்தனரென்பதும், தங்கள் உற்பவத் துக்கு அதிதேவதையாகிய விப்வகர்மாவை யாகாதி கிருத்தி யங்களால் வழிபட்டு, தந்தையின் தொழிற்கொழிலே லோகோபகாரார்த்தமாகத் தாங்களும் பின்பற்றி வாழ்ந்து வந்தனர் என்பதும், இன்றும் அவ்வாறே வதிந்து வருகின் றார்களென்பதும் மூந்திய பல அத்தியாயங்களினின்றும் நன்றிப் பெறப்படும் உண்மைகளாம். டில்லி நகரத்தின் கண் ஒரு விப்வகர்மா தேவாலயமும், வடநாடெங்கும் அதைப் போன்ற பல ஆலயங்களும் இன்றும் உள்ளன வாம். கல்கத்தா நகரிலும் அதனைச் சார்ந்த பிரதேசங் களிலும் விப்வகர்ம பூஜாதினம் வெகு விசேஷமாகக் கொண்டாடப்படுகின்றது. அந்நாட்டுப் பஞ்சாங்கங்களி லும் அதனை ஒரு பெரும் பண்டிகை தினமாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும், அரசாங்கத்தாரும் அத்தினத்தை விடுமுறையாக்கியுள்ளனர்.

தேசாச்சாரத்திலும், பழக்கவழக்கங்களிலும் சிறிது வேற்றுமை கொண்டாலும், தங்கள் தங்கள் சந்ததிக்குரிய ஐந்தொழில்களைப் பிறப்புரிமையாகச் செய்துவரும் இம் மக்கள் தங்களை விப்வகர்மப் பிராம்மணர்களென்றும், விப்வப்பிராம்மணர்களென்றும், ஜெகத்குருவெனவும், ஆச் சாரியர்களெனவும் இன்றளவு கூறியும், வற்புறுத்திப் பேசி யும் வருகின்றனர். ஆங்கில ஆட்சியில் பத்து வருடங்களுக் கொருமுறை நிகழ்ந்த ஜனக்கணிதை காலங்களில் விப்வப் பிராம்மணர்களெனவும், ஆச்சாரியர்களெனவும் தங்களைப்

பதிவுசெய்ய வலியுறுத்திப் போராடியதொன்றே, இச்சந்ததி யார் தங்கள் பூர்விகப் பிறப்புரிமைகளை உயிரினும் பெரி தெனக் கருதியதற்குப் போதிய சான்றாம்.

விஸ்வகர்ம சந்ததியாருக்கு "ஆச்சார்ய" எனும் பட்டமே வேதங்களாலும், புராண இதிகாசங்களாலும், வழக்கப்பாட்டாலும் சித்திக்கப்பெற்றதாகும். இன்றுள்ள விஸ்வகர்மர்களில் சிலர், மிக சிரேஷ்டமும், பிறப்புரிமையு மான இப்பட்டப் பெயரைக் கைவிட்டு வேறு, பல பட்டப் பெயர்களைக் கைக்கொண்டுள்ளனர். உதாரணமாக, பலர் தங்களை 'பத்தர்', 'பக்தர்', 'தீக்ஷிதர்', 'சாஸ்திரி', 'சர்மா', 'பாரதி' என்று அழைத்துக்கொள்கின்றனர். ஆருஷெயர்களின் பொதுப் பட்டப் பெயராகிய 'அய்யர்', 'அய்யா', என்னும் பட்டங்களை விஸ்வகர்மப் பிராம்மணர் பண்டு தொட்டே விரும்பினார்களில்லை. ஆயினும் இராமா னுசர் காலத்தில் தோன்றிய ஆருஷேய வைணவர்கள், 'ஆச்சாரி', 'ஆச்சார்ய', 'ச்சாரி' என்ற பட்டங்களைப் போட்டியிட்டு வகிக்கத் தொடங்கியதிலிருந்தே இவ்விரு வகுப்பாருக்கும் பட்டப்பெயர் காரணமாகப் போராட்டம் எழுந்தது. 'ஆச்சாரி' பட்டப்பெயர் ஒழிந்த மற்றைய ஜாதிப்பட்டங்கள் வேத சம்மதமும், சில்ப சாஸ்திரங்களின் அங்கீகாரமும் பெற்றவைகளல்ல. எவ்வித உயர்வு தாழ்வு மின்றி, ஆதிபிரம்மத்தினின்றும் பிறந்து, பஞ்சகிருத்தியங் களைக் கைக்கொண்ட ஒரே சந்ததியாரைப் பல்வேறு பட்டப்பெயர்களால் பிரிப்பதும், அவ்வாறு அவர்களே சொல்லிக்கொள்வதும் சாஸ்திர சம்மதம் பெற்றவையல்ல வென்பது ஒருபுறமிருக்க, அத்தகையோரைப் பலப்பல வகுப்பார்களெனக் கருதவும், ஐயங்கொள்ளவும் ஹேது வாகின்றது.

மதங்களும், வர்ணாச்சிரமங்களும், எண்ணிறந்த ஜாதி பேதங்களும் உண்டான பிந்திய யுகங்களில் முன்னர் கூறிய பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் எனும்

நான்கு வருணங்கள் அல்லது வகுப்புக்கள் தோன்றின வென்பது சாஸ்திரப் பிரசித்தம். முதலாவதாகக் கூறப் பட்ட பிராம்மணர்கள் ஆதிபிரம்மாவாகிய சிருஷ்டிகர்த்தா விடமிருந்து பிறவாவிடினும், எத்துணை நிக்கிரஷ்ட பிறப் பின் வழிவந்த சந்ததியார்களாயினும், தங்கள் தவமகிமை யாலும், ஒழுக்க விழுப்பத்காலும், விஸ்வகர்ம ஆதிசைவப் பிராம்மணர்களுடன் போட்டியிட்டு, தங்களை, அவர்களை யொத்த பிராம்மணர்களெனவும், மேலானவர்களெனவும் கூறிக்கொண்டு தங்களுக்கு உபபலமாக மூன்று கீழ் ஜாதியர்களை உண்டாக்கித் தாம் உயர்ந்தனரென்ப. பிறப்பினுல் பிராம்மணீகம் சித்திக்கப்பெற்ற விஸ்வப் பிராம்மணர்களுக்கும், பிந்திய கோப்பிராம்மணர்களாகிய நூதன - நவீன விப்பிரப் பார்ப்பனர்களுக்கும், பின்னவர் முன்னவரினும் உயர்வு கொண்டாடிய காரணத்தால், பெரும் போராட்டங்கள் அவ்வப்போது நிகழ்ந்தனவென் பதும், இன்னும் ஆங்காங்கு நிகழ்ந்து வருகின்றனவென் பதும், சரித்திரத்தால் அறியக்கிடப்பனவாம். பூர்வ இரா ஜாக்கள் காலந்தொட்டு ஆங்கில அரசாட்சிவரை இன்றும் தங்களைப் பிராம்மணர்களென்று சொல்லிக்கொள்ளும் அச் சந்ததியார் தங்களுடைய வித்தியா சாமர்த்தியத்தாலும், அரசியல் செல்வாக்காலும் சுமார் 800 ஆண்டுகளாக விஸ்வ கர்மப் பிராம்மணர்களுக்குத் தொல்லைகள் பல விளைவித்து வருகின்றவராவர். தங்களுக்குத் துணையாகச் சிருஷ்டித்த இதர மூன்று வருணத்தார்களையும் பல இன்னல்களைப் புரி யத் தூண்டினவராவர் என்பதும் மிகையன்று. அன்னோர் சூழ்ச்சியின் காரணமாக "ஆச்சாரி" என்னும் விஸ்வகர்மப் பிராம்மணர்களின் புராதனப் பட்டப்பெயர் அர்த்தமற்ற 'ஆஸாரி' என ஆங்கில அரசாட்சியிலும் மாற்றப்பெற்றது. பின்னர், தங்கள் தங்கள் பட்டப்பெயர்களால் அழைத்துக் கொள்ளும் உரிமை ஒவ்வொரு ஜாதியாருக்கும் உண்டென் பதை உணர்ந்து அரசியலார் அவ்வாறே உத்திரவிட்டனர்.

விஸ்வப்பிராம்மணர் என்ற ஜாதிப் பெயரும் ' விஸ்வ கர்மர்' என மாற்றப்பட்டுப் பின்னர் "விஸ்வப்பிராம்மணர்" என்று மீளவும் இந்நூலாசிரியரின் மாபெரும் முயற்சி யாலும், அரசாங்கத்தாருடன் போர் தொடுத்ததன் காரண மாகவும் நிருத்தம் பெற்றது. மதம், ஜாதி முதலியவை களில் தலையிடா வொழுக்கத்தைக் கடைப்பிடித்த ஆங்கில ஆட்சியிலேயே விஸ்வகர்மப் பிராம்மணர்கள் இத்தகைய இடுக்கண்களை அனுபவிக்க நேருமாயின், தங்கள் சித்தமே சட்டமாகக் கொண்ட பூர்வீக மன்னர்கள் ஆட்சியில் செல் வாக்கு மிகுந்த ஆருஷேயப் பார்ப்பனர்களின் சூழ்ச்சியால் எத்தகைய தொல்லைகளை அனுபவித்திருத்தல் வேண்டு மென்பது நன்கு புலனாகும். இவைகளனைத்துக்கும் காரணம், ஆருஷேயர்களின் பிராம்மணத்துவத்தை பௌ ருஷேயப் பிராம்மணர்களான விஸ்வகர்ம சந்ததியார் ஒப்பாததும், அவர்கள் பௌரோகித்தத்தையும், குருத்துவத் தையும் அறவே நிராகரித்ததுமேயாம். எனவே, இன்றுள்ள விஸ்வகர்ம சந்ததியாரின் முறை பிறழ்ந்த துச்ச நிலைமைக்கு ஆருஷேயர்களின் படு சூழ்ச்சியும், துவேஷமும், பொது மக்களின் அறியாமையுமே தலையாய காரணங்களாம்.

இனி " ஆச்சார்ய " பட்டப்பெயரைக் குறித்து வேத, சில்ப, இதிகாச, புராண, பிரபந்தங்களில் கூறியுள்ள ஆதாரங்களை ஆராய்வோம். கிருஷ்ண யஜுர்வேதம் 2-5 ல், " விஸ்வரூபோ வைத்துவஷ்ட்ர : புரோஹிதோ தேவாநா மாஸீத்" என்பதால் துவஷ்ட்டாவின் புத்திரரான விஸ்வ ரூபர், இந்திரன் முதலான தேவர்களுக்கு பௌரோஹித் தியம் செய்யும் குருவாகவும் ஆச்சாரியராகவும் இருந்தார் என்றும்; சாந்தோக்ய உபநிஷத் அஷ்டமத்தில், " பிரஜா பதிர்மநவே மநுப்ரஜாப்ய : ஆச்சார்ய குலோத்வேதமதீத்ய" எனப்படுவதால், மனுவை பிரஜாபதியென்றும், ஆச்சார்ய குலத்திலிருந்து வேதம் அப்பியசிக்க வேண்டுமென்றும் ; இன்னும் நாகரகாண்டம் அத்தியாயம் 5 ல்,

" ஸ்தபதி ஸ்தாபகஸ் சைவ - ஆச்சார்யோ விஸ்வகர்மண
ஆச்சார்யோ விஸ்வகர்மாச - ஆதிப்ராம்ம குலோத்பவ : "

இதன் பொருள் : ஸ்தபதியையும், ஸ்தாபகனையும் விஸ்வகர்மாவென்றும், ஆச்சார்யரென்றும் இவர்களே ஆதிப்ரம்ம குலோத்பவர்களென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இரதகாரப்பிராமணர்கள் என்னும் பரியாய நாமத்தை யுடைய விஸ்வப்பிராம்மணர்களுக்கு " ஆச்சாரி " என்னும் பட்டப்பெயர், " மந்த்ர பாஷ்யக்ருதாச்சார்ய " என்னும் அமரகோச வாக்கியத்திற்கு உரைகாரர், ஆசாரமாகிய சிருஷ்டி கிருத்தியத்தைக் கைக்கொண்டு ஆச்சார்யத் துவத்தை வகிக்கிறவனே ஆச்சாரியன் என்றும், மனுதர்ம சாஸ்திரத்தில், " உபநீயது யச்சிஷ்யம வேதமத்யாபயேத் விஜ : ஸாங்கஞ்ச ஸரஹஸ்யஞ்ச தமாசார்யம் விதுர்புதா : " எனப்படுவதால் நவாசார தர்மங்களைக் கைவிடாது அவை களைப் போற்றுபவனும் எவன் தனது குமாரனுக்கோ, சிஷனுக்கோ உபநயனம் செய்து ஆறங்கங்களோடு வேதத் தைச் சொல்லுகிறானோ அவனே ஆச்சாரியன் என்றும், பஞ்சரிஷிகோத்திரர்களுக்கும் அவனே உரிமையாக்கும் சிரேஷ்ட மான ஆச்சாரியன் என்றும் கூறப்படுகிறது.

இன்னும், " மந்த்ர பாஷ்யக்ருதாசார்ய " என்னும் அமரகோசத்திலுள்ள ஆச்சாரிய சப்தத்திற்கு உரை யாசிரியர் - " ஆசாரம் க்ராஹயதிஇதி " என்னும் சம்பிர தாயத்தைக் கைக்கொள்ளச் செய்கிறவன் எவனோ அவனே ஆச்சாரியன் எனக்கூறிப் போந்தனர். மேலும் வாயு புராணத்தில் " தேவாசார்ய ஸ்த்துமஹாதேஜா - தீமதோ விஸ்வகர்மண : " என்பதால் தேவர்களுக்கு மகாத்மாவும், புத்திவந்தருமான விஸ்வகர்மா ஆச்சாரியர் ஆனார் என்றும், ஸ்காந்தபுராணத்தில், " ஆச்சார்யோ விஸ்வகர்மா, சைவாத் ப்ரஹ்மகுலாதிப :, தேஜஸ்விகோர நகாராணும் விஸ்வகர்மா மஹாதபா : என " ஆதிப்ராம்மண குலாதிபனுன விஸ்வ

கர்மா ஆச்சாரியனும், இரதகாரர்களுக்கு உபாத்தியாயனும் மகாதபஸ்வியுமாவான் எனவும் விசேஷித்துக் கூறப்பட்டுள்ளது. இன்னும் விஸ்வகர்ம புராணம் - 24-வது அத்தியாயத்தில், " மநுவம்சே ஸுஜாதாஞு மாதாசார்யாமிதி ஸம்விவேத் " என்னும் சுலோகத்தால் மநுவிஸ்வகர்ம வம்சத்தில் பிறந்தவர்கள் எல்லோருக்கும் ஆச்சார்ய என்னும் பட்டப்பெயர் உடன்பிறப்பு என்பது வற்புறுத்தப் படுகின்றது. இவற்றால் விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கு "ஆச்சார்ய" எனும் பட்டப்பெயர் சந்தேகமறச் சித்திக்கின்றது. இனி சில்ப சாஸ்திர ஆதாரங்களில் புகுமுன், ஆச்சார்ய சப்தத்தின் பொருளை விளக்கு முகத்தான், சில்பம், மானசாரம் கூறுவதை இங்குநோக்குவோம் :

" ஆகார ஆகமாத்யாயீ - சாகாரச் சாஸ்த்ர கோவித :
ர்யகாரோ தேவதோத்பத்தி - ராச்சார்ஸ்யஸதோச்யதி "

இதன் பொருள் : ' ஆ ' என்பதற்கு ஆகமமும், ' சா ' என்பதற்கு பல சாஸ்திரங்களும், ' ர்ய ' அல்லது ' ரி ' என்பதற்கு தேவதைகளின் நிர்மாணங்களும் அறிந்து செய்பவர்களே ஆச்சார்யர்கள் என்று நிர்ணயிக்கப்படுகின்றது. சில்பம் - மானசாரம் 10-ம் அத்தியாயத்தில்,

" வேதாங்க நாநா - மபிமந்த்ரயந்த்ர
தந்த்ரக்ரியாஞும் - விதிசில்பி நஞ்ச
சிவஸ்வரூபம் - சிவம் ஆதிசைவம் "

இதன் பொருள் : வேத முதலான சாஸ்திரங்களையும், மந்திர யந்திர தந்திரக் கிரியைகளையும் விதிக்கிற சில்பியே ஆதிசிவம் என்னும் சதாசிவஸ்ரூபர் ; அவரே ஆச்சார்யஸ்ரூபர் என்பதாம். இன்னும் வேதங்களினிடமிருந்து பிறந்த பல்வேறு சில்பசாஸ்திரங்களையும் ஆராய்வோம். சில்பம், ஐந்திரமதம், அத்தியாயம் 1ல் ; " ஆச்சார்யச்சாபி துவஷ்டுச்ச - ஸ்தபதீ நாஞ்சலக்ஷணம் " என்னும் சுலோகத்தால்,

ஆச்சார்யரென்றும், துவஷ்ட்டாவென்றும் சொல்லப்படுகிற ஸ்தபதியின் லக்ஷணத்தையும்; சில்பம், விஸ்வபோதம், படலம் 1ல், " ஆச்சார்ய வம்சஸம்பூதோ - ஆச்சார்ய சாஸ்திர வித்தமை ; ஆச்சார்ய சில்பிஸ்சைவ பிரதிமா நிர்மிதம் சுபம் " என்றும் ; சரஸ்வதி நாமகிரந்தத்தில்,

" சிலாமிருண் மயதாரூணும் ப்ரதிமாநாம் விசேஷத :
நிர்மாதா ப்ரதம : பூஜ்ய : அர்ச்சகஸ்து ததாபரே
சித்ரம் காருணஞ்சேதி ப்ரதான்யம் விஸ்வகர்மண :
ஸதாசாரோ யதா பூஜ்ய : ஆச்சார்யஸ்து யதாபவேத் "

என்னும் வாக்கியங்களால், பிரம்மப் பிரதிமைகளைச் செய்வதில் பிரதானம் பெற்ற ஆச்சார்யரை முதலாவதாக பூஜிக்கவேண்டும் என்றும், மேலும், சில்பம், விஸ்வகர்மீயம் அத்தியாயம் 2ல், " இத்யே வம்சாப்ஸ்த்ர ருஷ்டேக பிம்பம் ஆச்சார்ய நிர்மிதம் " என்பதால், சிற்ப சாஸ்திரங்களை ஓதியுணர்ந்த விஸ்வகர்மாவாகிற ஆச்சார்யர் பிம்பத்தை நிர்மாணிக்க வேண்டுமென்றும்; இன்னும் சில்பம், மானசாரம் அத்தியாயம் 4ல், " ஆச்சார்யோ விஸ்வகர்மாணும்-ஸ்தபதீநாந்துலக்ஷணம் " எனப்படுவதால், பொதுவாக ஆச்சார்யரான ஸ்தபதியின் லக்ஷணம் சிறக்கக் கூறப்பட்டுள்ளது.

மேலும், சில்பம், காசிபம், என்னும் கிரந்தத்தில் ஆச்சார்ய லக்ஷண விதியில்,

" அத : பரம்ப்ர வக்ஷ்யாமி-ஆச்சார்யலக்ஷணம்ப்ருணு
விஸ்வகர்மகுலம் பூதம் நிசாந்தம் பிர்மவேதிநம : "

எனத் தொடங்கி,

" யுவாசுங்கோ மனம் சாந்தம் - மிருதுபாஷி தத்பரம்
ஏபிர் வகுணைர்யுக்த மில்பாச் சார்ய ஸமீதாச்யத் "

என முடியும் மகா சுலோகங்களின் தாத்பர்யமாவது : விஸ்வகர்ம குலத்தினராயும், ஜகத்தை உண்டாக்கவும், பரி

பாலிக்கவும், நாசப்படுத்தவும் வேண்டிய தத்துவங்களை யறிந்தவராயும், யந்திர தந்திர பிரதிஷ்டை முதலியவைகளைச் செய்துவைக்கப்பட்டவராயும், தர்மாசாரங்களை யுடையவராயும், தொழில் செய்துகொண்டிருப்பவராயும், நான்கு ஆசிரமங்களுக்கும் யோக்யராயும், சிரேஷ்ட வம்சஸ்தராயும், சிரௌத ஸ்மார்த்த கிரியைகளில் விருப்ப முடையவராயும், சகல லக்ஷணங்களோடு கூடியவராயு மிருக்கிற சிற்பரே ஆச்சார்யர் என்றும், வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது.

இனி புராண ஆதாரங்களை நோக்குவோம்: விஸ்வகர்ம புராணம், அத்தியாயம் 13ல்,

"ப்ராஹ்மணியாக் விஸ்வக மண்யா நாஹுபாச்சார்ய ஸத்தமாக்"

என்றதால், கர்ப்பாதான கர்மத்தில் பிராம்மணனையும், விஸ்வகர்மாவாகவும் இருக்கிற ஆச்சார்யனை அழைக்க வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. இன்னும் வாயு புராணம், உத்தரபாகம், அத்தியாயம் 22ல்,

"விஸ்வகர்மா ஸுதஸ்தஸ்யாம் ஜாத : சில்பி
பிரஜாபதி : - தேவாச்சார்யஸ்ய மஹதோ
தீமதோ விஸ்வகர்மண : - விஸ்வகர்மாத்
மஜஸ்சைவத விஸ்வகர்மய : ஸ்ம்ருத : "

என்பதால், விஸ்வகர்மாவின் புத்திரரான சில்பி பிரஜா பதி மகத்தான புத்திமான்; தேவர்களுக்கு ஆச்சாரியர். மேலும் விஸ்வகர்மாவின் புத்திரர்கள் விஸ்வகர்மா வாகவே விளங்குகிறார்கள் என்றும்; மேலும், பாகவதம் சஷ்டஸ்கந்தம், சப்தம அத்தியாயத்தில்,

"விர்ணீ மஹேமத்வோபாத்யாயம் - பிர்மிஷ்ட்ட பிராம்ணம்
தேரும்யசாம் ஜஸாவிசேஷ்யா மஸ்ஸபத்நாம் ஸ்தவ தேஜஸா,
அப்யர்த்தித : ஸுரகணை பௌரோஹித்யே மஹாதபா :
ஸ விஸ்வரூபஸ்த் தானூசு-ப்ரஹஸன் ஸ்வகக்ஷணயாகிரா"

என்பதால், துவஷ்ட்டப் பிரஜாபதியின் புத்திரராயும், சகல வித்யா விசாரதராயும், இருக்கிற விஸ்வரூபரைப் பார்த்து, பிரம்மிஷ்ட்டனாகவும், பிராம்மணனாகவும், குருவாகவுமிருக்கிற உம்மை மஹாமஹோபாத்யாயராக அதாவது, தேவபௌரோஹித்ய ஆச்சார்யராக வரிக்கிறோம். என்று பிரார்த்தித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. மேலும், விஸ்வப் பிராம்மண ஜாதியருக்கென தனிப்பட்ட ஆச்சார்ய அல்லது குருபீடங்கள் கிருதயுக முதலாகவே பல இருந்து வருகின்றன. அவைகளில் முற்பட்ட ஸ்ரீமத் வெங்கடாச்சார்ய குருஸ்வாமிகளைக் குறித்தும், திருநெல்வேலி ஸ்ரீமத் பரசமய கோளரிநாத அவதூதாச்சார்ய குருஸ்வாமிகளைக் குறித்தும் பாடப்பட்டுள்ள பிரபந்தங்களில், முற்குறித்தவரை, "ஆச்சார்யர்க்கு ஆச்சார்யரும், பூர்ஜிதருமானவர்" எனக் கூறப்பட்டும், பின்னவரைப் புகழ்ந்து கூறும் பரசமய கோளரிநாதர் பிள்ளைத்தமிழ் எனும் அரிய பிரபந்தத்தில்,

> "மருக்கமலம் மொழிபழன நெல்லை
> வளம்பதிறனு மறை வேதத்தின்
> உருக்கலந்து கருத்தரித்து சிவஞான
> வடிவாகி யுலகிலெங்குந்
> திருக்கறுக்கும் பரசமயச்சிங்க மெனும்பெயர்
> படைத்துத் தெளிந்துவைகுங்
> குருக்களுக்குங் குருவாகிக் குலத்திலெயுஞ்
> ஜெகத்குருவாகு மென்றே"

என்று உலகொப்பக் கூறியிருப்பதால், விஸ்வகர்ம ஜாதியர்கள் 'ஜெகந்நத' மென்னும் சிறப்புப் பெயருக்கும், ஆச்சார்யர் என்னும் பட்டப்பெயருக்கும் உரியவரென சந்தேகமற சித்திப்பதாம். இன்னும் "மாந்தைப்பள்" என்னும் பண்டைய நூலிச், மறைக்குறியோர்தல் என்ற பாடலில்,

" தனமறையோர் குலகுரு வாச்சாரி சங்கராச்சாரி
கனதுவட்டா மகன்விசுவ கன்மப் பிராமணனே
மனமையம் வேண்டாமெனு மேன்மக்களுரை மறைக்குறிகள்
தினமுறவேயுணர்ந்த வுழத்தியர் மகிழ்ந்து களைத்துவரே "

என வருவதால், பிரம்மகுருவாகிய சங்கராச்சாரியார் துவட்டாவின் புத்திரனாகிய விஸ்வப்பிராம்மணரே என்பதும் ஆச்சார்ய பட்டத்திற்கு உரியவரே என்பதும் விசிதமாகும்.

மேலும், ஆந்திர நாட்டு மகநீயரும் யோகியுமான ஸ்ரீமத் வேமன்னு அவர்கள் பாடியுள்ள இரண்டு பத்தியங்கள் இதனடியில் வருமாறு :

" ஆதிசங்கராசார் யுலவனிலோ விஸ்வகர்மா
வேறை சங்கராசார்ய விபுலமயிரி
பாதுகாசிரமந்து மோசின பலமுனே
விஸ்வதா பிராம விநரவேமா. "

(தாத்பர்யம்) இப்பூமியின்கண் சிவாம்சமாய் அவதரித்த ஆதிசங்கராச்சாரியர் யாரென்றால் அவர் சாக்ஷாத் விஸ்வகர்மாவாகும். (அவருக்கு நான்காம் பட்டமாகவும் சுவீகார புத்திரரும் சீடருமாக வந்த) வேறு ஆருஷேய சங்கராச்சாரியர் பெருமைப் பாட்டையடைந்தார். அப்பெருமைபாட்டிற்குக் காரணம் ஷை 3-வது சங்கராசார்ய ஸ்வாமிகளின் பாதுகையை (பரதனைப்போல் பக்திபூர்வமாய்) ஆற்றினின்றும் சிரசின்மீது சுமந்து வந்ததின் பலனே! பின்னும் யாதோ! உலகிற்குணர்த்தும் ஞானமாகிய அறிவுவாய்ந்தஓ வேமன்னு நீகூறுவாயாக என்பதாம்:

" சங்கராசார்யுலு - ஜசத்குருவனுதனு
கொப்பகா செப்பிரி - ஒப்பு கொண்ட்டி
கம்சாலி பேரிட்லு பாபுலகு கலிகெனே !
விஸ்வதா பிராம விநரவேமா !"

(தாத்பர்யம்) ஞானமாகிய அழகால் உலகுக்கு மகிழ்வை விளைவிக்கும் ஒ வேமன்னு! ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள், ஆச்சாரியார், ஜெகத்குரு என்றும் பெருமைப் படுத்திச் சொன்னூர்கள். அதையும் ஒப்புக்கொண்டேன். கம்மாளருக்கே உரிய ஆச்சாரியர், ஜெகத்குரு என்னும் பட்டமானது பார்ப்பனர்களுக்கு உண்டோ? அய்யர், அய்யா என்னும் பட்டங்களை வகிக்கவேண்டிய சங்கரருக்கு தனிப்பட்ட வகையில் அப்பட்டங்கள் கிடைத்ததின் வகையை நீ ஆராய்ந்து கூறுவாயாக என்பதாம்.

அல்லாமலும், இற்றைக்கு 1065 ஆண்டுகளுக்கு முன்னிருந்த குலோத்துங்க சோழன் சபையில் ஆஸ்தான கவிஞராயிருந்த ஒட்டக்கூத்தப்புலவர் இருமாப்பால் கேட்ட கேள்விக்கு உத்தரமளித்த திருவேங்கடாச்சாரி எனும் புலவர் கூறியதாவது:

> "செல்வன் புதல்வன் திருவேங்கடவன் சேகந்தநாம்
> சொல்லன கவியைக் குறைசொன்னபேரைக் குறடுகொண்டு
> பல்லைப்பிடுங்கி பருந்தூட்டமாட்டிப் பகைவர் முன்னே
> அல்லும்பகலும் அடிப்பேன் கவிிருப் - பாணிகொண்டே"

எனும் பாடலால் தம்மை ஜெகத்குருவென்றும் அதனுல் தாம் 'ஆச்சாரி'யென்றும் கூறியதை ஒட்டக்கூத்தரும், புகழேந்தி, கம்பர் முதலிய மகா புலவர்களும், சபையோரும் வாய்பொத்தி ஒப்புக்கொண்டிருப்பது தெற்றெனவிளங்கும். ஆருஷேயப் பிராம்மணர்களுக்கும், பௌருஷேய பிராம்மணர்களான விஸ்வகர்மர்களுக்குமிடையே பெரும் போராட்டம் கனன்று நாவிட்டெழுந்த அக்காலத்தில் ஜெகத்குரு எனும் சிறப்புப் பெயரும் ஆச்சார்ய பட்டமும் அரச சபையில் புலவர்கள் ஒப்ப, பெறப்பட்டதென்றுல் அதன் பெருமை தானே விளங்கும்.

மேலே கூறியுள்ள இரண்டு ஆதாரங்களால் விஸ்வகர்ம குலோற்பவர்களுக்கு அநாதி காலந்தொட்டே "ஆச்

சார்ய"ப் பட்டம் சித்திக்கப்பெற்றதாகும். இப்பட்டப் பெயரொன்றே இக்குலத்தினர் யாவரும் வகிக்கத் தக்கவாறு வேத சம்மதம் பெற்றதுமாகும். இதனை விஸ்வப்பிராம் மணர்களுக்குப் பட்டப்பெயராகப் பிறர் ஒருவர் அவர்களுக் குக் கொடுக்கவும், அவர்களிடமிருந்து அதனைப் பிறர் பறிக்க வும் எவ்வித உரிமையும் இல்லையென்பது மிக விளக்கமா கும். எனவே, விஸ்வகர்மப் பிராம்மணர்கள் " ஆச்சாரியர் " எனும் மிகச் சிரேஷ்டமான பட்டப்பெயரைத் தமது உயிரினும் பெரிதாகப் பேணக்கடவர்.

---

## 16. விஸ்வகர்மப் பிராம்மண மாந்தை நகரச்சிறப்பு

எந்நாட்டிலும் பேரறிஞர்களும், மூதறிவை நாடிய குழுவினர்களும் தனித்து வதிந்திருந்தனரென்பது சரித்திரங் களால் அறியக்கிடக்கும் உண்மையாம். இந்நாட்டில் தபோதனர்களும், ரிஷியாதி முனிவர்களும் நைமிசாரண் யத்திலும், சித்தக் குழுவினர் இமையம், பொதிகை, விந்தி யம் ஆகிய மலைச்சாரல்களிலும், கற்குகைகளிலும் இரவு பகலற்று வதிந்துவந்தனர் என்பதும் இன்றும் வதிந்து வருகின்றனர் என்பதும் நாமனைவரும் கண்கூடாக் கண் டறிந்தவைகளாம். நமது புராண இதிகாசங்களும், சித்த நூல்களும் இவற்றை வற்புறுத்திக் கூறும். அங்ஙனமாக அப்பெரியோர்கள் தனித்து வாழாவிடினும், குவிந்த அல்லது ஒருமுகப்பட்ட மனத்தைப் பெறுவிடினும், இந் நாட்டின்கண் நிரம்பிக்கிடக்கும் பல்வேறுபட்ட சாஸ்திரங் களையும், சரியை, கிரியை, யோகம், ஞானம் பற்றிய பல நூல் களையும், வைத்தியம், வாகடம், விஞ்ஞானம், வானசாஸ் திரம், சோதிடம் ஆகிய மனித வாழ்க்கைக்கு இன்றியமை யாத பல நூல்களையும், அவர்களால் உலகத்துக்குக் கொடுத்

இருக்க முடியாதென்பது திண்ணம். இந்நாடு, பூர்வந்தொட்டு மற்றெல்லா நாடுகளிலும் சிறந்து விளங்கற்கும், வளர்ச்சிபெற்றிருத்தற்கும் அத்தவமக்களின் ஏகாந்த வாழ்க்கையும், அதன் பயனுக விளைந்த அளவற்ற ஆராய்ச்சி நுட்பங்களுமே முக்கிய காரணங்களாம். இல்லையேல், தம்மைத் தாமறிந்து, பிரபஞ்சப் பேரறிவைப்பெற்ற ஆத்மஞானிகள் இத்துணையளவு பெருக்கம் பெற்று வேறெந்த நாட்டில் வதிகின்றனர்? இவற்றுள், ஒரு துறையில் பேரறிவைப் பெற்று பிரகாசிக்க வேண்டுமாயின், அவ்வறிவை நாடிய மக்கள் அலைக்கப்படாத மனமுடையவர்களாய்த் தத்தம் கருமத்தில் கண்ணுயிருந்து, அரும்பெரும் காரியங்களைத் தம்மனம்போல் சாதித்து, லோகோபகாரார்த்தமாக வாழ்ந்திருந்து, மற்றவரினும் உயரிய மக்களாய்ப் புகழுடம்பு பெறுதற்கு, வசதியான தனியிடங்களில், தனிமையாகவோ, அல்லது ஒருமித்தோ கூடிவாழ்தல் இந்நாட்டுக் கலைஞர்களின் தனிச் சிறப்பாம். இல்லையேல் நமது நாட்டார் மேற்குறித்த துறைகளிலும், அரிய கலைகளிலும் இத்துணை வளர்ச்சி பெற்றிருக்கக் காரணமில்லை.

மேலே கூறியவாறு நாட்டின் நலனை நாடிய நன்மக்களான விஸ்வகர்மப் பிராம்மணர்கள் ஒரு காலத்தில் தனித்து வாழ்ந்திருந்து தங்கள் அருங்கலைகளை அபிவிருத்தி செய்து உச்சநிலைக்குக் கொணர்ந்தனரெனச் சரித்திரம் பகர்வதாம். வனசரர்களாய், நிர்வாணிகளாய், மிருகத்தன்மையுடன் மரங்களினிடையும், குகைகளிலும் வதிந்த மக்களை, நாகரிகத்துறையில் புகுத்தியும், ஏடு எழுத்தாணி தந்தும், எழுத்தறிவித்தும், படிப்படியே அறிவு வளர்ச்சி பெறச் செய்து, உலக தத்துவத்தை உணர்த்தியும், மோட்ச சாதனத்தைக் உள்ளங்கை நெல்லிக்கனியெனக் காட்டிய விஸ்வகர்மப் பிராம்மணர்களின் கலையறிவனைத்தும், அதன் பயனுய் எழுந்த நூல்களனைத்தும், அவர்கள் ஏகாந்த

வாழ்க்கையினாலும், ஆராய்ச்சியாலும் பெறப்பட்டவை கவளை நிரூபிக்கத் தக்கனவாம். இல்லையேல், இந்நாட்டின் கண்ணுள்ள அறுபத்திநான்கு அருங்கலைகளான, அக்கர விலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிநூல், சோதிடம், தருமநூல், யோகநூல், மந்திர சாஸ்திரம், சகுனநூல், சிற்பசாஸ்திரம், வைத்திய நூல், உருவநூல், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுர பாடணம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரம்மம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அஸ்திரப்பரீட்சை கனகப் பரீட்சை, இரதப்பரீட்சை, கஜபரீட்சை, அஸ்வப்பரீட்சை, இரத்தினப்பரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராம விலக்கணம், மல்லயுத்தம், ஆகருடணம், உச்சாடனம், வித்துவேடணம், மதனசாஸ்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துகவாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திர ஜாலம், மகேந்திரஜாலம், அக்கினிஸ்தம்பனம், ஜலஸ்தம்பம், வாயுஸ்தம்பம், திட்டிஸ்தம்பம், வாக்குஸ்தம்பம், சுக்கிலஸ்தம்பம், கன்னஸ்தம்பம், கட்கஸ்தம்பம், அவஸ்தைப் பிரயோகம் ஆகிய கலைகளை ஆராய்ந்துதேர்ந்து அவைகளையும் அவைகட்கான பல சாதனங்களையும் லோகோபகாரார்த்தமாக அளித்திருக்க வியலாது. மேலே காட்டிய அருங்கலைகள் திரண்டு எந்நாட்டில் ஒருங்கே உண்டு? அத்தகைய அரும்பெருங்கலைகள் இந்நாட்டில் மட்டும் எவ்வாறு உச்சம் பெற்றன? இவ்வாறு இந்நாட்டில் பூர்வத்தில் உச்சம் பெற்ற கலைகளன்றோ மற்ற நாடுகளில் இந்நாள் ஆராயப்படுவதற்கும் வளர்ச்சி பெறுவதற்கும் வழிகாட்டிகளாயுள்ளன.

இனி விஸ்வகர்மப் பிராம்மணர்களைத் தவிர்த்து, வேறு எச்சாதியார் மேலே காட்டிய அருங்கலை அனைத்தையும் ஒருங்கே உணர்ந்தவர்களாவர்? இன்று உயரிய

ஸ்தானத்தை, இதர மக்களின் அறியாமையை ஊன்று கோலாய்க் கொண்டு உயர்வு பெற்ற மக்கள் எங்ஙனம் தமக்கும், தமது வகுப்பு மக்களுக்கும் பிறப்புரிமையாகக் கொண்டுள்ளார்கள்? பகுத்தறிவும், மனச்சான்றுமுள்ள பொதுமக்கள் காய்தல் உவத்தலின்றி இதனுட் புகுந்து சரித்திர ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்குவாராயின் உண்மை விளங்காமற்போகாது.

இந்நாட்டில், விஸ்வகர்மப் பிராம்மணர்கள் மேலே கூறியவாறு தனித்து வாழ்ந்த நகரங்கள் "மாங்கை"யெனப் படும். இப்பதம் ஆரியநாட்டு "மாங்கர்" என்னும் பதத்தின் தமிழ்த்திரிபாகும். பொதுவாக இதன் பொருள் மனிதரில் அறிவுடையோர் அல்லது தலையாயவர் கூடி வசிக்கும் மகத்தான இடம் அல்லது நகரம் எனப்படுவதாம். தமிழ்ப் புலவோர் தங்கள் மொழி வன்மையால் இதனை 'மங்து + ஐ' ஆகிய இரண்டின் புணர்ச்சியால் மங்கையென்றாகிப் பின்னர் மாங்கையென நீட்டல் விகாரம் பெற்றதெனக் கூறுவர். மங்து, மாங்து, மாங்தர் என்பன ஒரு பொருள் கொண்ட பல சொற்கள். மங்து என்ற பதத்திற்கு மனிதன், அரசன் எனும் வேறு இரு பொருள்களுமுண்டு. எனவே, உயரிய மனிதரை, அல்லது அரசர்களை, ஆளுவோரைக் கொண்டுள்ள இடம் எனவும் பொருள் பயக்கும். மாங்கை என்னும் சொல் 'மாவிங்கை', 'மாவிஞ்சை'யாகிய சொற்களின்றும் மருவியதெனக் கூறுவாருமுண்டு. மா + விங்கை என்றால் பெரிய ஆச்சரியம் என்றும், மகாசக்தி வாய்ந்த துர்க்கையின் இருப்பிடம் என்றும், தக்ஷப்பிரஜா பதியின் மகளின் பெயர் என்றும், காசிபன் மனைவியின் பெயரென்றும், மா + விஞ்சை என்றால், மகத்தான கல்வி அல்லது வித்தைக்கிருப்பிடமெனவும் பொருள் தருவனவாம். பின்னிரு பொருள்களும் விஸ்வகர்ம அறிஞர்கள் கூடி வசித்த இடத்திற்கு ஏற்றவைகளாகப் பாவிக்கலாம். எனினும், மாங்கைநகர் என்பது உயர்ந்த, அறிவு விளக்கம் பெற்ற

மனிதரை அல்லது வகுப்பாரைத் தன்னிடத்தே கொண்டுள்ள நகரம், கோட்டை, ஊர் என இடவசதிக்கேற்றவாறு பொருள் கொள்வதே முறை என்ப. ஆறறிவு மிகுதியாகக் கொண்ட மக்கள் வசிக்கும் தனி இடத்தை மாக்கள் வசிக்கும் மந்தையென அறிவாளிகள் பொருள்கொள்ள மாட்டார்களென்பது நிச்சயம்.

இந்நாட்டில், கலியுக ஆரம்பத்தில் விஸ்வகர்ம அறிஞர்கட்கு, மூன்று, தனித்த 'மாந்தை' நகர்கள் உண்டு. அவைகளில் ஒன்று டில்லி நகருக்கு வடக்கில் அவந்தி நாட்டில் இருந்த "மாந்தா" நகரும், கோட்டையுமாம். மற்றொன்று இலங்கையிலுள்ள மாந்தைக் கோட்டை. இன்னொன்று சோழநாட்டு மாந்தை நகராம். முன்னர் கூறிய இரு நகர்களும், காந்தக்கற்களால் கட்டப்பட்ட மதில்களைக் கொண்ட கோட்டைகளால் சூழப்பட்டிருந்தன. ஆயுதங்களோடு வரும் பகைவர்களை அக்கோட்டைகள் அணுகவொட்டாது தடுத்தனவாம். ஏனெனில், காந்தக்கற்கள் இரும்பை விடாது தன்னிடத்தே ஈர்த்துக்கொள்ளும் இயல்புடையனவன்றோ? இந்நகரங்களும், கோட்டைகளும் அரசர்களால் ஆளப்படாவிடினும் தொழில் - ஆளர்களாலும், கம்-ஆளர்களாலும், குருக்களாலும், தலைவர்களாலும், நகராண்மைக்காரர்களாலும், நாட்டாண்மைக்காரர்களாலும், பெரியதனக்காரர்களாலும், 'கார்பார்'களாகிய காப்பாளர்களாலும் ஆளப்பட்டு, தங்களுடைய தொழில் நுட்பங்களை மேலும் ஆராய்ச்சி செய்வதற்கும், பிறர் தங்கள் தொழில்களின் உளவை அறிந்துகொள்ளாதிருப்பதற்கும், தமது சிருஷ்டிப் பொருள்களை எதிரிடையான மக்கள் அபகரியாதிருப்பதற்காகவும் இவ்வித நகரங்களையும், கோட்டைகளையும் கட்டி அவற்றில் வதிந்தனரென்பதே மிக உண்மைக் காரணங்களாம். இம்மக்கள் பிரம்ம சிருஷ்டியைப் போன்ற பஞ்சகிருத்தியங்களைச் செய்த பிராம்மணர்களேயன்றி, யுத்த சன்னதராய் பிறர்மீது

படையெடுத்துச் சென்ற க்ஷத்திரிய வீரர்களன்று. கோட்டையில் வசித்தாலும் இவர்களை க்ஷத்திரியர் எனக் கூறுதல் பொருந்தாது.

### வடநாட்டு "மாந்தா" நகரும், காந்தக் கற்கோட்டையும் :

துவாபரயுக முடிவில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் துவாரகாபுரி நகரையும், தர்ம புத்திரருக்கு இந்திர பிரஸ்த நகரையும் கட்டி முடித்த சிற்பிகளும். இதர நான்கு நித்தியங்களைச் செய்து கைதேர்ந்த விஸ்வகர்மப் பிராமணர்களனைவரும். டில்லி நகருக்கடுத்த அவந்தி நாட்டில் ஒரு காந்தக் கற்கோட்டையைக் கட்டி, அதற்கு "மாந்தா" நகரெனப் பெயர் தந்து அதில் வசித்து, லோகோபகாரமான தங்கள் கிருத்தியங்களைச் செய்து வந்தனர்.

அருகில் ஆண்டிருந்த பார்த்துவஹரி என்னும் அரசன் ஆருஷேய விப்பிரர்களால் தூண்டப்பட்டு, காந்தக் கற்கோட்டையை அழிக்கும் நோக்கமாய்ப் படையெடுத்தான். கோட்டைக்குள்ளிருந்த விஸ்வகர்மர்கள் பகற்காலத்தில் சூரியகாந்தத்தைக் காட்டியும், இராக் காலங்களில் சந்திர காந்தத்தைக் காட்டியும் வந்த சேனைகளை அதோகதியாக்கினார்கள். படையெடுப்பு இவ்வாறு ஒடுக்கப்பட்டபோதிலும், பகைமை வளர்ந்துகொண்டே வந்தது. அவர்களைச் சூழ்ச்சியால் வசப்படுத்தி அக்கோட்டையை ஒழிக்கக் கருதி, அவ்வரசன், சில கணிகைகளை அக்கோட்டைக்குள் அனுப்பினான். அவர்கள் சில பாவியர்களை வசப்படுத்தித் தங்கள் மையல் வலைக்குள் சிக்க வைத்தனர். ஒருநாள் நள்ளிருளில் காந்தக்கோட்டை தீப்பற்றியதென தங்கள் காதலர்களைத் தட்டி யெழுப்பினார்கள். பகைவர்கள் வரகு வைக்கோலால் தீயிட்டிருக்க வேண்டுமென்று அவர்கள் சொல்லிக்கொண்டு அலறிப்புடைத் தெழுந்தனர். எனவே, அந்த உளவைத் தெரிந்துகொண்ட கணிகையர்கள் காந்தக் கற்கோட்டையி

னின்றும் நீங்கி பார்த்துலஹரி அரசனிடம் இந்த இரகசியத்தைச் செப்பினர். பார்த்துலஹரி அரசன் அவ்வாறே வரகு வைக்கோலைக் கொண்டு தீ மூட்டி அக்கோட்டையை அழித்தான். உள்ளிருந்த விஸ்வகர்மப் பிராம்மணர்கள் மனமுடைந்தவராய், விமானங்களிலும், இயந்திரப்பொறிகளிலும் வெவ்வேறு நாடுகளுக்கும், தீவாந்திரங்களுக்கும் சென்றனர். சில கைதேர்ந்த விஸ்வகர்மர்கள் சுரங்கத்திற் றங்கியிருந்து சமயம் பார்த்து பர்த்துலஹரி அரசன் நகரம் முழுதும் அழிந்து போகும்படியாக அதர்வண வேதத்தில் கூறியுள்ள மாரண பீஜாட்சர உச்சாரணைத்தால் வெற்றி கண்டனர். மேலே கூறியவற்றால் வடநாட்டுக் கோட்டை, நகரச் சிறப்பும் அவை அழிந்த வரலாறும் தெற்றென விளங்கும்.

இனி இலங்கையிலுள்ள மாந்தை நகரையும், காந்தக் கற்கோட்டையையும் குறித்துப் பேசுவோம். ஈங்கு இலங்கையைக் குறித்து சிலவற்றைக் குறிப்பாக அறிந்து கொள்ளுதல் நலமாம். இலங்கையின் ராஜதானியாகிய லங்காபுரி தென் சமுத்திரத்திலே, திரிகூட பர்வதச் சிகரத்திலே விஸ்வகர்மாவினால் சிருஷ்டிக்கப்பட்ட நகரமாம். அதற்கு ஏழு மதில்கள் உண்டு. இதைச் சேர்ந்த நாடுகள் எழு நூறு காதம் விஸ்தீரணமுடையன. இது சூரிய சித்தாந்தத்தில் சொல்லப்பட்ட மேகலா நகரங்கள் நான்கனுள் ஒன்றாம். ஆதி இலங்கை மேகலா ரேகையில் இருந்தது. இப்போதுள்ள இலங்கை கடலாற் கொள்ளப்பட்ட இலங்கையின் சிறு கூறு என்று சொல்லப்படுவதால், இராமாயண காலமாகிய திரேதாயுகத்திற்கு முன் இந்தியாவும், இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக இருந்திருக்க வேண்டுமென சரித்திரக்காரர்கள் அறுதியிட்டுள்ளனர். இராமாயண காலத்தில் இவ்விரு நாடுகளுக்கிடையே பெரு நீர்ப்பரப்பு உண்டென்பது சந்தேகமறப் பெறப்படுவதாம். இவ்வித தொன்மை வாய்ந்த இலங்கைத் தீவில், சோழநாட்டு

சிற்பிகளைக் கொண்டு கலியுகாதி வருடம் 512-ல் திரி கோண மலையிலுள்ள சிவாலயம் கட்டப் பட்டதாகும். இது கட்டப்பட்ட பின்னரே மாந்தை நகரமும், கோட்டை யும், இலங்கைக்கு மேல்பாகத்திலுள்ள கோட்டை மன்னு ருக்குச் சமீபத்திலுள்ள மாந்தோட்டம் என வழங்கப் படுகிற திருக்கேதீஸ்வரம் என்னும் ஸ்தலத்துக்கு அருகே கட்டப்பட்டவைகளாகும். இதைச் சூழ்ந்த கோட்டை காந்தக் கற்களால் ஆகியது. எனவே, அரபிக்கடலில் வியாபார நிமித்தமாக ஓடிய கப்பல்கள் இக்காந்தக் கற் களின் வலிமையால் ஈர்க்கப்பட்டன வென்றும், கப்பல் களின் ஆணிகள் கழன்று சுக்கல் சுக்கலாயின வெனவும் சரித்திரக்காரர்கள் வரைந்துள்ளனர். மேலே கூறிய திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத்திலுள்ள திருக்கேதீஸ்வரரைப் பூசித்து, விஸ்வரூபனுகிய தேவப்பிராம்மண குருவாகிய புத்திரனை இழந்த துவஷ்டா, விப்வகர்மா என்னும் இரண் டாம் புத்திரனை அடைந்தான் என முந்திய அத்தியாயங் களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இம்மாந்தை நகரும், கோட்டையும், சேரன் செங்குட்டுவனுல் அழிக்கப்பட்ட தெனக் கூறப்படுவதால், அங்ஙகர் ஓராயிரம் ஆண்டுகளே இலங்கையில் சிறந்து விளங்கிற்றெனப் பெறப்படும்.

இனி இதைக் குறித்த சில ஆதாரங்களை நோக்கு வோம். மாந்தையும், மாந்தோட்டமும் ஒன்றெனக் கூறப் படுதலுமுண்டு. அது ஒரு பெருந்துறைமுகமாக இருந்தது. இந்நகரை ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரத்தில் "வங் கம் மலிகின்ற கடன் மாதோட்ட நன்னகரில்" எனத் தோத் தரித்துள்ளார்.

இன்னும் எட்டுத் தொகையுள் நான்காவதாகிய பதிற்றுப்பத்தில் 9ம் பத்தில் 90ம் அத்தியாயத்தில்,

"கட்டில் புழுக்கிற் கொங்கர் கோவே
மட்டப் புகர்விற் குட்டுவ ரேறே

வேழா அத்துணைத்தோட் பூழியர் மெய்ம்மறை
யிலங்கு நீர்பரப்பின் மாந்தையோர் பொருந ”

என்பதால், மாந்தையில் வசித்த விஸ்வகர்மப் பிராம்மணர்கள் யானை போன்ற புயபலத்தை யுடையவர்களென்று இலங்கை மாந்தையில் வாழ்ந்த விஸ்வகர்மர்களைச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. அல்லாமலும் இம்மாந்தை நகர் கலியுகாதி ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இருந்த சேரன் செங்குட்டுவனால் அழிக்கப்பட்டதென்றும் பெறப்படுகின்றது. அந்நகரின்கண் வசித்த விஸ்வகர்மர்கள் மீண்டும் தென்னாட்டுக்கு திரும்பிவந்து விட்டனர் என்பது சரித்திரமாம். இஃதொன்றுமேலேயே ஈழநாட்டுக் கம்மியருக்கும், தென்னாட்டுக் கம்மியருக்கும் இடையே காணப்படும் நெருங்கிய உறவுக்குக் காரணம் கண்கூடாம்.

மேலும், இந்நகரைக் குறித்து மேல்நாட்டு ஆராய்ச்சிக்காரர்கள் கூறுவதை நோக்குவோம். (Bertolakki) பெற்றலாக்கி எனும் உலாந்தகார யாத்திரிகன் மாந்தோட்டம் என்னும் நகரம் கம்மாளரால் கட்டுவிக்கப்பட்ட ஒரு நகரம் அல்லது கோட்டை யென்றும், செழிப்பும் ஐசுவரியமும் நிறைந்திருந்ததென ஊகிப்பதற்கான பல சின்னங்கள் காணப்படுகின்றனவென்றும், பெரும் ஜனத்தொகையும் பராக்கிரமமும் பொருந்திய அச்சாரியார் இந்நகரில் வசித்திருந்தனரென்றும், அரேபியாவிலிருந்தும் பெர்ஷியாவிலிருந்தும் கப்பல்கள் ஜாக்கிரதையாக இத்துறைமுகத்தை யணுகி பண்டம் மாற்றி காற்றுப் பிடிக்கும் வரையில் அங்கு தங்குதல் வழக்கமென்றும் எழுதியுள்ளார்.

இன்னும் ஆங்கிலேய ஆசிரியரான (Tennant) டென்னன்டு என்பார், இலங்கையைப் பற்றி எழுதிய நூலில், முதல் புத்தகம், 1ம் பக்கம், 8ம் அதிகாரம், 440ம் பக்கத்தில், “ இலங்கையில் நூதன கப்பல்கட்டுந் தொழில்

தொன்று தொட்டு உள்ளதென்றும் அவைகள் இருப் பாணியில்லாமல் கட்டப்பட்டனவென்றும் கூறியுள்ளார். (Palladius) பள்ளாடியஸ் என்னும் கிரீஸ் தேசப் பெரியார் ஐந்தாம் நூற்றாண்டில் உண்டான காந்தக் கற்கோட்டை யானபர்வதத்திற்கும் அரேபியக் கதைகளில் கூறப்பட்டுள்ள காந்த மலைக்கும் சம்பந்த முண்டெனக் கூறுகிறார். (Lane) லேன் என்னும் வியாக்யான கர்த்தா இந்த காந்த மலையையே அராபி இதிகாசக்காரர்கள் விவரித்துத் தங்கள் நூல்களுக்கு ஏற்றவாறு புனைந்து கூறியிருப்பதாகச் சொல்கின்றார். இன்னும், கி. பி. 231-ஆம் ஆண்டில் சந்திர கத் திஸ்ஸ அரசன், (Rc an Wellada Coba) ரூவானு வல்லாட கோபா என்னும் கோபுரத்தின் சிகரத்தில் மின்னல் இடி விலக்கும் கண்டுபிடிக்கருவியைச் செய்வித்து வைத்தானெனவும், அக்காலத்திய அந்நாட்டுக் கம்மாளருக்கு மின்சார சக்தியின் அறிவும், தொழில்களும் தெரிந்திருந்தனரென (Fergusson) என்னும் கிரந்த கர்த்தா " இலங்கை " என்னும் தமது நூலில் எழுதி வைத்துள்ளார்.

அல்லாமலும், ' விசிட்ட வாசம் ' என்னும் நூலின் 26ம் பக்கத்தில், " ஐரோப்பியர் இலங்கைக்கு வருமுன், இலங்கையின் மேற்பால் உள்ள மாந்தையிலேயே கொள்ளல், விற்றல் செய்யும்பொருட்டுப் பெரிய சந்தைகள் கூட்டினார்களென்றும், மாந்தை ஒரு பிரதான துறைமுகமாக இருந்த"தென்றும் கூறப்பட்டுள்ளது. எனவே, மேலே கூறிய ஆதாரங்களால் இலங்கையில் இருந்த மாந்தை நகர் உண்மையிலேயே பிரபல்யம் பெற்று இருந்ததென்றும், அதில் வசித்த கம்மியர்கள் தொழில்வன்மைச் சிறக்கப் பெற்றிருந்தனரென்பதும் ஊன்றிப் பெறப்படும். அறிவுடையோர் அனைவரும் இதனை ஏற்றுக்கொள்ளவ ரென்பது உறுதி.

இனி சோழ தேச மாந்தை நகரைப்பற்றி ஆராய்வோம். இந்நகர் தஞ்சாவூர் ஜில்லா, நன்னிலம் தாலுக்

காவில் அமையப் பெற்றதாம். தில்லை வாழ் அந்தணர்கள் சிதம்பரத்தில் தனித்து வசிப்பதுபோல், இந்நகரில் விஸ்வ கர்மப் பிராமணர்கள் வசித்தனரெனப் பெறப்படுகின்றது. இந்நகரில் காந்தக் கற்கோட்டை இல்லை. தென்னாட்டின் கண் நடைபெற்ற பல தேவாலயத் திருப்பணி வேலைகட்காக ஈங்கு ஒருங்கு சேர்ந்திருக்கலாமெனப் பெறப்படும். இலங்கையில் திருக்கோணமலையில் கட்டப்பட்ட கோயில் சோழ நாட்டிலிருந்து வந்த குளக்கோட்டு மகா ராஜாவால், சோழ நாட்டுச் சிற்பிகளைக் கொண்டு செய்யப்பட்டதென, கோணேசர்கல்வெட்டுகூறுகின்றது. அது கீழ்க்கண்டவாறு:

"திருந்துகலி பிறந்தைஞ் ஞூற்றொருபது டனிரண்டாண்டு
சென்ற பின்னர்
புரிந்திட மாத மதிலீரைந்தாந்தேதி திங்கட்
புணர்ந்த நாளிற்
றெரிந்த புகழாலய மாஞ்சின கரமும் கோபுரமும்
தேரூர் வீதி
பரிந்து ரத்ன மணிமதிலும் பாவநாசச் சுனையும்
பகுத்தான் மேலோன்"

மேலும், அந்தக் கல்வெட்டின் வசன பாகத்தில், "சோழவள நாட்டில் மாந்தையம் பதியார், அக்கசாலைத் தலைவர்மார் இவர்களைக் குளக்கோட்டு மகாராசா அழைப்பித்து திரிகைலாய சிலம்பிலிந்த ஆலயங்களும், மதில்களும், பாவநாசச் சுனையும், படிக்கட்டும், மற்றும் சகல திருப்பணியும், திருக்குளத்து மதகும் விதி முறையாகச் செய்த ஆச்சாரிமார் திருநாமம்: உலககுருவாச்சாரி, சித்திர குருவாச்சாரி, வேதகுருவாச்சாரி, அட்சண குருவாச்சாரி, வாமதேவ குருவாச்சாரி இவர்கள் ஐந்து பேரும் மனதில் நினைத்தபடி கையினால் செய்யப்பட்ட விசித்திர குருவாச்சாரிமார்" என சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இதில் முக்கியமாக அந்த ஐந்து சிற்பிகளின் பெயர்கள் வேதபூர்வ

மாகவும், மிக அழகாகவும் அமைந்திருப்பதொன்றே விஸ்வப் பிராமணிகத்தின் சிறப்பை நில நாட்டுதற்குப் போதிய சான்றாகும். இனி, மாந்தை நகரைக் குறித்துத் தமிழ்நூற்கள் கூறுவதை ஆராய்வோம்.

விஸ்வபுராணம், பஞ்சகிருத்திய காண்டம், 4வது செய்யுளில்,

> " சித்திர மேடை சூழ்ந்த டில்லி நன்னகரடுத்த
> மத்திர திக்கின் மிக்க ஆசிக்கான் தத்தினுமேல
> சுற்றிலு மகலநாளைங் தோசனை தூரமுள்ள
> முத்திரை மிகுந்த கோட்டை சிருஷ்டித்தார் முத்தினத்தில்"

எனவே இக்கோட்டை 2500 வருடங்களுக்கு முன் இருந்ததென்பது சரித்திரம். தவசிரேட்டரான பட்டினத்தடிகளும் தமது பாடலின் 63-வது செய்யுளில்,

> " ஒருநான்கு சாதிக்கும் மூவகைத் தேவர்க்கும் உம்பர்க்கும்
> திருநாளும் தீர்த்தமும் வேறுளதோ வத்திசை முகனால்
> வருநாளில் வந்திடும் மாந்தைக் கண்ணாளர் வகுத்த தல்லால்
> குருநாதனுனை கண்டீர் பின்னையே திக்குவலயத்தே"

என்றும், மாந்தை நகராதிபதி சதகம் 3ம் பாடலில்,

> " மணிவதா வளமெனலாந்தரு திருத்தென்னாட்டின்
> மருவுராஜாதி ராஜர்
> வைகலு நிறைந்துலவு மாந்தை யல்பதியை நன்
> மணமுடன் செங்கோல் செயும்
> பணிபெற்ற விஸ்வகுல ராஜன் "

எனக் கூறியுள்ளதாலும், இற்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முன்னிருந்த குமண ராஜன் காலத்திலிருந்த ஒப்பிலாமணிப் புலவர் குமணனைப் போன்ற தலை யொன்றைச் செய்து கொடுக்க வேண்டி ஒரு சிற்பாச்சாரியிடம் அடியிற் கண்ட பாடலைப்பாடி,

"மாந்தையிலே வாழு மகுடத் தியாகியுனக்
கேந்து தழும்போ விரண்டுள து வேந்தர்
முடித்தழும் புன்காலிலே முத்தமிழோர்க் கீயும்
படித்தழும்புன் கையிலே பார்."

அப்பரிசிலைப் பெற்றிருப்பதாகவும், மாந்தை யென்ற நகர் விஸ்வகர்ம ஆதிக்கத்தின் கீழ் இத்தென் நாட்டின் கண்ணும் இருந்ததென்பது நன்கு விளங்கும். இப்பாடல்களில் மாந்தை நகரென்றே கூறப்பட்டிருந்தாலும், அது காந்தக் கற்கோட்டையால் சூழப்பட்டிருந்ததாக சூசிக்கப் படாமை இங்கு குறிப்பிடத் தக்கதாகும். எனவே, மாந்தை நகர் உண்மையிலேயே உண்டென்பதும் அதில் விஸ்வகர்கள் வந்திருந்தனர் என்பதும் பல சரித்திர ஆதாரங்களால் ஊன்றிப் பெறப்படுவதாம்.

---

## 17. விஸ்வகர்மப் பிராம்மண ஆச்சார்ய பீடங்கள்

விஸ்வப் பிராம்மணர்களுக்கு ஆச்சார்ய சப்தம் வேத சம்மதமாகப் பண்டுதொட்டு இருந்துவருவதுபோலவே, பூர்வத்திலிருந்து அவர்களுக்கு ஆச்சார்ய குரு பீடங்கள் பல உள்ளனவாம். அவைகள் தேசாச்சாரங்களுக்கு ஏற்ற வாறு அமையப்பெற்றுள்ள. சில மடாதிபதிகள் பிரம்ம சரியத்தை அநுசரித்தவர்கள் ஆனார்கள். சிலர் கிரகஸ்தாஸ்ரமத்தை அனுசரித்து, தங்களுக்கு வார்சுகளை உண்டாக்கிக் கொண்டார்கள். இவர்களனைவரும் விஸ்வகர்மப் பிராம்மணர்களான சிஷ்ய கோடிகட்கு தர்மார்த்த உபதேசங்களைச் செய்பவர்களாகவும், யாகாதிகிருத்தியங்களை நிறைவேற்றித் தருபவர்களாகவும், குலதர்மங்கள் குன்றும் போது அவைகளுக்குப் புத்துயிர் அளிப்பவர்களாகவும்

இருந்து வந்திருக்கிறார்கள். தங்கள், சமூக மக்கட்கு இவர்கள் இட்ட ஆஞ்ஞைகள் அரசர் கட்டளைகளிலும் மேலானதாகப் போற்றப்பட்டனவென்பது பிரசித்தம். தங்கள் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாதவர்களுக்குக் கண்டனை தண்டனை விதிக்கவும், ஜாதிப்பிரஷ்டம் செய்யவும் அதிகாரமிருந்ததாகப் பூர்வ சரித்திரங்கள் கூறுகின்றன. சில மடாலயபதிகள், தபோமகிமையுடையவர்களாகவும், சாபானுக்கிரக சக்தி வாய்ந்தவர்களாகவும், சித்த புருஷர்களாகவும் இருந்தார்களென சரித்திரங்கள் பகரும். இன்று நாட்டின் கண்ணுள்ள மடாதிபதிகளுக்குக் காட்டப்படும் மரியாதைக் கிரமங்களினின்றும், பூர்வகால மடாதிபதிகளுக்கும், குருஸ்தானங்களுக்கும் எத்துணை செல்வாக்கும், மரியாதையும், மக்கள் வழிபாடும் இருந்திருக்கவேண்டுமென்பதை ஒருவாறு ஊகத்தால் அளவிட்டு அறியலாம்.

ஆச்சார்ய குரு பரம்பரை என்னும் சமஸ்கிருத நூலில் காளஹஸ்தி முனிவரெனும் தவச்சிரேஷ்டர் காசிக்ஷேத்திரத்தில் தவமியற்றியிருந்தபோது சுவிரத மகாராஜன் அவரிடம் சென்று அம்முனிவரால் தர்மோபதேசம் செய்விக்கப் பெற்றானென்றும், அதன் காரணமாக விஸ்வகர்ம புராணம் உண்டாயிற்றென்றும் கீழ்க்கண்ட சுலோகத்தால் நன்கு விளங்கும்.

> "க்ருதேது வேங்கடா சார்யஸ்த்ரே தாயாம் நரகேஸரி,
> த்வாபரே சோடவிக்யாத: காளஹஸ்தீ கலௌயுகே"

இதன் தாத்பரியம்: கிரேதா யுகத்தில் ஸ்ரீவேங்கடாச்சார்ய சுவாமியும், திரேதாயுகத்தில் நரசிம்மாச்சார்ய ஸ்வாமியும், துவாபரயுகத்தில் ஜோடாச்சார்ய ஸ்வாமியும், கலியுகத்தில் காளஹஸ்தி ஆச்சாரிய ஸ்வாமியும் லோக சம்ரக்ஷணார்த்தம் குருத்வத்தைக் கைக்கொண்டார்கள். இவை யுகாந்திரங்களாகத் தொன்மையானவைகளெனக் காட்டுவதற்கு இந்த சுலோகம் எடுத்தாளப்பட்டுள்ளது.

இதர யுகங்களை விடுத்து, கலியுகத்தை எடுத்துக்கொள்வோம். இந்த யுகத்தில் தோன்றிய காளஹஸ்தி முனிவர் - விஸ்வகர்ம ஆச்சாரியர் - தமது தபோவலிமையாலும், வித்யா சம்பத்தாலும், தர்மார்த்த போதனைகளாலும், சேதுமுதல் ஹிமாசலம் வரையில் பரவியுள்ள பாரதபூமியிலுள்ள மக்களனைவரையும் தமது ஆக்ஞைக்கு இணங்கச் செய்து வித்யாநகரம், காசி, சிருங்கேரி ஆகிய இடங்களில் மடாலயங்களாகிய குரு பீடங்களை ஸ்தாபித்து விஸ்வப் பிராம்மண பிரதாபத்தை பிரசித்தம் செய்தார். அவைகளில் வித்யா நகரமெனப்படும் விஜயநகரத்தில் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட குருஸ்தானம் ஆரம்பந்தொட்டு விஸ்வகர்மப் பாரம்பரியத்திலேயே இருந்துவந்ததாம். காசி மடாலயமும், சிருங்கேரி குருபீடமும் சமீப காலத்தில் கைமாறியுள்ளன. விஜயநகர மடத்திலுள்ள சிலாதாம்பர சாஸனங்கள் கீழே கண்ட குருபரம்பரைகளைக் காட்டுகின்றன. அதன்படி அக்குருமார்களின் வரிசைக்கிரமம் பின்வருமாறு :—

1. ஸ்ரீபரமஹம்ச பரிவ்ராஜகாசர்ய காளஹஸ்தாச்சார்ய ஸ்வாமிகள்
2. தத்கர கமல ஸம்ஜாத ஸ்ரீரூடாசார்ய ஸ்வாமிகள்
3. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீவேங்கடாச்சார்ய ஸ்வாமிகள்
4. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீகாலாச்சார்ய ஸ்வாமிகள்
5. தத்கர கமலஸம் ஜாத ஸ்ரீநரசிம்மாச்சார்ய ஸ்வாமிகள்
6. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீபூர்வாச்சார்ய ஸ்வாமிகள்
7. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீகிருஷ்ணாச்சார்ய ஸ்வாமிகள்
8. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீருபுவாச்சார்ய ஸ்வாமிகள்
9. தத்கர கமலஸம்ஜாத ஸ்ரீநரசிம்மாச்சார்ய ஸ்வாமிகள்

இவர்கள் சிஷ்ய பரம்பரையில் வந்தவர்கள். இவர்களுக்குப் பின், ஷை மடாலய குருக்கள் கிரகஸ்தாஸ்சிரமங்களைத் தழுவிப் பின் சந்ததியார்களாகிய குரு பீடங்களை விர்த்திசெய்து வருபவரானார்கள்.

" காளஹஸ்த்தயாச்சார்ய நாம புருஷோத்தம குருர் பவேத், வேங்கடாச்சார்ய விக்யாக மனுஸூத்ர க்ருத க்ரணீ :'' என்னும் வாக்கியத்தால், ஸ்ரீகாளஹஸ்தி ஆச்சாரியாரும், ஸ்ரீ புருஷோத்தமாச்சாரியரும், ஸ்ரீ வேங்கடாச்சார்ய ஸ்வாமிகளும், திரிதயம், ஸாவித்திரி, ஸரஸ்வதி, காயத்திரி பீடங்களை ஸ்தாபித்ததாகச் சொல்லப்படுகிறது. முன்னர் கூறிய மூன்று குரு பீடங்களும் வித்யா பீடம் க்ஷீணித்தபின் உண்டாக்கப்பட்டன. இவைகளிலிருந்து ஆங்காங்கு பல கிளைப் பீடங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. அந்த குரு பீடங்கள் இந்நாட்டின் கண் இன்றும் உள்ளனவாம்.

வடநாட்டில் பிரக்கியாதிபெற்ற பஞ்ச மடங்களாவன :

1. சிருங்கேரி—ஸ்ரீமத் விச்வரூபாச்சாரிய குரு பரம்பரை ஸ்ரீஜெகத்குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகள்
2. போதலூர்—ஸ்ரீமத் வீரப்பிரம்மேந்திர ஸ்வாமிகள்
3. ஆனைகுந்தி — ஸ்ரீமத் வீரபோகவசந்தராயாச்சார்ய ஸ்வாமிகள்
4. விபூரி—ஸ்ரீமத் வேங்கடாச்சார்ய ஸ்வாமிகள்
5. நந்திகொண்டா—ஸ்ரீமத் சிவசங்கரய்ய ஸ்வாமிகள்

மேற்காட்டிய மடங்களுக்கு வடபாலுள்ள மடங்களாவன :

1. காசி—ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாச்சார்ய ஸ்ரீகாளஹஸ்தாச்சார்ய ஸ்வாமிகள்
2. கனுபர்த்தி — பரமஹம்ஸ பரிவிராஜகாச்சார்ய ஸ்ரீமத் பசவாச்சார்ய ஸ்வாமிகள்
3. காசி—ஸ்ரீ நாகேஸ்வராச்சார்ய ஸ்வாமிகள்
4. காசி—ஸ்ரீ சோலனாச்சார்ய ஸ்வாமிகள்
5. சிம்மாத்திரி—ஸ்ரீ பரமஹம்ஸ விப்வனாதாச்சார்ய அவதூத ஸ்வாமிகள்

6. விசாகப்பட்டணம்—ஸ்ரீ வீரயோகேந்திர ஸ்வாமிகள்
7. திக்கீபுரம்—ஸ்ரீ மௌனகுரு யோகீந்திர ஸ்வாமிகள்
8. கனுபர்த்தி—ஸ்ரீ கமலமூர்த்தி ஸ்வாமிகள்
9. பந்தர்—ஸ்ரீ கொண்டணாச்சார்ய ஸ்வாமிகள்
10. மசூலி—ஸ்ரீ கனுபர்த்தி வீரபத்திராச்சார்ய ஸ்வாமிகள்
11. ,, ஸ்ரீ ருண்டாச்சார்ய ஸ்வாமிகள்
12. ,, ஸ்ரீ பூபாலாச்சார்ய ஸ்வாமிகள்
13. ,, ஸ்ரீ தேசிகாச்சார்ய ஸ்வாமிகள்
14. ,, ஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகள்
15. ,, ஸ்ரீ பரமஹம்ஸ நீலகண்ட குரு ஸ்வாமிகள்
16. கர்நாடகம்—ஸ்ரீ ரும்பணாச்சார்ய ஸ்வாமிகள்
17. ,, ஸ்ரீ அஜேந்திராச்சார்ய ஸ்வாமிகள்
18. ,, ஸ்ரீ குருநாதாச்சாரிய ஸ்வாமிகள்
19. ஹைதராபாத்—ஸ்ரீ கனகாச்சார்ய ஸ்வாமிகள்
20. அனகபள்ளி—ஸ்ரீ நிரஞ்சனாச்சார்ய ஸ்வாமிகள்
21. பல்லாரி — ஸ்ரீ பரிவிராஜக ஸ்ரீ கோடேச்வராச்சார்ய ஸ்வாமிகள்

இனி, தென்னாட்டு மடங்களாவன :

1. திருநெல்வேலி—ஸ்ரீமத் பரசமய கோளரி சிம்மாசன அநவரத ஆச்சார்ய ஸ்வாமிகள்
2. சிதம்பரம்—ஸ்ரீமத் கமலமூர்த்தி மௌன குரு ஸ்வாமிகள்
3. ஒசூர்—ஸ்ரீமத் ஞானமூர்த்தி சுவாமிகள்
4. திருமூலவாரண்யம்—ஸ்ரீமத் சிவலிங்காச்சார்ய ஸ்வாமிகள்
5. சக்கிராயப்பாளையம்—ஸ்ரீமத் அகோரவீரபத்திராச்சார்ய ஸ்வாமிகள்

இவைகளில் முதலாவதாகக் கூறப்பட்ட பரசமயர் மடம். கிரகாச்சிரம மடமாகும். பிரம்மச்சாரி

களாக மடாதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு பின்னர் விவாகமும், குடாபிஷேகமும் செய்விப்பது இம்மடத்தின் நியதியாகும். இம்மடம் இற்றைக்குச் சுமார் 800 ஆண்டுகளுக்கு முன் ஸ்தாபிக்கப் பெற்றதாகும். ஆதிபரசமயகோளரிநாத சுவாமிகள், மிகத் தவசிரேஷ்டரெனவும், சித்த புருஷரெனவும், அவர்மீது இயற்றப்பெற்றுள்ள 'பிள்ளைத் தமிழ்' நூல் கூறுகின்றவாற்றாலும், கர்ணபரம்பரையான கதைகளாலும் அறியக்கிடக்கின்றது. ஓர்சமயம் தாம் ஏறி பவனிவந்த பல்லக்கின் ஒருபுறம் ஆட்கள் சுமந்து செல்லவும் மற்றொரு பக்கம் ஆட்களின்றி அந்தரத்தில் நின்று சென்றதாகவும் கூறப்படுகின்றது. மற்றொரு சமயம் சந்நிதி ஒருவர் தமது முன்னிருந்த ஒரு குட்டிச்சுவரைச் சுட்டிக்காட்டி இது வேங்கைப் புலியாகுமா வென உசாவினாராம். ஸ்ரீ சுவாமிகள் அக்குட்டிச்சுவரில் ஆரோகணித்து அதனை நட என்று ஏவினமாத்திரத்தில் அச்சுவர் பதினறு அடி வேங்கையாகி, உறுமிக்கொண்டு, பார்த்தோர் பயந்தோடவும், அருகிருந்தோர் வியப்பில் நடுநடுங்குமாறும் பவனிவந்தனராம். சில உடைந்த மண்பாண்ட ஓடுகளை இம்மகான் கையில் கொடுத்து அவைகளைப் பொன்னாக்கித்தரக் கேட்ட காலை அவைகளை அவர் கரத்தால் தொட்டமாத்திரத்தில் பொன்னாக மாறின என்பது உண்மை சரித்திரமாக நாளும் கருதப்படுவதாம்.

இனி சிருங்கேரி மடத்தைப்பற்றி ஆராய்வோம். முன்னர் கூறியபடி இம்மடம் ஆதியில் விஸ்வப்பிராமண மடாலயமாக இருந்து தற்காலம் கைமாறி, சங்கராச்சார்ய மடமாகி ஆருஷெயர்களின் குருஸ்தானமாக விளங்கி வருகின்றது. 'சங்கர' என்னும் பதம் கீழ் ஜாதியார் அல்லது இழிந்தோரைக் குறிப்பிடும் பதமாக வேதம் முதலிய சுருதிகள் குறிக்கின்றன. அங்ஙனமாயின் அது ஆருஷெயருக்கு பிற்காலத்தில் எவ்வாறு குருஸ்தானமாயிற்று என்னும் சங்கை பிறப்பது இயல்பன்றோ? ஆகையின் இம்முக்கிய

விஷயத்தை ஆதார பூர்வமாக சர்ச்சனை செய்வது இங்கு ஏற்புடையதாகும்.

மைசூர், சிருங்கேரி நகரத்தின்கண் பூர்வத்தில் துவஷ்டப் பிரம்ம வம்சத்தில், தேவகுரு விஸ்வரூபன் அம்ஸமாக விளங்கிய ஒரு குடும்பத்தில் ஒரு புத்திரன் ஜனனமாகி விஸ்வரூபன் என்று நாமம் சூட்டப்பெற்று சர்வ கலைகளிலும் வல்லவனாய் இரண்டாவது விஸ்வகர்மாவென விளங்கினான். எல்லோரும், அவரைக் குருவாகக் கொண்டு வணங்கினர். மடாதிபதியாகவும் செய்து இதோபதேசம் பெற்றார்கள். இவருக்குப்பின் இரண்டாவது பட்டத்து சுவாமிகளின் பெயர் ஸ்ரீ ஞானயோக விஸ்வரூபாச்சாரியார் எனப்படுவார். இந்த சுவாமிகள் தமது 90-ம் வயதில் ஒரு புத்திரனைப் பெற்றார். இப்புத்திரன் ஜனிப்பதற்குமுன் சுவாமிகள் சமாதி நிலையடையவே அப்புத்திரனை அவ்வம்சத்தினரும் ஏற்றுக்கொள்ளாது, சங்கர ஜாதியன் எனத் தோன்றுமாறு ‘சங்கரன்’ என இழி பெயரிட்டு அழைத்தனர். அச்சங்கரன், விவாகமின்றியும், தந்தையின் ஆச்சாரிய பீடத்திற்கு அருகமின்றியும் அலையலுற்றார். ஆயினும் அவர் ஓதாதுணர்ந்து சர்வ கலைகளிலும் தேர்ந்து ஒரு சித்த புருஷனாக பற்பல அற்புதங்களை நிகழ்த்தினார். ஆருஷேயர்களால் நிறைவேற்றப்பட்ட ஒரு சமாராதனையில் இவர் வெளியேற்றப்பட்டார். வெளியேறிய இவர் சமாராதனை அன்னம் சுன்னமாகவும், இலைகள் காகமாகவும், அப்பளங்கள் தவளைகளாகவும் மாறும்படி தமது இச்சா சக்தியால் செய்தார். பின்னர் சமாராதனைக்காரர்கள் இவரது பாதங்களில் வீழ்ந்து கேட்டுக்கொள்ள, அத்தின்பண்டங்களனைத்தும் முன்போலவே மாறுதல் பெற்றன. அன்றுமுதல் இவர் **சங்கராச்சார்ய சுவாமிகள்** என அழைக்கப்பட்டு அவர் தந்தையார் மடத்திலேயே பூஜிதைக்குரிய குருவாக அமர்த்தப்பெற்றார். இவர் பிரம்மச்சாரியான சந்நியாசியாகையால் இவருக்குப் புத்திரசந்தானம் இல்லாது

போயிற்று. தனது அந்தியகாலத்தில் தமக்குப்பின், ஒரு சிஷ்யனை மடாதிபதியாகத் தேர்ந்தெடுக்க எண்ணி, விஸ்வ பிராம்மணச் சிறுவன் ஒருவனை தாம் மறந்து ஆற்றங்கரையில் விடுத்த பாதக் குறடுகளை எடுத்துவர ஏவினார். அவன் குருவின் பாதரட்சையென மதியாது அவற்றைத் தனது பாதத்தில் தரித்துக்கொண்டு குருமுன் தோன்றினான். இவ்வாறு பலர் பரிட்சித்து அறியப்பட்டனர். பின்னர், ஷோரனூருக்கருகிலுள்ள காலடி கிராமத்தில் வதிந்த, ஆத்திரேய கோத்திரத்தில் சிவகுரு தீக்ஷிதருக்கும் ஆரியாம்பைக்கும் பிறந்த ஒரு ஆருஷேயச் சிறுவனை முன்போலவே தமது பாதக் குறடுகளைக் கொண்டுவர ஏவினார். அச்சிறுவன் அப்பாதக் குறடுகளை நறுமலர்கொண்டு அர்ச்சித்து சிரமேற்றாங்கி குருமுன் பணிவுடன் வைத்து வணங்கினான். இதனைக்கண்ட குருவான ஸ்ரீ சங்கராச்சாரியார் தமக்குப் பின் அவரைப் பட்டத்துக்கு வார்சாகச் செய்து நான்காவது மடாதிபதியாக்கினார். அன்று தொட்டு ஆதி விஸ்வப் பிராமண குரு பீடங்களில் ஒன்றான சிருங்கேரி மடம் ஆருஷேயப் பிராம்மணர்களின் குருஸ்தானமாயிற்று. அவ்வாறே இன்றும் விளங்கி வருகின்றது. இஃதிவ்வாறாக, ஆதி சங்கராச்சாரியார், சிவகுரு தீக்ஷிதருக்கும், ஆரியாம்பைக்கும் பிறந்தவரென சில நூல்களில் திரித்துக் கூறப்பட்டுள்ளது. ஆயினும் நான்காவது ஆச்சாரியராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரே உண்மையில் அவர்களது பிள்ளையாம். இப்பிள்ளை பட்டத்துக்கு வருங்கால், இவரது தந்தையார் உயிரோடு இருந்ததால் இவரைச் 'சங்கரன்' அதாவது சங்கரவகுப்பைச் சார்ந்த இழிந்தவரென அழைக்கப்படவேண்டிய காரணமில்லை. மூன்றாவது பட்டத்துக்கு வந்த ஆதிசங்கரரே தாம் பிறக்குமுன் தமது தந்தையார் இறந்த காரணத்தால் 'சங்கரன்' என்று அழைக்கப்பட்டு, பின்பு சங்கராச்சாரியார், பௌருஷேய ஆதிசங்கராச்சாரியார், ஜெகத்குரு எனக் கொண்டாடப்பட்டாரென்பதே பொருத்தமான கூற்றாகும்.

பௌருஷேய ஆதிசங்கராச்சாரியார் விஸ்வப் பிராம்மண பரம்பரையில் வந்தவர் என்பதற்கு ஆதாரங்கள் பலவுள. சாலிவாகன சகாப்தம் 1678-க்குச் சரியான தாது வருடம் சித்திரை மாதம் சுக்லபக்ஷம் துவிதியா குருவாரத்தில், விஜயநகரம் விஜயமராம ராஜா அவர்கள் முன்னிலையில் இச்சங்காராச்சாரியார் தோன்றினர். இவரை விஸ்வப் பிராம்மண ஆச்சாரியரும், சிதம்பரம் மடாதிபதியுமான கனுபர்த்திப பசவாச்சாரியார், வீராச்சாரியார் ஆகிய இருவர்களும் பரீட்சித்தறிந்தனர். அந்த விவாதத்தில் சங்கராச்சாரியார் தாம் துவஷ்ட்ட சந்ததியில் வந்தவரென நிரூபித்தார். அக்காலை பசவாச்சாரியார், "அஹோசங்கராச்சார்ய - த்வமேவருஷி சம்மந்த: தத்தர்ம சம்பந்தஸ்ய - ஜெகத்குரு ஆச்சார்ய அப்ரசஸ்த;" என வினவியதற்கு தாத்பரியமாவது: ஓசங்கராச்சாரியரே! நீர் ஆருஷேய சம்பந்தமானல் ஜெகத்குரு, ஆச்சாரியன் எனும் பட்டப்பெயர்கள் உமக்குத் தகாது என்று கூறினர். அதற்கு உத்தரமாக சங்கராச்சாரியார், "அஹமேவ ப்ரஹ்ம" சம்மந்த: ஜெகத்குரு வாக்கியப் பிரசித்தி:" என்றதால், நானே ஆதிப் பிராம்மண சம்மந்தமுடையவன். ஆதலாலே எனக்கு ஜெகத்குரு, ஆச்சாரியன் எனும் பட்டங்கள் உண்டு என்று விடையிறுத்தார். அதற்கு பசவாச்சாரிய ஸ்வாமிகள் பிரதியுத்தரமாக "அத்ர உபயவிசாரணே கர்த்தவ்யம் ஆச்சார்ய சங்கரோநாம, துவஷ்ட புத்ரோ நசம்பிய: ததாத்வஷ்ட்ட புத்ரஸ்ய ஜெகத்குருவாக்யப் பிரசித்தி; லோகே குலசமாதீக்ஷா விஸ்வகர்மேவப் பிராம்மண:" எனக் கூறினர். இதன் பொருள்: நாமிருவர்களும் விசச்ரணை செய்வதிலிருந்து நீர் துவஷ்ட புத்திரனுகிய சங்கராசாரியென சந்தேகமற விளங்குகின்றது. நீர் ஜெகத்குருவெனத் தகும்; விஸ்வகர்ம பிராம்மணன் ஆவீர் என்று ஒப்புக்கொண்டனர். ஆதி சங்கரர் மசூலிப்பட்டணத்துக்கு விஜயமாயிருந்தபோது, அவரை விஸ்வப் பிராம்மணர்கள்

வணங்க மறுத்ததுடன், ஜெகத்குரு என அழைத்துக் கொள்வதை ஆக்ஷேபித்தார்கள். அதற்கு சங்கராச்சாரியார் கூறியது இதுவாம்: "ஆச்சார்யோர் சங்கரோ நாம - துவஷ்டபுத்ர நாம்சய:, விப்ர குல குரோர்தீக்ஷா - விஸ்வ கர்மந்துப்ராம்மண:" அதாவது என்னுடைய பெயர் சங்கராச்சாரி; நான் துவஷ்ட்டபிராம்ம புத்திரன் என்பதில் சமுசயமில்லை; விப்ரர் முதலானவருக்கும் தீக்ஷாகுருவாக உள்ளவன்; விஸ்வகர்ம வம்சத்தைச் சேர்ந்த பிராமணன்; என்பது பொருளாம். இது சங்கர விஜயத்தில் கூறப்பட்டுள்ள சுலோகமாகும். இதையே 'மாங்கைப்பள்' எனும் நூலில்,

> "தனமறையோர் குலகுருவாச்சாரி, சங்கராச்சாரி
> கனதுவட்டா மகன் விசுவகன்மப் பிராம் மணனே,
> மனமையம் வேண்டாம்"

என வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது.

அல்லாமலும், மேற்குறித்த ஆதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள், துவஷ்ட விஸ்வகர்மப் பிராமணர் என்பதற்கு பல ஆதாரங்களைத் தேடுவது அநாவசியமாம். ஏனெனில் இவர் சிருங்கேரி மடாலயத்தைப் புதுப்பிக்குங்கால், சூரிய கிரணங்களால் பன்னிரண்டு மாதங்களையும், சரியான நாழிகையையும் அறிந்துகொள்ளுமாறு சூரிய கடிகாரமொன்றைச் சிருட்டித்துள்ளதால் இவர் கன்னுளர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மேலும், இவர் பட்டம் வகித்த காலத்திலும், இவருக்குப் பிந்திய நான்காவது சங்கராச்சாரியார் காலத்திலும், விஸ்வகர்மர்களின் ஆயுதங்களும், முக்கியமாக பொன் உருக்கும் அக்கினிப் பாத்திரமாகிய கும்மட்டியும் பூஜிக்கப்பட்டு பின்னர்நடராஜ விக்கிரமாக மாறினவென்றும் கூறப்படுவதில் உண்மை இருத்தல் அவசியமாம்.

மற்றொன்றும் கூறிமுடிப்போம். இந்நூலாசிரியரைப் போலவே, அவர் தந்தையார் குடந்தையில் பிறந்தவர். அந்நகரிலுள்ள மடத்தினின்றும் ஆருஷேய சங்கராச்சாரியார் யாத்திரையாக வெளிக் கிளம்பினர். வரும் மகாமகம் வரையில்குடந்தையில் தங்கிப் பின் யாத்திரைசெல்லுமாறு அவர் மக்களால் வேண்டப்பட்டார். பல சமூகத்தார்களும் அவருக்கு ஒவ்வொரு நாளும் பிக்ஷையளித்து உபசரித்தனர். அவ்வாறு விஸ்வகர்மப் பிராமணர்களும் செய்ய வேண்டுமென சுவாமிகள் விரும்பவே, நூலாசிரியரின் தந்தையார், அவர் தமது குல குருவல்லவே, அவரை வணங்குவதெப்படி எனக் கேட்டார். அவர் வாதம் சரியென்று ஒப்புக்கொண்ட ஸ்வாமிகள், தம்மை குருவென்று வணங்காவிட்டாலும் சந்நியாசி என்ற முறையில் பிக்ஷயளிக்குமாறு கேட்டுக் கொண்டார். யாதொரு வணக்கம், நமஸ்காராதிகள் இன்றியே பிக்ஷ விமரிசையாக அளிக்கப்பட்டதை சுவாமிகள் களிப்புடன் ஏற்றுக்கொண்டதுடன், விஸ்வப்பிராமணீகத்துக்கும் மதிப்புத் தந்தார். மற்றொரு சமயம் குடந்தையில் 1904-ம் ஆண்டு நடைபெற்ற விஸ்வப் பிராம்மண ஸோமயாகத்துக்கு அந்த சங்கராச்சாரிய சுவாமிகள் சம்மதிப் பத்திரமளித்து, விஸ்வகர்மப் பிராம்மண முயற்சிக்கு ஆக்கமளித்து உற்சாகப்படுத்தினர். அவர்பால் சிறிது துவேஷமும் காணப்படவில்லை. அவர் வேதமுணர்ந்த ஒருமகநீயரன்றோ !

---

## 18. விஸ்வகர்மப் பிராம்மணரும், அநுமக்கொடியும்

இந்நாட்டின் கண்ணுள்ள ஒவ்வொரு தேவாலயத்திலும் துவஜஸ்தம்பம் எனப்படும் கொடிமரம் நாட்டப்பட்டிருப்பதைக் காண்போம். உற்சவங்கள் ஆரம்பமாகுமுன்

இக்கொடிகள் முறைப்படி பூஜிக்கப்பட்டு அந்த ஸ்தம்பங்களின்மீது ஆரோகணிக்கப்படுகின்றன. உற்சவங்கள் முடிந்தபின் இக்கொடிகள் இறக்கப்படுவனவாம். பூர்வ மன்னர்கட்கும் பற்பல விருதுக்களைக்கொண்ட தனிக்கொடிகள் உண்டெனச் சரித்திரங்கள் பகரும். மும்மூர்த்திகளுக்கும் பற்பல விருதுக்களைப் பொறித்த கொடிகள் உண்டு. பரமசிவன் கொடியில் ரிஷப முகத்தையுடைய நந்திதேவரும், ஷண்முகன் கொடியில் குக்கிடம் எனப்படும் சேவலும் பொறிக்கப்பட்டுள்ளனவென்பது உலகப் பிரசித்தம். மீனக்கொடியோன் என பாண்டியன் அழைக்கப்பட்டானென புராணங்கள் கூறும். மன்மதனுக்கு மகரக்கொடியோன் என்ற சிறப்புப் பெயர் உண்டு. இவைபோலவே மேல் நாட்டு மன்னர்கள் ஒவ்வொருவருக்கும் பல விருதுக்களைக் கொண்ட தனிப்பட்ட கொடிகள் உண்டு. இன்று சுதந்திர இந்தியாவுக்கும் ஒரு தனிக்கொடி ஏற்பட்டுள்ளது. இக்கொடிகள் அவ்வக் கோட்டைகளுக்குமுன் நாட்டப்பெற்றும், யுத்தகளங்கட்கு எடுத்துச்செல்லப் படுவனவாம். இந்நாட்டில் மலிந்துள்ள பல ஜாதியினர் தங்கள் குல விருதுகளாகப் பலதிறப்பட்ட கொடிகளை உபயோகிக்கின்றனர். இவைகளனைத்தும் பிற்காலத்தில் அதாவது ஜாதி பாகுபாடு ஏற்பட்ட காலத்து உண்டான கற்பனைக்கொடிகளாம்.

அநாதி காலந்தொட்டே, விஶ்வகர்ம மரபினருக்கு குல விருதாக ஒருகொடி உண்டென்றும், அக்கொடியை ஆதி விஶ்வகர்மா தமது விருதுக்கொடியாக ஏற்றுக் கொண்டனரென்றும், அது விஶ்வகர்மர்கள் வாழ்ந்த காந்தக் கற் கோட்டைகளின்மீது பூர்வத்தில் நாட்டப்பட்டிருந்ததென்றும் இதிகாசப் புராணங்களால் பெறப்படுவதாம். பண்டு தொட்டே தங்கள் குலத்தினிடையே நாட்டாண்மை, நகராண்மை ஆகிய தலைமைப் பதவிகளை மிகச் சம்பிரதாயமாக ஸ்தாபித்தும், குலசம்பந்தமான சகலவிவகாரங்களையும் தாங்

களே பஞ்சாயத்தார் அல்லது நடுவர்கள் மூலம் தீர்த்தும் வந்த விஸ்வகர்ம மரபினர், விசாரணைபுரியும் மன்றங்களிலும், கிராமப் பொது ஆலமரங்கள்மீதும் தங்கள் குலவிருதான அநுமக்கொடியை நாட்டியே வந்தனர். இன்றும் ஆதி விஸ்வகர்மாவையும், அவரது சந்ததியார்களையும் அநுமக்கொடியோர் என இதிகாசங்கள் சிறப்பித்துக் கூறுகிற்கும். ஆயினும் 2-ம் அத்தியாயத்தின் இறுதியில் கூறியிருக்கும் விஸ்வகர்மாவின் சகள வடிவத்தை ரூபிகரிக்கும், "பஞ்வக்த்ரம் ஜடாபாரம் தசபஞ்சவிலோசனம்" எனும் தொடக்கத்தையுடைய கிருஷ்ணயஜுர்வேத ஸ்தோத்திரத்தில், ஸ்ரீசாட்சாத் விஸ்வகர்மா அநுமத்துவஜத்தை தாங்கியிருப்பதாக வர்ணிக்கப்படவில்லை. அநுமக்கொடி அவருக்கு உண்டென்றும் பிரஸ்தாபிக்கப்படவில்லை. அப்பிரபு அக்கமாலை, தாமரை மலர், நாகபாசம், சூலம், பிநாகம், வீணை, பாணம், சங்கு, சக்கரம் ஆகியவைகளை தமது கரத்தில் கொண்டிருப்பதாக அந்த சுலோகம் துதிப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. அவர் அநுமக்கொடியை உடையவராகவும், தாங்கி யிருப்பதாகவும் ஏன் கூறப்படவில்லையென்பது சிந்திக்கத்தக்கது. ஸ்ரீ விஸ்வகர்மாவுக்கு அநுமத்துவஜம் த்ரேதாயுகத்துக்கு முன்னும், பிரளய காலத்துக்குப் பின்னும் சித்தித்திருக்கவேண்டுமென்பது நிச்சயமாகப் பெறப்படுவதாம். சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்களுக்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார், தென்மதுரை முதற்சங்கம் முதலூழி இறுதிக்கண் அகத்தியத்தை முதல் நூலாக ஆராய்ந்துகொண்டதென்றும், இரண்டாம் ஊழிக் காலமாகிய திரேதாயுகத்தில் தொல்காப்பியத்தை இடைச்சங்கம் இலக்கியமாகக் கொண்டதாகவும் கூறியுள்ளார். மேலும், இப்போதுள்ள மதுரைமாநகரில் கடைச்சங்கம் இருந்ததாகக் கூறப்படுவதால் இராமாயண காலம் திரேதாயுகம் என்பது நன்கு புலனாகும். இராமாயண காலம் திரேதா யுகத்தின் மத்திய பாகம் என்பது

கீழ்க்கண்ட வால்மீக ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 41-ம் அத்தியாயம், 19-ம் சுலோகம்,

" தத்தோ ஹேமமயம் திவ்யம்-முக்தாமணி விபூஷிதம்
யுக்தம் கவாட பாண்ட்யானாம், கதாத்ரக்ஷ்யத வானரா :"

என்று கூறுவதால், பொன்மயமாகப் பிரகாசிப்பதும், முத்துக்கள் முதலிய நவமணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், பாண்டிய அரசர்களுக்கு உரிமையும் ராஜதானியுமாகிய அந்த கபாடபுரம் என்னும் மதுரைமாநகரை அநுமான் முதலிய வானர வீரர்கள் கண்டார்கள் என்பதால் உறுதிப் படுவதாம்.

அநுமான், அநுமந்தன், ஆஞ்சநேயன், சஞ்சீவிராயன், மாருதி, வாயுபுத்திரன் என்பன ஒருவரைக் குறிக்கும் பல பெயர்களாம். இந்த அநுமான் சாகா வரம்பெற்று பல யுகங்களிலும் சிரஞ்சீவியாக வதிந்திருந்தனரென்பது பல இதிகாச புராணங்களின் கூற்றாகும். ஆருஷேய ரிஷிகளில் முதன்மை பெற்றவர் வசிஷ்டர். அவருடைய காலத்திற்குப் பின் அவர் சந்ததியாக பசுவயிற்றில் கௌதமரிஷி பிறந்து அவரும் பிரம்மரிஷியானார் என சாஸ்திரங்கள் கூறும். இந்த கௌதமரின் சரிதையை முதற்கண் ஆராய்ந்தால், அநுமானைக் குறித்த வரலாறு தெள்ளிதின் விளங்கும்.

ஸ்காந்தம் நாகரகாண்டம், விஸ்வகர்மோபக்யானம் 11-வது அத்தியாயத்தில் :

" விஸ்வகர்மண கபித்வஞ்ப்ராப்திர் காம-எகாதசாத்யாய "

எனத் தொடரும் சுலோகங்களால், பூர்வம் திரேதா யுகத்தில் சில மகரிஷிகள், ஈஸ்வர குமாரனாகிய குமாரக்கடவுளை வணங்கி, தேவஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீ விஸ்வகர்மாவுக்கு அநுமத்துவனும் எக்காரணத்தால் பிராப்தியாயிற்று, என வினவினர். அதற்கு உத்தாரமாக ஸ்ரீகுமாரன் கீழ்க்கண்டவாறு கூறலானார். முற்காலத்தில் தவத்தால் பிரம்மரிஷியான கௌதமமுனிவர் என்றொருவர் இருந்தார். அவருக்கு

வி. 12

அகல்யை என்ற மனைவியுண்டு. அவர்கட்கு, அழகே உருத்திரண்டதன்ன அஞ்சனையென்ற ஒரு புத்திரி பிறந்தாள். அவளை வாயுதேவன் மணந்தான். அந்த வாயுபகவான் சமஸ்த பூதங்களினிடத்தும் இடைவிடாது சஞ்சரிப்பவனுதலால், அழகிய மனைவியை அடைந்தும், அவளைச் சுகிப்பதற்கியலாது, சிந்தை நொந்து தனது மனைவிக்கு புருஷனின் இச்சையுண்டாகாதவாறு ஒரு மந்திரத்தைச் செபிக்குமாறு உபதேசித்தான். அந்த உபதேசத்தைப் பெற்ற அஞ்சனு தேவி ஒரு ஆலமரத்து நிழலின் கீழிருந்து அம்மந்திரத்தை ஓதிக்கொண்டு தவம்புரியலானுள். அவளுக்கு வேண்டிய ஆகாராதிகளை வாயுபகவான் அப்போதைக்கப்போது கொடுத்துதவினுர். ஆகாரத்தை விரும்பி ஒருநாள் நிஷ்டை கலைந்து கண்விழித்தாள். அவளுக்கு எதிரில் மரத்தின் மீது சில வானரங்கள் கலவி செய்துகொண்டிருந்ததைக் கண்டு தானும் மையல் வலையில் சிக்கினுள். அவ்வேளை வாயுபகவான் ஆகாரத்துடன் வர, தன் மனைவின் முகம் என்றுமில்லாதவாறு அன்று மலர்ந்திருக்கக் கண்டு காமமுற்றவனுய் அவளைச் சுகித்துச்சென்றுன்.

வாயுதேவர் சுகிக்குங்கால் அஞ்சனுதேவிக்கு வானர போகமே நினைவிலிருந்தமையால், வானர முகமும், வாலுமுடைய ஒரு மகவு அவளது கர்ப்பத்தில் உருவாகியது. இந்த தர்மம் உலகிலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் பொதுவானதாம். இஃதிவ்வாருக, பரமசிவன் வான வீதியிற் சென்றதாகவும், குரங்குகளின் சேஷ்டைகளைக் கண்டு இந்திரிய ஸ்கலிதமாகி, அஞ்சனுதேவியின் கரத்தில் விழ அதை வாயுபகவான் அளித்த ஆகாரமெனக் கருதி உண்டாளென்றும், அதனுல் கர்ப்பமுண்டாயிற்றென்றும் சில புராணங்கள் கூறும். இக்கூற்று பொருத்தமற்றதும், பரசிவத்திற்கும், மகா தபசியும் பதிவிரதையுமான அஞ்சனு தேவிக்கும் தோஷம் கற்பிப்பதாகும். கர்ப்பத்திலிருந்த குழந்தை தேவமான ரீதியாக ஒன்பது நாழிகையளவில்

பிறக்கவேண்டியபடி பிறவாமல் தாய்க்கு மிக வேதனையைக் கொடுத்துக்கொண்டிருந்தது. வாயுபகவான் எதுவும் செய்யத் தோன்றாதவராய், மும்மூர்த்திகளையும் பிரார்த்தித்தார். அவர்கள் பிரசன்னமாகியும், அவ்வேதனையைத் தீர்த்து, அக்குழந்தையை வெளிப்படுத்த அவர்களால் இயலாதுபோயிற்று. இதில் ஏதோ தேவ இரகசியம் இருக்க வேண்டுமென எண்ணி, பிரபஞ்சத்தில் சகல ஜீவராசிகளின் கருக்களை வளர்த்துக் காக்கும் விஸ்வகர்மாவை தியானித்தார்கள். ஸ்ரீ விஸ்வகர்மா பிரசன்னமாகி, மூர்ச்சித்துக் கிடந்த அஞ்சனாதேவியை சஞ்சீவி மூலிகையால் மூர்ச்சை தெளிவித்து, கர்ப்பத்திலிருந்த சிசுவை நோக்கி ஏன் வெளி வர இன்னும் தாமதமெனக் கேட்டார்.

அதற்கு அச்சிசு பூர்வஞான மகிமையினாலும், தன் தாயின் தவவலிமையாலும் பிரதி யுத்தரம் கூறிற்று. அகில புவனங்களையும், அண்டபிண்ட சராசரங்களையும் படைத்துக் காக்கும் ஓ, விஸ்வகர்மப் பிரபுவே! உமக்கு நமஸ்காரம்! நான் என் மாதாவின் கருவறையில் நிர்வாணமாக இருக்கிறேன். அதனால் என்னைச் சுமந்துள்ள தாயின் யோனி வழியே நிர்வாணமாக வெளிவந்தால் நான் மிகுந்த பாதகனாவேன். ஆகையால் எனக்குப் பொன்னாலாகிய கௌபீனத்துடனும், பொற்பூணூல், குண்டலங்கள் கமண்டலத்துடனும் வெளிப்பட அநுக்கிரகம் செய்யும். மேலும், என்னுடல் மிகப் பருத்து பர்வதாகாரமாக இருப்பதால், என் தாய்க்கு வேதனை கொடாதபடி வெளிவர இவ்வுடலைச் சுருங்கச்செய்யும். இவ்வுபகாரம் தங்கள் ஒருவராலேதான் செய்யமுடியும். அப்படிச் செய்வீராயின், நான் அந்நன்றி மறவாது உமக்கு என்றென்றும் ஏவல் புரிந்து உமது துவஜத்தில் வீற்றிருப்பேன். இது சத்தியம் என்றான். இதைக் கேட்ட விஸ்வகர்மா சந்தோஷ சித்தராய், அஞ்சனை வயிற்றில் பிறப்பதால் ஆஞ்சநேயன் என்றும், சஞ்சீவி மூலிகையால்

மயக்கம் தெளிந்து பேசியதால் சஞ்சீவிராயன் என்றும் பெயர் பூண்டு, ருத்திராம்சம் பெற்று, நவவியாகரண பண்டிதனாகவும், சிரஞ்சீவியாக மரண பயமின்றியும் யுகாந்திரங்களாக வாழக்கடவாய் என்றும், ஆசீர்வதித்து மறைந்தருளினர். மாருதியும் பொற்கோவணம், பொற் குண்டலம், பூணூல், கமண்டலம் ஆகியவைகளைப் பூண்டவ ராய் கர்ப்பத்தினின்றும் வெளிவந்தார். தாயையும், தந்தை யையும் பிரதட்சணம் செய்து வணங்கி ஸ்ரீ விஸ்வகர்மா வுக்கு வாக்குதானம் அளித்தபடியே அவரது துவஜத்தில் ஆரோகணித்தார். இதுவே அநுமார், ஆஞ்சநேயர் விஸ்வ கர்மாவின் துவஜத்தில் இடங்கொண்டதற்குக் காரணமாம். இரு கூரிய கொம்புகள், நீண்டவால் ஆகியவற்றைக் கொண்ட ரிஷபத்தை நந்திதேவரென்றும். சகல வல்லமை யும், பாண்டியத்தியமும், சிரஞ்சீவியாகவும் கருதப்பட்டு வணங்கப்படுவதுபோல், குரங்கு முகமும், நீண்டவாலு முடைய அநுமானை அவ்வாறே தெய்வத்தன்மை பொருந்தியவரென்றும், பல்லூழிகாலம் சிரஞ்சீவியாக விருந்து, எவ்வித ஆயுதங்களாலும் மரண பயமின்றி அந்தந்தப் பிரளயங்களில் அதுவாகி நலிவடையாது இன்றும் லோக பூஜ்ஜிதராய் வாழ்ந்துவருகின்றார் என்பதும் ஆஸ்தி கர்களால் பெரிதும் நம்பப்படும் உண்மையாம்.

மேலே கூறிய வரலாறு ஸ்காந்தம் நாகரகாண்டம், விஸ்வகர்மோபாக்யானத்தில்,

"புராக்ருதயுகே`கேவி - த்ருஷயோ நியத : வ்ரதர :
பப்ரவா ஷண்முகம்வீர - மீஸ்வரஸ்வ ஸுதம்விபும்
தேவதேவத்வ மாசக்ஃவ - மஹதோ விஸ்வகர்மண :
கதிம் கபித்வஜம் ப்ராப்சம் - ஹநுமான் கேதனஹேதுஞ"

எனத்தொடங்கி,

"பேஜஸ்தே விஸ்வகர்த்தாரம்-ஸ்ருஷ்ட்டி ஸ்தீத்யந்தஸ் காரணம்
ஹநுமாநபி ஸந்துஷ்டோ - த்வஜா ரூடஸ்திதோபவத்

இசம்ஸர்வ மயாப்ரோக்தம் - ப்ருதவித்தமுமாபதே :
இதிவிஸ்வகர்மண **கபித்வஜம்** ப்ராப்திர் நாம ஏகாதசாத்யாய :"
என்று முடிவடைகிற - ஷை நாகரகாண்டம் 11-ம் அத்தியாயம், 39 சுலோகங்களால் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

சதுர்யுகங்களில் இரண்டாவதாகிய திரேதாயுக மத்தியில் நிகழ்ந்த இராமர்-இராவண யுத்தகாலத்தில், சிரஞ்சீவியும், மகா பராக்கிரமவானும், நவவியாகரண பண்டிதனுமான இந்த அநுமான், துஷ்ட நிக்கிர சிஷ்ட பரிபாலனம் செய்யான் வேண்டி ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒன்றாகத் தோன்றி இலங்காபதியான இராவணனை சங்காரம் செய்வதற்கு அளவுகடந்த பல உபகாரங்களைப் புரிந்து இராமதாஸனாக விளங்கியதாக இராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது. நாம் பிறக்கும்முன் விஸ்வகர்மாவுக்கு வாக்குதானம் தந்து, அவருக்குப் பணியாற்றும் ஏவலாளியாக அவரது துவஜத்தில் ஆரோகணித்த அந்த அநுமான், மீளவும் ஒரு நரனாகிய இராஜபுத்திரனுக்கு ஏவல் புரிய முன்வந்த தெங்ஙனமெனும் சங்கை அறிவாளிகளுக்கு உண்டாதல் இயல்பேயாம். ஸ்ரீராமர், உலகத்தையும், அண்டபிண்டங்களனைத்தையும் புரக்கவேண்டி ஸ்ரீ விஸ்வகர்மப் பிரபுவால் ஆதியில் படைக்கப்பட்ட மகாவிஷ்ணுவின் அவதாரமாவார். ஆகையின் மகாவிஷ்ணுவோ விஸ்வகர்ம அம்சத்தையே பெற்றவர் எனப் பெறப்படும். இதை " விஸ்வகர்ம மயோ விஷ்ணுர் - விஸ்வகர்மாப்ரஜாபதி :" என்னும் சுருதி வாக்கியத்தாலும் " ஸகஸ்ர சிர்ஷாபுருஷ : ஸகஸ்ராக்ஷ " எனத் தொடங்கும் புருஷ சூக்த வாக்கியங்களாலும், ஸ்ரீ விஸ்வகர்மாவும், அவரது காக்கும் தொழிலம்சத்தை மட்டும் கொண்டு பிறந்த விஷ்ணுவும் அபேதமுடையவர்களெனப் பெறப்படுவதாலும், ஸ்ரீ இராமர் மகாவிஷ்ணுவின் அவதாரம் எனப்படுவதாலும், அநுமான் அவரை விஸ்வகர்மாவாகவே பாவித்து கிரியாம்சையில் பல உபகாரங்களைச் செய்து தமது நன்றியை நிலைநாட்டின

ரென்ப. மேலும், சகளரூபம் கொண்டு பிரத்தியட்சமாகி அநுமப்பிறப்புக்குக் காரணகர்த்தராயிருந்த எல்லாம்வல்ல ஸ்ரீ விஸ்வகர்மப் பிரபுவுக்கு, திரிமூர்த்திகளால் செய்ய முடியாத காரியத்தை தமது இச்சா சக்தியால் நொடிப் போழ்தில் இயற்றிய பேராற்றல் படைத்த தேவதேவனுக்கு பிந்திய யுகத்தில், ஆஞ்சநேயரால் செய்யக்கூடிய உபகாரம் இதைவிட வேறெதுவும் இல்லை. ஆகையால் நரனுகிலும், விஸ்வகர்ம அம்ஸமாகிய விஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்றான ஸ்ரீ இராமபிரானுக்கு அநுமான் ஆஞ்சநேய ராகவிருந்து உபகாரமான பல ஏவல்களைப் பக்தி பூர்வமாகப் புரிந்ததில் ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை.

இராமாயணத்தில் மற்றொரு முக்கிய விஷயம் குறிப் பிடப்பட்டுள்ளது. கடலைத்தாண்டி இலங்கைக்குச் செல் வதற்கு நளவிஸ்வகர்மா என்பார் ஸ்ரீ இராமருக்காக ஒரு அணையைக் கட்டினரெனவும், அதற்கான ஐம்மலைகளை அநுமான் பெயர்த்துவந்து நளவிஸ்வகர்மாவிடம் கொடுக்க அவர் அவைகளை தமது இடது கரத்தால் வாங்கி அணைக் கட்டில் அமைத்தார் என்றும் கூறப்பட்டுள்ளது. இடது கரத்தால் வாங்கி மலைகளை நீரினுள் எறிந்தது அநு மானுக்கு எரிமூட்டியபடியால் இதனை ஸ்ரீ இராமரிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். ஸ்ரீ இராமர் நளவிஸ்வ கர்மாவிடம் இதைக் குறித்துப் பேச அணுகவே, பின்னவர் அவரை அஞ்சலி செய்ததை முன்னவர் ஆட்சேபித்து நீவிர் யாரிலும் பெரியோய்! ஆதலால் நான் உம்மை பிரதியஞ்சலி செய்கிறேன் ; தயைபுரிந்து நீவிர் அநுமான் தரும் மலைகளை இனி இருகரங்களால் வாங்குமெனக் கேட்டுக்கொண்டார். அவரும் அவ்வாறே செய்ய ஒப்புக்கொண்டார். பின்னர் நளவிஸ்வகர்மாவுக்கும் அநுமாருக்கும் நட்பு உண்டாயது. ஒருநாள் இருவரும் நீராடச் சென்றனர். நளவிஸ்வகர்மா தமது குண்டலங்களைக் கழற்றிக் கரையின் அருகிலிருந்த மரத்தின் அடியில் வைத்து மறந்தவர்போல் வீட்டுக்குவந்து

பின், அநுமானை அக்குண்டலங்களை எடுத்துவர ஏவினார். ஐம்மலைகளை அநாயாசமாய் வேருடன் பிடுங்கிவந்த அநுமானுக்கு அக்குண்டலங்களை அசைக்கமுடியாது போயிற்று. வெட்கிவந்த அநுமான் பூர்வஞான வாசனையால் நளவிஸ்வகர்மாவுக்கும், தான் பூர்வத்தில் சரண்புகுந்த ஆதிவிஸ்வகர்மாவுக்கும் யாதொரு பேதமும் இல்லையென்பதை உணர்ந்து மீளவும் தமது நன்றியை அறிவித்துக்கொண்டு வணங்கி வந்தனை செலுத்தினான் என்பது சரித்திரம். இதனால் இராமயண காலத்திலும் செய்நன்றி மறவாது, தமது உடன்படிக்கையை நளவிஸ்வகர்மாவிடம் அநுமான் புதுப்பித்துக்கொண்டானென்பது சந்தேகமறப் பெறப்படும்.

இதற்கு ஆதாரமாக ஒரு தனிப்பாடல் தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றது. அது பின்வருமாறு :

" உலகம் புரந்ததன்னால், ஊரும் கணக்கும் உன்னால்
கலகம் பிறந்ததுன்னால், கடவுளும் ஆயதன்னால்
ஓங்கி அநுமான் உதயகிரி பிடிங்கிவர
வாங்கி இடதுகையால் வைத்தவா, ஆபரணமனைத்தும் உன்னால்
அழகு மணித்தாலி உன்னால், கோபாணச் செங்கோல்
கொடுப்பதுன்னால் யாளி பரியேறி வரும் காளிவரம்பெற்ற
கண்ணாளா "

மேலே விளக்கிக் கூறியவாற்றால், ஸ்ரீ விஸ்வகர்மாவுக்கும், அவரது சந்ததியார்களாகிய விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கும் அநுமத்வஜம் அல்லது அநுமவிருது உண்டென்பது சந்தேகமறப் பெறப்படும். ஆந்திர உத்ர ராமாயணத்தில் இவ்விஷயம் பஞ்சமாஸ்வாசம் 130-ம் பத்தியத்தில் வெகு விமரிசையாகக் கூறப்பட்டுள்ளது. மேலும், இவ்வுண்மையைத் தமிழ் நூல்களும் எடுத்தியம்புகின்றன. உதாரணமாக, கம்பராமாயணம் உத்தரகாண்டம் அநுமப்

படலம் 38-வது செய்யுளில், விஸ்வகர்மா அநுமானுக்கு வரமளித்த விபரம் கூறுமிடத்து,

" தாதா வுரைக்குமென் பிரம - தண்டாற்றூனுஞ் சாவின்றி
மேதாவியுமா யொருநாளும் விளியாநாளு முறுகவென
நீதாயினர் வேராறுக்குமிவன் தேவர்படையாற்செருக்களத்தில்
வாதாமகன் சாவொழிகவென வானோர்தச்சன் வரங்கொடுத்தான்"

என, பின்வரும் இராம-இராவண யுத்தத்தைக் கருதியே "செருக்களத்தில் சாவொழிக" என முற்கூட்டியே விஸ்வகர்மாவால் வரமளிக்கப்பட்டதாகக் கூறியிருப்பதாலும், விஸ்வபுராணம், பஞ்சகிருத்திய காண்டம் 6-ம் செய்யுளில்,

" படைத்திடும் கோட்டையுள்ளே பதுமராகத்தின் மேடை
இடைக்கிடை யிரணியத்தால் இலங்கு கொத்தளமுண்டாக்கி
அடுக்கிய வகழிசூழ்ந்த வழகுள்ள சிகரிதோறும்
தொடுத்திடும் வானமுட்ட வனுமந்தத் துவஜநாட்டி "

என்று கூறப்படுவதாலும், விஸ்வகர்ம சந்ததியாரின் பிரபாவத்தைக் கூறும் மாந்தைப்பள்ளில்,

" தாமரை அலங்கலார் தெய்வப் பஞ்சப்ரம்ம
சந்ததிகளான மேலோர்
சந்ததம் புகலஞ்சுவேத பாராயணர்
தமிழ்க்குதவு முதல் வள்ளலார்
வார்கொண்ட சரசுவதி மந்திரம் புகலுமணி
வாயர் முன்னூன் மார்பினர்
மனமகிழு மேகவாகனர் அநுமவிருதுள்ள
மகிமையாரி ரதகாரர்
மாந்தை நகராதிபதி - யானவிச்சுவகன்ம
மகுடத் தியாகியார்மேல்
வண்டமிழிேனுழத்திப் பாட்டெனும்பண்
மகிழ்து நாம்புகல மன்னே "

எனப்படுவதாலும், விஸ்வகர்மப் பிரதாபமும், அநுமத் துவஜத்தின் உரிமையும், விஸ்வப்பிராமணர்களுக்கு இரத காரர் என்னும் மற்றொரு உயரிய பட்டப்பெயர் உண் டென்பதும், அச்சந்ததியார் வேதபாராயண பாரங்கதர்கள் எனவும் சந்தேகமற ஊன்றிக் கூறப்பட்டுள்ளது.

அல்லாமலும், சிங்கள நாட்டு சிலாசாசனம் ஒன்றில், அந்நாட்டு அரசரால் ஸ்ரீ தேவநாராயண ஆச்சாரியர்க்கு அநுமக்கொடியை விருதாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் அக்கொடியை மேற்குறித்தவரின் சந்ததி யார் கலியாண காலங்களிலும், அசுப காலங்களிலும் உப யோகித்து வருவதால் இலங்கையில், இராம - இராவண யுத்த பூமியிலும் விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கு அநுமக் கொடி பண்டுதொட்டே குலவிருதாக உண்டென்பது நனி விளங்கும்.

மேலே கூறியுள்ள விஸ்வகர்ம அநுமக்கொடியின் இலக்ஷணத்தை ஈங்கு ஆதாரங்களுடன் விளக்குதல் முறை யாம். அது படத்தில் காட்டியுள்ளவாறு சுதந்திர இந்திய மூவர்ணக் கொடிக்கு வேறுபட்ட முறையில் ஐவகைபட்டு அல்லது சுத்தமான பருத்தியால்நெசவு செய்த துணிகளால் இணைக்கப்பட்டு மத்தியில் அஞ்சலி செய்து நிற்பதுபோல் அநும உருவத்தைப்பொறித்தல்வேண்டும். 2-வது அத்தியா யத்தில் கூறியிருப்பதுபோல், "பஞ்சவக்த்ரம் ஜடாபாரம்" எனத் தொடங்கி "சர்வ ஜீவதயாபரம்" என முடிவடை கிற கிருஷ்ண யஜுர்வேத மந்திர ஸ்தோத்ரத்தில், மனு உதித்த சத்தியோஜாத முகம் வெள்ளை நிறமென்றும், மயனுதித்த வாமதேவ முகம் கருநீலமென்றும், துவஷ்ட்டா பிறந்த முகம் சிவப்பு நிறமென்றும், சிற்பியின் உற்பவ மான தத்புருஷ முகம் மஞ்சள் நிறமென்றும், விஸ்வக்ஞர் உதித்த ஈசானம் எனும் முகம் பச்சையென்றும் நிஷ்கரித்து விதிக்கப்பட்டிருப்பதால், அம்முறையை அநுசரித்து அலங் காரமாக இணைக்கப்பட்டுச் சித்தரித்த ஐவர்ண அநுமக்

கொடியே சாஸ்திரியமானதென்றும் அதுவே விஸ்வகர்ம ஜாதீயக்கொடியென்றும் போற்றிப் பின்பற்றத்தக்கதாகும். இதற்கு மேலும் ஆதாரமாக மூல ஸ்தம்ப நிர்ணயத்தில்,

" மனுஸ்படிக வர்ணஞ்ச
மயாணும் நீலவர்ணயோ :
த்வஷ்டருகம் தாம்பர வர்ண்ஞ்ச
ஸில்பிநும் தூம்ர வர்ணயோ :
விஸ்வகர்ம ஸுவர்ணஞ்ச
பஞ்ச சதாக்ய வர்ணயோ :
பஞ்சப்ரம் ஹயுதே ரூபம்
த்விதீயே ஜன்ம நிர்ணயம் "

எனவும், ஸ்காந்த புராணம், நாகரகாண்டம் த்ரீதியாத் யாயம் ஸ்லோகத்தில்,

" மனுஸ்படிக வர்ணஞ்ச
நீலவர்ணு மயாஸ்ததா
த்வஷ்டாச ரக்தவர்ணுஞ்ச
ஸில்பி தூம்ர வர்ணகம்
தக்ஷகோ ஹேம வர்ணஞ்ச
பஞ்சவர்ணு : ப்ரகீர்த்திதா :"

என்றும், சிற்ப பிரதிஷ்டா விதியில் விஸ்வகர்ம ஆதிரிஷி களின் வாஹனங்கள் அல்லது மூர்த்திகளின் வர்ணங்களைப் பற்றிச் சொல்லுகையில்,

" மனு விஸ்வகர்மன் ஸ்வேத
மேஹ வாஹனே "

" மயவிஸ்வகர்மன் க்ருஷ்ண
மேஹ வாஹனே "

" த்வஷ்ட விஸ்வகர்மன் ரக்த
மஹ வாஹனே "




சாஸ்திரீயமான
விஸ்வகர்ம சமூக
ஐவர்ண அருமக்கொடி

" ஶில்பி விஸ்வகர்மன் தூம்ர
மேஹ வாஹனே"

" விஸ்வக்ஞ விஸ்வகர்மன் புஷ்கர
மேஹ வாஹனே"

என்பனவற்றால், மனு, மய, துவஷ்ட்டா, ஶில்பி, விஸ்வக்ஞ ஆகியவர்கட்கு முறையே வெண்மை, கருநீலம், சிவப்பு, மஞ்சள், பச்சை ஆகிய ஐவர்ணங்களை உகந்தவையென சந்தேகமறப் பெறப்படுவதாம்.

இனி கொடியின் அமைப்பைக் குறித்துப் பேசுவோம்: முன்னர் கூறியபடி விஸ்வகர்ம ஐவர்ண அநுமக்கொடியை அமைப்பதில், ஐந்து வர்ணத் துணிகளையும், படத்தில் குறித்துள்ளவாறு, மத்தியில் வெள்ளைத் துணியையும் அநும உருவத்தையும் நாட்டி, நான்கு மூலைகளிலும், 'ஓம்' என்ற அட்சரம் வரைவதுபோல், நீலநிறத்தில் ஆரம்பித்து பச்சை வர்ணத்தில் வலப்புறம் முடிப்பது முறையாம். பொதுவாக இவ்விதக்கொடி—அழகிய கொடி-ஓவிய சிற்ப வல்லுநரான விஸ்வகர்மர்கட்குச் சாலப்பொருந்தியதொன்றாம். மேலும் விளக்கம் மிகையாம்.

மேலே காட்டிய சாஸ்திரிய வர்ண அமைப்பைவிட்டு, நெருப்பு சிவந்த நிறமாயிருப்பதால் அந்நிறம் மனுவைக் குறிக்குமென்றும், மரம் பச்சை வர்ணமாயிருப்பதால் அது மயனைக் குறிக்குமென்றும், கருநீல நிறமாக உலோகங்கள் களிம்போடு கூடியிருப்பதால் அந்நிறமே துவஷ்ட்டாவுக்குரியதென்றும், நிஷ்களங்கமும் வெள்ளையுள்ளம் படைத்த சில்பிகளுக்கு வெள்ளை நிறம் உகந்ததென்றும், மஞ்சள் நிறமான பசும்பொன் நிறம் விஸ்வக்ஞர்களுக்கு உரியதென்றும் சாஸ்திர சம்மதமின்றி யுக்திவாதமாக இந்நாள் சிலர் கூறியும், எழுதியும் வருவது எள்ளி நகையாடற்குரியதாம்.

———

# 19. சிலா தாம்பிர சாசனங்களும், நீதிமன்றத் தீர்ப்புக்களும்

முந்திய பல அத்தியாயங்களில் வேத இதிகாச புராண ஆதாரங்களைக்கொண்டு விஸ்வகர்மப் பிராம்மணீ கத்தின் தொன்மை நிலைநாட்டப்பெற்றுள்ளது. இனி அநுஷ்டானத்தில் அத்தொன்மை, பற்பல அரசர்கள் காலங்களில் அங்கிகரிக்கப்பட்டு, சிலா, தாம்பிர சாசனங் களாலும், வித்வஜன சம்மதிப் பத்திரங்களாலும், நீதி மன்றத் தீர்ப்புக்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதா வென்பதை ஈங்கு நோக்குவதே நமது சர்ச்சையாகும். ஏனெனில், ஒரு நாட்டின் நாகரிகமும், கலைவளர்ச்சியும் ஆங்குள்ள சிற்பங்களாலும், கல்வெட்டுக்களாலும் வேறு பல சாசனங்களாலும், சில அழியாச்சின்னங்களாலும், அறியப்படுவனவாம். அவைகள் இல்லையேல், எந்நாட்டு மக்களின் நாகரிகத்தையும் திட்டமாய் அளவிட்டறிவதற் கில்லை.

பௌருஷேயர்களான விஸ்வகர்மப் பிராம்மணர்கட்கும், பிற்காலத்தில் வசிஷ்டர்மூலம் உற்பத்தியான ஆருஷேயப் பார்ப்பனர்கட்கும் பல்லாயிரம் ஆண்டுகளாக பெரும் போராட்டங்கள் நிகழ்ந்தே வருவனவாம். அவற்றால் இரு சாராரும், ஒருவர் மற்றொருவரை வெளிப்படையாக வும், மறைமுகமாகவும் தாக்கியே வருகின்றனர். தங்களுக் குச் சாதகமான பல கல்வெட்டு, தாம்பிர சாசனங்களையும் புனைந்து சிருஷ்டித்துமுள்ளனர். அரசவைகளில் வித்வ ஜனங்கள் சபைகள் கூட்டப்பட்டு, இவ்விருவகைப் பிராம் மணர்களின் உயர்வு தாழ்வும், வேதயாகாதிகாரமும், மிக விரிவாகப் பரிசிலனை செய்யப்பட்டுச் சம்மதிப் பத்திரங்கள் கைச்சாத்துடனும், அரசாங்க முத்திரையுடனும் வழங்கப் பட்டிருக்கின்றன. சில ஊர்களில், ஆருஷேயப் பார்ப்பனப்

புரோகிதர்களால் வீண்விவாதங்கள் ஏற்பட்டு, நீதிமன்றங்களில் வழக்குகள் தொடுக்கப்பட்டு, விஸ்வகர்மப் பிராமணீகம் சந்தேகமற நிலைநாட்டப்பெற்றுள்ளது. ஒரு வழக்கிலாகிலும், ஆருஷேயப் பார்ப்பனர்கள் - வசிஷ்டாதி ரிஷிகளின் சந்ததியார்கள், தங்களை விஸ்வகர்மப் பௌருஷேயப் பிராம்மணர்களினும் பிறப்பினாலும், கர்மவிசேடத்தினாலும் உயர்ந்தவர்களென நிலைநாட்டக் கூடவில்லை. ஆருஷேயர்கள் வேதமுணர்ந்த பார்ப்பனர்கள் என்பதையும், அவர்களுக்குக் கீழ்ப்பட்ட மூன்று வருணத்தார்களினும் உயர்ந்தவர்களென்பதையும் பௌருஷேயர்கள் எக்காலத்தும் மறுத்ததில்லை. ஆயினும் ஆருஷேயப் பார்ப்பனர்கள் பௌருஷேயர்களினும், உயர்ந்தவர்கள் எனக் கூறிக்கொள்வதையும், அவர்கள் குருத்துவத்தை இவர்களிடமும் வற்புறுத்துவதையும், விஸ்வகர்மப் பிராம்மணர்கள் எக்காலத்திலும் ஒப்பினார்களில்லை. இவைகளே அவர்களுள் நிகழ்ந்த பல போராட்டங்களுக்குக் காரணமாம்.

பழையன கழிதலும், புதியன புகுதலும் இக்கால தர்மமாகும். ஜாதி வேற்றுமை மறைந்து, தீண்டாமை அறவே ஒழிந்து, அம்மக்கட்கு தேவாலயங்கள் திறந்துவிடப்படும் இந்நாள், குலசம்பிரதாயம் கைவிடப்பட்டு, கலப்பு மணங்களும், விதவா விவாகங்களும் தாண்டவம் புரியும் இவ்வேளை, விஸ்வகர்மப் பிராம்மணீகத்தை அளவுகடந்து வற்புறுத்த வேண்டுமென்பதும், நீதிமன்றங்களில் வழக்குகள் தொடுக்கப்பட வேண்டுமென்பதும் இந்நூலின் கருத்தல்ல. பட்சபாதமற்ற சரித்திரவல்லோர் நிலையினின்றும், விஸ்வப்பிராமணீகத்தைக் குறித்த ஆதாரங்களை சர்ச்சை செய்து, பௌருஷேயர்கள் தங்கள் பூர்வமேன்மையை - தங்கள் குல உத்கிருஷ்டத்தை - உள்ளபடியே உணர்ந்து, தங்கள் முன்னோர்களினும் எத்துணை தாழ்ந்திருக்கிறோம் என்பதைச் சிந்தித்து இழந்த உயரிய அந்நிலையை மீள அடையப்பெறவும், ஆருஷேயப் பார்ப்பனர்கள் தங்கள் விதண்டா

சாசனத்திலிருந்து கிறிஸ்து 1207-ம் வருடத்திலிருந்தும் விஸ்வகர்ம பிரம்ம வம்ஸத்தார்கள் ஆச்சார்யத்துவப் பிரசித்தர்களாய் பிரதிஷ்டா காலங்களில் அரசர்களால் க்ஷேத்திரமான்யம் முதலிய சன்மானங்களைப்பெற்று பூஜிதர்களாயிருந்து வந்தனரென்பதும் ஸ்பஷ்டமாகிறது. திருவிதாங்கூர் கோவில் வெளிமண்டபம் தெற்குப்புறம் மேலச்சுவரில் கொல்லம் ௫௦௨-ஆம் மாசி மாதம் ௪௨உ கலி வருஷம் 4508 இந்த செண்பகராமன் மண்டபம் செய்தேன் என்றும்,

ஷை கோவில் பஞ்சபாண்டவர் சந்நிதி வடக்கு வாசலுக்கு நேராக ஸ்ரீ கோவில் மதிலில் - கொல்லம் ௨௨௦ வது மீன ஞாயிறு இதில் கல்வெட்டிக்கொள்கவென்று திருவெழுத்து திருமுகப்படி எழுத்து வெட்டினேன். இவ்வூர் தச்சாச்சாரியன் சோமன் செல்வனை மூன்றூற்றுவ ஆச்சாரியன் எனவும், கரியமாணிக்கபுரம் கோவில் சுற்று மண்டபம் மேலச்சுவரில் கிழக்கு வசம் கொல்லம் ௪௮௦௨ இடவைகாசி மீ ௧௧உ பஞ்சமி கோட்டாறுன் மும்முடி சோழபுரத்திலிருக்கும் சிற்பாச்சாரியரில் தம்பிரான் தட்டி சிற்பப் புரந்தரன் எழுத்து என்றும்,

திருவட்டாறு ஸ்ரீ ஆதிகேசவப்பெருமான் கோவில் புறச்சுவரின் கிழக்கு வசத்திலும் வடக்கு வசத்திலும் கலி ஸ்ரீ ௪௬௫௫ ம் செல்லாநின்ற விருச்சிக சனி தனு வியாழம் கொல்லம் ௭௦௬ ஆனி மீ ௧௨ உ சனிக்கிழமை கல்வெட்டினேன். கிருஷ்ணன் ஆச்சாரி திருவட்டாறு உடையான் குட்டி சிந்தாமணி ஆச்சாரி, காத்தவன் சாறுவாங்க ஆச்சாரி, மயினூர் திருநீலகண்ட ஆச்சார்யன் என்றும்,

மேலும், திருவிதாங்கூர் மகாராஜா 200-300 வருடங்களுக்குமுன்பும், யோகியுள்ள விஸ்வகர்மர்களான தெய்வேந்திரியனுச்சாரி, அனந்தபத்மநாபன் ஆச்சாரி, மார்த்தாண்டனுச்சாரி, சிற்ப புரந்தரனுச்சார்யரென்று தாம்பிர சாசனத்தில் எழுதிக்கொடுத்தும், ஆடையாபரணங்கள்,

சங்கிலிவெட்டை, குடை முதலிய பரிசுகளும், சர்வமானிய மாக பூமிகளும், பல்லக்கும் கொடுத்தும், யானைமேலேற்றி அரண்மனை வாயிலிருந்து வாத்ய கோஷத்துடன் பட்டணப்பிரவேசம் செய்வித்ததாக வரையப்பட்டுள்ளது.

இலங்கை மன்னர்களால் விஸ்வகர்மப்பிராம்மணர்கட்கு கீர்த்திவாய்ந்த தாம்பிர சாசனங்கள் சிங்கள பாஷையில் வரைந்துகொடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் சிலவற்றை ஈங்குத் தருவோம்.

சிலோன் கீர்த்தி ஸ்ரீ ராஜசிம்ம அரசனால் இங்கிலீஷ் 1763ம் ஆண்டில், வடுவாவலவூர் விஜயவர்த்தன தேவசிம்ம மூலாச்சார்யரென்ற விஸ்வகர்மருக்கு அப்பெயரையும், ௨௦௨ அமுனம்வைசர், நிலாகா பூமியும் வெகுமதியாகக் கொடுக்கப்பட்டதென்றும்,

மேற்படி, அரசரால் சிற்பாச்சார்யர் ஒருவருக்கு 'ராஜகருண தேவகேந்திர மதுவிர விக்கிரம' என்னும் பட்டமும், சவ்தனிய அலங்கார புஸ்தகமும் பரிசாகக் கொடுக்கப்பட்டதென்றும்,

விக்கிரம பாஹுவென்ற அரசருக்கு பண்டித நிலே ஆச்சாரியாரானவர் பட்டாபிஷேகம் செய்துவைத்தார். அந்த ஆச்சாரியரின் பெண் குழந்தைக்கு 'பஞ்சாநதஹாமி' என்ற பட்டப்பெயரும், அவர் மாதாவுக்கு 'விஜயவர்த்தன' வென்ற பட்டமும், ஒரு பென்யானையும், கட்டிலும், பென்னடிமையும், போபத்ஹோட் என்ற அரசாங்க உடுப்பும் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்றும்,

1379ம் ஆண்டில் பண்டித பராக்கிரமபாகு அரசர் இந்தியாவிலிருந்து புலவத்புத்திரா வென்னும் வெகு கியாதியுடைய ஆச்சாரியரை அழைத்துவந்து மன்னேகவாரா என்ற ஆலயத்தைக் கட்டினார். அதற்காக அவ்வரசர், 'முதுகல ராஜகருணா திவிரவர்த்தன விஸ்வ கர்த்தாச்சார்யர்' என்ற பட்டப்பெயரும், பஞ்சிகாலு என்ற ஒரு பெண்

யானையும், நான்கு அடிமைகளையும், காரலாவென்ற கோட்டையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்றும்,

1644ம் ஆண்டில் இரண்டாவது ராஜசிம்ம அரசர், கீர்த்தி பெற்ற தேவசிம்ம மூலாச்சாரியரை இந்தியாவி லிருந்து தருவிப்பதற்கு வடுமூலாச்சாரி யென்பாரையும் ஒரு யானையையும் அனுப்பினர். அவர் சிங்கள நாட்டுக்கு வந்து, அந்த அரசனுக்கு பல ஆலய கட்டிடங்களை நிர் மாணித்துக் கொடுத்ததுடன் தூரதிருஷ்டிக் கண்ணாடியும், மணி பார்க்கும் கண்ணாடியும் செய்து கொடுத்து அரசனை சந்தோஷிப்பித்தார். அரசர் 'மண்டல வல்லி' என்னும் பட்டப்பெயரையும், மங்கல நாமா என்னும் கிராமத்தையும் பரிசாக வழங்கினர். இப்பொழுதும் அக்கிராமம் ஷி ஆச்சார்ய பரம்பரையிலேயே இருந்து வருகின்றதென்பது குறிப்பிடத் தகுந்தது.

மற்றும், ஒரு சிங்கள அரசருக்கு ஹலம்ஹெரா மூஹைநூர், ராஜபாக்ஷபஹோதர சிதராம ஹேறாதல என் னும் விஸ்வகர்ம சிற்ப சிரேஷ்டர் ஒரு ராஜக்கிரகம் செய்து கொடுத்தார். அதில் ஒரு விசேஷம் இருப்பதாகவும், அது, கூர்மம் பூமியைத் தாங்கி இருப்பதுபோல் அந்த கிரகம் ஒரு வெண்மையான பெரிய ஆமைமேல் அமைந்திருப்ப தாகக் கூறினர். அதை பரீக்ஷித்தறியும்போது ஒரு பிரம் மாண்டமான வெள்ளை ஆமை பூமியினின்றும் வெளிவந்து அந்த இடத்தை மூன்று பிரதட்சணம் செய்து மீண்டும் பூமிக்குள் மறைந்தது. இந்த ஆச்சரியத்தைப் பார்த்த அர சன் சிற்பாச்சாரியருக்கு ஒரு யானையும்,மகுடமும் வெகுமதி யாகக் கொடுத்தார் என்று மற்றெலியில் ஹூலம் கோவு காவிலுள்ள சிலாசாசனத்தில் வரையப் பட்டுள்ளது. எனவே, சிங்கள நாட்டிலும் சிங்கள அரசர்கள் வேறு பாடின்றி தென்நாட்டிலுள்ள சிற்பாச்சாரியர்களை வெகு பூஜிதையாக நடத்தினர்களென்பது மேலே காட்டிய சாச னங்களிலிருந்து நன்கு விளங்கும்.

சோழநாட்டிலும் பல சிலாசாசனங்கள் உண்டு. அவைகளுள் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது, தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் ஆலயத்திலுள்ள கல்வெட்டு சாசனங்களாம். இக்கோவிலின் வடக்கு வெளி மதிலில் ராஜ ராஜ சோழனும், அவனுக்குப் பின் அரசாண்ட சோழமன்னர்களாலும் இக்கல்வெட்டுக்கள் அப்போதைக் கப்போதைய நிகழ்ச்சிகளையும், முக்கிய அரசியல் காரியங்களையும் விளக்குவனவாய் வெட்டப்பட்டுள்ளன. இவைகளை ஒருங்கு சேர்த்து அரசியல் வெட்டெழுத்துப் பரிசோதகராயிருந்த டாக்டர் ஹூல்ஸ் என்பார் 1895ம் ஆண்டில் சென்னை கவர்ன்மெண்டார் சார்பில் புத்தகரூபமாக அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். இன்னும் பல தேவாலயங்களிலுள்ள கல்வெட்டுக்களையும் ஆராய்ந்துள்ளார்.

பிரஸ்தாப கல்வெட்டில், ராஜ ராஜ சோழன் 19ம் வருட ஆட்சி காலத்தில் ஷெ ஆலயத்தின் பங்கனைக்காரர்களையும், மானியம் கொடுக்கப்பட்டவர்களையும் கூறுமிடத்து 'தச்சாவாயனுக்கு சில மானியங்கள் விடப்பட்டுள்ளன.

அதே புத்தகம் 306-ம் பக்கத்தில் விஜயராஜேந்திர ஆச்சாரியருக்கும் மான்யாதிகள் வழங்கப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

பன்னிரண்டாவது நூற்றாண்டில், திருச்சிராப்பள்ளிக்குச் சமீபத்திலுள்ள உய்யக்கொண்டான் திருமலை தேவஸ்தான கோபுரத்தின் கிழக்கு, வடக்குச் சுவர்களில், சுங்கம் தவிர்த்த குலோத்துங்கச் சோழனால், சதுர்வேதி மங்கலத்தில் கூடிய பட்டர்களின் பரீட்சத்தின் முடிவு, சாசனமாக வெட்டப்பட்டுள்ளது. அது கூறுவதாவது: "கம்மாளர்கள் ரதகாரர்கள் வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் உபநயன சமஸ்காரத்திற்கும், பிரமோப தேசத்திற்கும் உரியவர்கள். இவர்கட்கு சிற்பம், வாகனவேலை, விக்ரநிர்மாணம், கோவில், கோபுரங் கட்டுதல், கும்பாபிஷேகம் செய்தல், விக்ரகங்களுக்குக் கண் திறத்தல், யாக குண்டங்கள், பாத்

திரங்கள் செய்தல், கிரீடம் ஆபரணங்கள் செய்தல் முத
லிய பிறவுமாம்.'' அக்காலத்தில் விஸ்வப்பிராம்மணர்கட்
கும், பார்ப்பனர்கட்கும் ஏற்பட்ட விவாதத்தின் விளைவாக
இக்கல்வெட்டு தோன்றியதாகும்.

இச்சாஸனங்களிலுள்ள விசேடம் யாதெனில் 'தச்சாச்
சார்ய' என்றும் 'விஜய ராஜேந்திர ஆச்சாரியார்' என்ற
பதங்கள், கிரந்தவடியில் எழுவிதமான 'சா'க்கள் இருந்தும்
சா (ச்சா) என்ற எழுத்தையே உபயோகப் படுத்தப்பட்டு
விஸ்வப்பிராம்மணர்களின் சிறப்பும், ஆச்சார்யத்துவமும்
ஸ்பஷ்டமாக்கப்பட்டுள்ளது. இவ்வழக்கப்பாடு சென்ற
சுமார் 1500 வருடங்களுக்கு முன்னரே இருந்ததென்றால்,
பௌருஷேய விஸ்வப்பிராம்மணரின் தொன்மையைக்
குறித்து ஏனோ சந்தேகமும், சச்சரவும் வேண்டும்? ஆரு
ஷேயர்களுக்கு ஆதாரமாக ஏதேனும் ஒரு சாசனத்
தைக் காட்டக்கூடுமோவென்பது அறிவாளிகளால் ஆரா
யத்தக்கது.

இனி சம்மதிப் பத்திரங்களைப் பரிசீலனை செய்வோம்.

விஜயநகர சமஸ்தானத்தின் ஆஸ்தான வித்வத்ஜன
சம்மதிப்பத்திரம்.

கிறிஸ்து ௵ 1756-க்கு தாது ஸ்ரீ வைகாசசுக்லபக்ஷ
துதியை குருவாரத்தில் ஸ்ரீ விஜயநகர ராம ராஜ மஹா
ராஜா அவர்கள் சபையில், வேத சாஸ்திர சம்பந்நர்களாக
ஸ்ரீ சதுபர்த்தி பசவாச்சாரியாருக்கும் 49 ஆருஷேய பார்ப்
பன பண்டிதர்கட்கும் 'இரதகார' சப்தத்தைக் குறித்து
நடைபெற்ற விவாதத்தில், அந்த 49 ஆஸ்தான வித்வான்கள்
தோல்வியுற்று, அவர்கள் முன்னரே ஒப்புக்கொண்டது
போல், வெற்றி பெற்ற ஸ்ரீபசவாச்சாரி சுவாமிகளை பல்லக்
கில் சுமந்து நகரப்பிரதட்சணம் செய்வித்தார்கள். இந்த
விவாதத்தில் இரதகாரர்களுக்கு பிராம்மணத்துவம் சந்தேக
மறஸ்தாபிதம் ஆயிற்று என 49 ஆஸ்தான வித்வான்களும்
கைச்சாத்திட்டு சம்மதிப்பத்திரம் வழங்கியுள்ளனர். ஏனைய

விவரங்களை இரதகாராதிகரணம் என்னும் தெலுங்கு நூலில் மிக விரிவாகக் காணலாம்.

ஸ்ரீமத் சிருங்கேரி சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் சம்மதிப்பத்திரம்.

சகாப்தம் 1673 பிரஜோற்பத்தி ஸ்ரீ சைத்ர சுத்த துதிகையில் கோல்ஹாபூர் லக்ஷ்மணாச்சார்ய வகையராக்களுக்கு ஸ்ரீ வித்தியாசங்கரபாரதி ஸ்வாமிகளாலும்,

1682 விக்கிரம சிராவண கிருஷ்ண நவமி புதவாரம் ஷோலாப்பூர் ஜில்லா, வராண்டா விஸ்வப்பிராம்மண மகா ஜனங்களுக்கு யாகாதிகாரம் உண்டென ஸ்ரீவித்யா நரசிம்ம பாரதி ஸ்வாமிகளாலும்,

1709 ஸ்ரீபிலவங்க ஜேஷ்ட கிருஷ்ண பஞ்சம் பௌம வாரம் பம்பாய் மகா ஜனங்களான விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கு அவர்களது உத்கிருஷ்டமான பிறப்பையும் பிரம சந்ததியென ஒப்பியும் ஸ்ரீமத் வித்யாரண்ய பாரதி ஸ்வாமிகளாலும்,

1745 சுபானுஸ்ரீ கிருஷ்ண துவாதசியில் வராடஸபாபதி ஆச்சார்ய வகையராக்களுக்கு வேதாதிகாரமும், பிரம்ம சிருஷ்டியும் உண்டென்று ஒப்பி ஸ்ரீமத் பாலகிருஷ்ண பாரதி சுவாமிகளாலும்,

1750 சர்வதாரி ஸ்ரீ வைகாச சுத்த அஷ்டமி மங்கள வாரம் ஷோலாப்பூர் ஜில்லா வைராக விஸ்வகர்ம மகா ஜனங்களுக்கு பாஞ்சால சுவர்ணகாரர்கள் என்றும், விஸ்வகர்ம முகோற்பவர்களான விஸ்வகர்ம சந்ததியார்களென்றும், ஆச்சார்யரென்றும், ஆதிப்பிராம்மணர்களென்றும், வேதோக்த வைதீக கர்மாதிகார முடையவர்களென்றும், சிற்ப வித்யா பிரவீணர்களென்றும், அவர்கள் உயர்வு. அநேக சுருதி ஸ்மிருதி மீமாம்ச புராண இதிகாசங்களால் அறியப்படுகின்றனவென்றும், ஸ்ரீமத் பாலகிருஷ்ண பாரதி ஸ்வாமிகள் கரவாது ஸ்ரீமுக சம்மதிப்பத்திரம் ஆதீன முத்திரையுடனும் கைச்சாத்துடனும் அளித்துள்ளார்.

மேலும், சகாப்தம் 1678 தாது ஸ்ரீ சைத்திர சுக்கில அதிகை குருவாரம் விஜயநகரம் விஜயராம மகாராஜா அவர்கள் முன்னிலையில், ஸ்ரீமத் சங்கராச்சாரிய ஸ்ரீசங்கர பாரதி ஸ்வாமிகளாலும், பேரூர் விப்பிர அக்கினி ஹோத் திரிகள், தீக்ஷிதர்கள், கனபாடி, சாஸ்திரிகள் முதலிய வித் வத் ஜனங்களாலும், டி. சிருங்கேரி மடாலய தர்மகர்த்தா ஸ்ரீராம சாஸ்திரிகளாலும். ஸ்ரீ காசி க்ஷேத்திர சுவாமி சாஸ்திரிவகையராக்களாலும், பிரதிஷ்டா க்ஷேத்திர வேத சாஸ்திர பாரங்கத வித்வத் ஜனங்களாலும், பிருந்தாவன அக்கினி ஹோத்திரி, தீக்ஷிதர் முதலிய பண்டிதர்களாலும், ராஜமகேந்திரம் அக்னி ஹோத்திரி வியாகரண பண்டிதர் களாலும் விஸ்வகர்மர்கள் சாட்சாத் ப்ரமவித்துக்களான ப்ராம்மணர்களென்றும் வேத யாகாதிகாரமுடையவர்க ளென்றும், துவிஜோத்தமர்களென்றும், வேத இதிகாச புராண ஆதாரங்களுடன் சம்மதிப் பத்திரங்கள் வழங்கி யுள்ளனர்.

இன்னும் காசி க்ஷேத்திரத்தின் பண்டிதர்களால் சாலி வாகன சகாப்தம் 1686 புரட்டாசி விஜயதசமி யன்று ஸ்ரீ சங்கர பட்டரின் புத்திரரான ஸ்ரீ ஸியாமபட்டரவர்களால் இதர பண்டிதர்களின் சார்பாகக் கொடுத்த சம்மதிப்பத் திரம் :

காசி க்ஷேத்திரத்தில் கொங்கணத் தக்ஷிண தேசத்தி லுள்ள விஸ்வகர்ம ப்ரம்ம வம்சஸ்த்தர்களாய் தெய்வஞ்ஞ நாமத்தோடு விளங்கும் சில்ப சிரேஷ்டர்களின் பிண்ட தானவிஷயத்தில் கேள்வி யெழுந்தபோது "க்ருஹ்யபாஹாத் ஸமுத்ருத்ய, சருணா பாயஸேந வா, பிண்டதானம் ப்ரகுர் வீத த்வாஷ்ட்ர சார்த்தே க்ருதே ஸதி" என்ற பவிஷ்ய புராணோக்தத்தால் (சரு, பாயசம், பிண்டம்) பிண்டதானம் அந்த சாஸ்திரப்படியே செய்யவேண்டுமென்று நிர்த்தார ணம் செய்து கோபிநாத பட்டர் முதல், சிவராம பட்ட பாவயே சுருக 26 வித்வான்கள் கைச்சாத்திட்டு சம்மதிப்

பத்திரம் கொடுத்து விஸ்வகர்மப் பிராம்மணர்களைச் சிறப்பித்துள்ளார்கள். இனி விரிக்கிற் பெருகுமென்றஞ்சி சம்மதிப்பத்திர ஆதாரங்களை இத்துடன் விடுக்கலாயிற்று.

இனி பல நீதிமன்றத் தீர்ப்புக்களை நோக்குவோம். இவைகளில் கீழ்க்கண்டவைகளே முக்கியமானவைகளாம்.

சித்தூர் ஜில்லா அதாலத்துக் கோர்ட் தீர்ப்பு :

கிறிஸ்து ஸ்ரீ 1814 தேதி இந்த வியாஜ்ஜியம் பண்டித மார்க்க சகாய ஆச்சாரியார் உள்ளிட்ட ஒன்பது வாதிகளால், பஞ்சாங்க குண்டையன் முதல் ஆறுபிரதிவாதிகள் மீது தொடுக்கப்பட்டதாகும். வாதிகள் பௌரோகிதத்துக்கு அருகரல்லவென்பது பிரதிவாதிகளின் ஆட்சேபணை, பிரியாது நீ- 254, 207 - 181-7 விசாரிக்கப்பட்டு விஸ்வப் பிராமணர்கள் வேதாதிகாரங்களுக்கு அக்குடையவர்களாதலால் அவர்கள் தாங்களே புரோகிதம் செய்து கொள்வதை பிரதிவாதிகள் தடுத்தது பிசகு என்று முதல் கோர்ட்டிலும் அப்பீலிலும் தீர்மானிக்கப்பட்டு எதிரிகள் சிட்சிக்கப்பட்டார்கள்.

சேலம் ஜில்லா தீர்ப்பு :

1843 ஸ்ரீ சேலம் சிவில் ஜட்ஜ் ஜெ. ஜி. எஸ். புருக்கர் முன்னிலையில் நடைபெற்ற இந்த வழக்கில் வாதி இராமலிங்க ஆச்சாரியார், சுப்பராயன் முதல் ராம சாமி படையாச்சிவரை 8 பிரதிவாதிகள் புடைத்து பூணூலையும் அறுத்துவிட்ட குற்றத்திற்காக அபராதம் விதித்து மானநஷ்டத்திற்கு சிவில் கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடர அனுமதிக்கப்பட்டார். சதர்மீன் கோர்ட்டில் தொடுக்கப்பட்ட இந்த வியாஜ்ஜியத்தில் எதிரிகளுக்கு மானநஷ்ட ஈடாக ரூ. 20 அபராதமும், வேதாதிகாரப் பிராயசித்தம் செய்து கொள்வதற்கு ரூ 64ம், கீழ்க்கோர்ட்டு செலவு ரூ 136-6-0 ஆக ரூ 200-6-0 வாதிக்கு பிரதிவாதிகள் கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

### வேலூர் தீர்ப்பு:

இந்த விவாதம் வாதி வெங்கிட சுப்பாச்சாரியார் என்னும் விஸ்வப்பிராம்மண புரோகிதருக்கும் பிரதிவாதி பஞ்சாங்க கிருஷ்ணமாச்சாரிக்கும், ஒரு திவசத்தை நடத்துவதில் எழுந்த ஆட்சேபணையால் விளைந்ததாகும். 1938-ம் ஆண்டு ஜூன் மீ 5 இந்த கேஸை விசாரித்த மாஜிஸ்ரேட் பௌவர் டிலன் என்பார் பிரதிவாதிகளுக்கு ரூ 20. அபராதம் விதித்ததுடன் வாதி செய்யும் வைதிகக்காரியங்களில் பிரதிவாதிகள் இனி பிரவேசிக்கக் கூடாதென உத்திர விட்டார்.

### சென்னை ஹைகோர்ட் கிரிமினல் தீர்ப்பு:

சென்னை ஹைகோர்ட் 1885 ஞு 78வது நீ காலண்டர் கேஸில், நெம்பர் 421, 422ல் விஸ்வப்பிராம்மணர்கள், எந்த கோவிலின் கெர்ப்பக்கிரகத்துக்குள் சென்று ருத்ராபிஷேகம் செய்வதற்கும், பூஜிப்பதற்கும் அக்குண்டென்று தீர்மானிக்கப்பட்டது.

### மசூலிப்பட்டணம் அபிஷேகத் தீர்ப்பு:

1894 ஞு மே மீ நடைபெற்ற இக்கோயில் சிவகோடி வீரபத்ரன் எனும் விஸ்வப்பிராம்மணன், மஹா சிவராத்திரியில் காசி விஸ்வேஸ்வரர் தேவாலயத்தில் பிரவேசித்து, இலிங்காபிஷேகம் செய்ததால் இலிங்கம் பரிசுத்தமிழந்தது என்ற வாதம் ஏற்கபடாமல் 258-ம் செக்ஷன் பிரகாரம் தள்ளுபடி செய்யப்பட்டது.

இதுபோன்ற இன்னும் பல்வேறு தீர்ப்புக்கள் உள்ளன. அவைகளின் குறிப்பை மட்டும் ஈங்குத் தருவோம்

1840ஞு சேலம் கோர்ட்டு நெ. 1862 தீர்ப்பு.
1856ஞு திருச்சிராப்பள்ளி கோர்ட்டு தீர்ப்பு
1857ஞு சேலம் ஆதாலத்துக் கோர்ட்டு தீர்ப்பு நெ. 141.

1891ஞ கோயமுத்தூர் ஜில்லா சத்தியமங்கலம் டிஸ்டிரிக்ட். முன்சீப் கொடுத்துள்ள தீர்ப்பு.

1891ஞ ஸி. ஸி. நெ. 394 கொள்ளேகாலம் முதல்வகுப்பு மாஜிஸ்ட்ரேட் அளித்த தீர்ப்பு.

1893 டிசம்பர் 7உ ஆனரபிள் ஜஸ்டிஸ். தி. முத்துசுவாமி அய்யர் அவர்களுடைய தீர்ப்பு.

1866ஞ நவம்பர் 12உ கிருஷ்ணா ஜில்லா டிஸ்டிரிக்ட் முன்சீப் அவர்கள் தீர்ப்பு.

1866ஞ ஸி. ஸி. நெ. 220, பெஜவாடா டிஸ்ட்ரிக்ட் முன்சீப் அவர்களின் தீர்ப்பு.

1881ஞ சித்தல் துர்க்கத்தில் பாலாஜி மிருகாச்சாரியார் தர்க்காஸ்து நில சம்பந்தமாக டெப்யூட்டி கமிஷனர் அப்துல்காதர் சாகேப் பகதூர் அவர்கள் கொடுத்துள்ள தீர்ப்பு.

1885 விசாகப்பட்டணம் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் டர்னர் துரையால் கேஸ் நெ. 78-ல் கொடுக்கப்பட்ட தீர்ப்பு.

1984ஞ ஸி. ஸி. நெ. 521-ல் கிருஷ்ணா ஜில்லா டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் என். அட்கின்ஸன் துரையின் தீர்ப்பு.

1894—1895 ஸி. ஸி. நெ. 17-ல் மைசூர் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் அளித்துள்ள தீர்ப்பு.

1928ஞ கிரிமினல் கேஸ் நெ. 120/2 டில்லி நகர் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீ ஆர். எஸ். எல். கோபாலதாஸ் பீ.ஏ., அவர்களால், வடநாட்டு ஜாங்கிடா பிராமணர்களை நிந்தித்ததற்கு சிட்சை விதிக்கப்பட்டுள்ள தீர்ப்பு.

விஸ்வகர்மப் பிராம்மணர்களின் வேதாதிகாரத்தையும், பிராமணீகத்தையும் நிலை நாட்டுவதற்கு மேற்குறித்த பல முக்கிய தீர்ப்புக்கள் போதியனவாமெனக் கருதி மற்றைய பல தீர்ப்புக்கள் விட்டுவிடப்பட்டன.

இனி மேலைநாட்டுப் பிரபல பண்டிதர்களின் அபிப்பிராயங்களைக் கூறுவோம். டாக்டர் வின்ஸ்லோ எழுதியுள்ள ஆங்கில அகராதியில் விஸ்வகர்மரை 'ஜெகத்குரு' என்று கூறியுள்ளார்.

ரெவரண்டு ஜே. இ. பாட்பீல்டு என்பார் கிறிஸ்டியன் காலேஜ் மாகஸீன் 3-வது வால்யூம், 284-ம் பக்கத்தில் "யக்ஞோபவிதம்" என்ற தலைப்பின்கீழ் தங்கம், மரம், இரும்பு, கல் முதலிய தொழில்களைச் செய்கிறவர்களுக்கு வேத அருகதை யுண்டென்று நிரூபித்துள்ளார். டாக்டர் ஏ. ஸி. பர்னல்துரை 'மூலஸ்தம்ப நிர்ணயம்' என்ற நூலைப் பற்றி எழுதியிருப்பதில் விஸ்வகர்மர்களுக்கு பிராம்மணத்து வம் அநாதிகாலமாக உண்டென்றும், வேதங்கள் ஐந்து உண்டென்றும் ஆராய்ச்சியால் கூறியுள்ளார்.

காட்வால்டர் வாடியெனும் பாரிஸ்டர், விஸ்வகர்ம ராகிய ஐந்துவகை தொழிலாளர்கள் 2000 வருடங்களுக்கு முன்னரே இருந்து வருவதாகவும் அவர்களே நிஜமான பிராம்மணர்களென்றும் கூறியுள்ளார்.

இந்த அத்தியாயம் சிறிது விரிவடைந்த போதிலும் விஸ்வகர்ம பிராம்மணீகத்தின் தொன்மையை சமஸ்த மக்க ளும் அறிந்துகொள்ளும் வண்ணம் இயன்றவரை சுருங்கக் கூறி விளங்க வைக்கலாயிற்று.

---

## 20. விஸ்வகர்மப் பிராம்மண சுபா சுபக்கிரியைகள்

ஆஸ்திகத்தைக் கடைப்பிடித்தொழுகும் விஸ்வகர்மப் பிராம்மணர்கட்கு பிரமசரியம், கிரகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் என நான்கு ஆச்சிரமங்கள் வகுக்கப்பட்டுள்ளன. பிரமசரியம் எனப்படுவது நித்யகர்மா நுஷ்டான ஒழுக்கங்களைக் கைக்கொண்டு, வேதம் முதலிய நூற்களையும் சந்ததிக்குரிய ஐந்தொழில்களையும் கற்றுணரும் வாலிபப் பருவமாம். கிரகஸ்தம் என்பது பிரமசரியம் ஒழுங்காக நடைபெற்றபின், தமக்கேற்ற உத்தம பத்தி னியை விதிப்படி மணந்து புத்திர பௌத்திரர்களை ஈன்

நடத்தி ஒருவர் தமது குடும்பத்தை காத்துவதாம். ஐம்பது வயது அளவுக்குமேல் கிரகஸ்தர் ஒருவர் குடும்ப சுக போகங்களின் ஆசைவிடுத்து வனத்தில் தவம்புரியச் செல்லுதல் வானப்பிரஸ்தம் எனப்படும். வானப்பிரஸ்தரான ஒருவர் எழுபத்தைந்து வயது சென்றபின் அறுபகையையும் வென்று, எல்லாப் பற்றையும் விடுத்து சகல உயிர்களிடத்தும் அன்புள்ளவராய் இருந்து. பிரமநிஷ்டாபரராக மோட்ச சாதனத்தைக் குறிக்கோளாகக்கொண்டு வாழ்பவரே சந்நியாச ஆச்சிரமத்தை யடைந்தவராவர். இனி இந்த அத்தியாயத்தில் முன்னால் கூறிய இரு ஆச்சிரமங்களைக் குறித்து மட்டும் விவகரிப்போம்.

கிரகஸ்த ஆச்சிரமமாகிய இல்லறமே மற்ற மூன்று ஆச்சிரமங்களுக்கும் அடிப்படையாம். இந்த தர்மம் வளர்ந்தோங்க வோங்க அதினின்றும் பிரமசரியம், கிரகஸ்தம் ஆகிய இரு ஆச்சிரம தர்மங்கள் மாறி மாறிப் பிறப்பனவாம். கிரகஸ்தத்துக்கு வேதங்களால் நிஷ்கரிக்கப்பட்ட விவாகங்கள் வெகு முக்கியமானவைகளாம். எனவே, விஸ்வகர்மப் பிராம்மணர்கள் பிரமசரியஆச்சிரமத்திற்குரிய விரதங்களைச் சம்பூர்த்தி செய்தபின், சாஸ்த்ரோக்தமாக விவாகத்தைச் செய்துகொண்டு இல்லற தர்மத்தைக் கைக்கொள்ளுதல் முறையாம். பிரமம், தெய்வம், ஆரிஷம், பிராஜாபத்தியம் என்னும் நால்வகை பிராம்மண மணங்களில் வேத விதிப்படி வதுவரர்களுடைய மாதாபிதா பந்துவர்க்கங்கள் சம்மதிபெற்றும், அக்னி சாட்சியாகவும் பாணிக்கிரகணமும், மாங்கல்யதாரணமும் செய்யப்படுவது தெய்வ விவாகமாகும். இவ்வழியே உண்டாகும் சந்ததியாரைக் குற்றமற்ற பிறப்புடையராகவும், உரிமை பெற்ற பின்வாரிசுகளாகவும் உலகம் மதித்துக் கொண்டாடும். மாங்கல்ய தாரணமில்லா மணம் நிஷ்பிரயோஜனமானதாம்.

இனி, கிரகஸ்தனுக்கு விதித்துள்ள சோடச அல்லது பதினாறு கர்மங்களாகிய, கர்ப்போற்பத்திக்குக் காரண

மான கர்ப்பாதானமும், ஆண்மகவைக் கோரிச் செய்யும் கிரியையாகிய பும்சவனமும், கர்ப்பத்திலுள்ள பிண்டத்திற்கு நாபிமுதல் சிரசுவரையில் தொட்டுக்காட்டி இரட்சாபந்தனம் செய்யும் சீமந்தமும், குழந்தை பிறந்த ஆயுர்த்தாய முதலிய பன்னிரண்டு பாவங்களை யுணர்ந்து நடந்துகொள்வதற்கான சாதகன்மமும், பிதுர்வழியில் ஆறுபிதுர்க்களையும், மாதுர் வழியில் ஆறு பிதுர்க்களையும், விஸ்வதேவர்களையும் வரித்து பூஜிக்கும் நாந்திமுக பிரார்த்தனையும், பிறந்த குழந்தையைத் தாம் தந்தையர் சுற்றத்தாருடன் தேவாலயத்துக்கு எடுத்துச்செல்லும் உபநிஷ்க்ரமணமும், குழந்தை பிறந்த ஆறு, எட்டு, பன்னிரண்டு மாதங்களில் சுப காலத்தில் பாயசம் அல்லது பாலன்னத்தை வெள்ளிக்கிண்ணத்தில் வைத்தூட்டும் அன்னப்பிராசனமும், அக்குழந்தைக்கு மூன்று, ஐந்து, ஏழு ஆகிய வருடங்களில் க்ஷவரம் செய்விக்கும் சவுளக் கிரியையும், அம்மகவுக்கு எட்டாவது வயதுதொட்டு பன்னிரண்டாவது ஆண்டுக்குள் உபவீதமாகிய முப்புரி நூலை அணிவித்தும், பிரமோபதேசம் செய்வித்தும் சகல கர்மங்கட்கும் அதிகாரியாக்கும் உபநயனக்கிரியையும் மிக முக்கியமானவைகளாம். மற்ற ஆறு கர்மங்களான உபா கர்மம், வேதாரம்பம், பிரமசரியம், சமாவர்த்தனம், பஞ்சமகாயக்ஞம், அன்னவதியாகிய கிரியைகளை, உபநயனம் செய்யப்பெற்ற துவிஜர்கள் அல்லது இரு பிறப்பாளர் ஆசரிக்க வேண்டிய முக்கிய கர்மங்களாம்.

ஈங்கு விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கு - இரதகாரப் பிராம்மணர்களுக்கு அதி முக்கியமான மேலே காட்டிய சோடச கருமங்களைச் செய்ய அருகதையுடையாரென்பதை சில சுருதி ஆதாரங்களால் விளக்குவோம். ஸ்காந்தம், நாகரகாண்டம் 5-ம் அத்தியாயத்தில், "பகவன் ஸர்வலோகே - ஸர்வஜ்ஞ ஜகதாம் பிரபோ" என்பதை முதலாகக் கொண்டு தொடர்ந்துவரும் சுலோகங்களின் தாத்பரிய

மாவது: குமாரக் கடவுள் ஈஸ்வரனைப் பிரார்த்தித்து, உலகிற்கு இறைவனாகிய எந்தையே! விஸ்வகர்மப் பிராம் மணர்களான இரதகாரர்கள் தங்கள் குலதர்மமாகிய கர் மங்களை எவ்வாறு செய்ய வேண்டுமென்று வினவியதற்கு ஈஸ்வரன் உத்தாரமாக, உலகத்திற்கு இதத்தைச் செய்கிற விஸ்வகர்மர்களான இரதகாரப் பிராம்மணர்கள் விஸ்வ கர்மாவின் புத்திரர்கள் ஆகலால், அவர்கள் வேதங்களில் கூறியுள்ளவாறு வேதமார்க்கமாகவே அக்கினி ஆதாரத் தோடு சோடச கருமங்களைச் செய்யவேண்டும். அவற்றுள் உபநயனக்கிரியை அதிமுக்கியமானது. அதைச் செய்ய வேண்டிய விதிக்கிரமங்களைக் கூறுவேன் என்று தொடர்ந்து கூறலானார்.

இந்த உபநயனம் எனும் கர்மமானது ஒருவருடைய குலத்தை விளக்குவிக்கும் புத்திரர்களின் புனர் ஜன்மம் அல்லது மறுபிறப்பு என்பது சாஸ்திரம். அதைச் செய் வதற்கு முந்திய தினத்தில் வேதகோஷங்களோடு புண் யாஹவாசனம் செய்து, பிறகு நாந்தி நடாத்தி, மறுநாள் வைகறையில் மங்கள ஸ்நானம் செய்வித்து நல்ல பருத்தி கொண்டு கையினால் நூற்கப்பட்டு பிரம்ம முடிச்சு என் னும் முத்திரையுடைய முப்புரி நூலை அணிவித்து, அக்னி ஹோமத்தைச் செய்து, சமஸ்ததேவதைகளையும் ஆகுதியால் திருப்திசெய்து, மந்திர, வாத்தியகோஷங்களுடன் சரு ஹோமத்தைப் பூர்த்திசெய்தல் வேண்டும். இவ்வாறு உப நயனத்தைச் செய்துமுடித்த ஆச்சார்யன், அந்த சிஷ்யனை கரத்தால் பிடித்துக்கொண்டு சமிதாஹோமத்தைச் செய்து, அதன்பின் மௌஞ்சி, கிருஷ்ணாஜனங்களைக்கட்டி, பிர மோபதேசத்தைச் செய்து அக்னி தேவனுக்கு பூரண ஆகுதி யைத் தந்தபின் ஹோமசமாப்தி செய்தல்வேண்டும். இவ் விதமாக உபநயன சமஸ்காரத்தைச் செய்தபின் வேதங்களை யும், சில்பம் உள்ளிட்ட அறுபத்திநான்கு கலைகளையும் சிஷ்யனுடைய பரிபக்குவத்திற்கேற்றவாறு அத்தியயனம்

செய்வித்தல் வேண்டும். ஆச்சாரியன் இவ்வாறு செய்வதால் சிஷ்யன் புனர்ஜன்மமும் வேறு இரு ஞானக்கண்களையும் பெறுகிறான் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லையென ஈஸ்வரன் கூறி முடித்தார்.

உபநயன சமஸ்காரத்துக்கு கீழ்க்கண்டவாறு விஸ்வகர்மப் பிராம்மணர்கள் அருகதையுடையவர்களாவார்களென சுருதிகள் கூறுவனவாம். மனு விஸ்வகர்மர்கள் தங்கள் பிள்ளைகட்கு பன்னிரண்டாவது வயதிலும், மயன், துவஷ்டா, சில்பி, விஸ்வக்ஞர்கள் முறையே பதினொன்று, பத்து, எட்டு வயதளவிலும் உபநயனம் செய்வித்தல் வேண்டும். ஆறாவது வயதில் உபநயனம் செய்தால் ஐசுவரிய விருத்தியும், ஏழாம் வயதில் செய்தால் பிரம்மதேஜஸ் விருத்தியும், எட்டாம் வயதில் செய்தால் ஆயுள் விருத்தியும், ஒன்பதாம் வயதில் செய்தால் சரீராபி விருத்தியும், பதினோராம் ஆண்டில் செய்தால் அன்னபானாதிவிருத்தியும், பன்னிரண்டாவது வயதில் செய்தால் மாடுகள் கன்று காலிகள் அபிவிருத்தியும் உண்டாகுமென்று சாஸ்திரங்கள் அறைவனவாம். ஆகையால், மேற்குறித்த அபிவிருத்திகளில் எதை ஒருவர் விரும்புகிறாரோ அதற்கேற்ற வயதில் உபநயனத்தைச் செய்விக்கலாமென மனுஸ்மிருதியிலும் விதிக்கப்பட்டுள்ளது, விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கும் பொருத்தமாகும். எனினும், விஸ்வகர்மப் பிராம்மணர்களுக்கு எட்டாம் ஆண்டில் செய்யும் உபநயனமே மிக விசேஷமானதாகும். அங்ஙனம் செய்விப்பதால் அந்த பிரமச்சாரி பதினொன்கு வயதுக்குள் சாஸ்திரப் பயிற்சியும் தொழிற் பயிற்சியும் தொடர்ந்து பெறுவதற்கு ஹேதுவாயிருக்கும். பொதுவாக பிள்ளைகளின் அறிவு முதிர்ச்சியையும், உடல் வன்மையும் சீர்தூக்கி யுக்தவயதில் உபநயனம் செய்விப்பதே ஏற்புடைத்தாம்.

இனி எந்தக் காலங்களில் உபநயனம் செய்விக்கலாமென்பதும் ஆராயத்தக்கது. மனுப் பிரம்ம சந்ததியார்

வசந்தகாலத்திலும், மய பிரம்மாக்கள் கிரீஷ்ம ருதுவிலும், துவஷ்ட்டார்கள் சரத் காலத்திலும், சில்பிகள் வர்ஷாகாலத்திலும், விஸ்வக்ஞர்கள் சிசிர ருதுவிலும் உபநயனம் செய்வித்தல் உத்தமமாகும். இல்லையாயின், ஐந்துவகை பிராம்மணர்களும் வசந்தகாலத்தில் செய்யலாமென சாஸ்திரங்கள் இடங்கொடுப்பனவாம்.

இனிமேல், உபாகரும விதிகளைச் சுருங்கக் கூறுவோம். வருடந்தோறும் நிகழ்கின்ற உபாகர்மத்தை விஸ்வப் பிராம்மணர்கள் தவறாது நடாத்தி தமது பிராம்மணீகத்தையும், பிரம்ம தேஜஸையும், வளர்ச்சிபெறச் செய்தல் முறையாம். உபாகர்மக்கிரியை இருக்வேதிகளான மனுவாச்சாரியர்கள் ஆவணிமாதத்தில் வரும் திருவோண நட்சத்திரத்திலும், யஜுர்வேதிகளான மயர்கள் பௌர்ணமியிலும், சாமவேதி சில்பிகள் திருவோண நட்சத்திரத்திலும், பிரணவர்களான துவஷ்ட்டார்கள் பூர்வபட்ச சதுர்த்தியோடு கூடிய அஸ்த நட்சத்திரத்திலும், அதர்வண வேதிகளான விஸ்வக்ஞர்கள் பௌர்ணமி தினத்திலும் செய்தல் வேத சம்மதம் பெற்றதாம். வேதவிதிப்படிஸ்நாநம் முடித்து, உபவீதம், மௌஞ்சி, கிருஷ்ணாஜனம் முதலியவைகளை அணிந்து, காண்டவ ரிஷிதர்ப்பணமும், அந்த ரிஷிக்கு நூற்றெட்டு ஹோமமும் செய்து முடித்தல் வேண்டும். மறுநாள் ஸ்நாநம் முடித்து, ஹோமம் வளர்த்து ஆகுதிசெய்தபின், " ஓம் - பூர்புவஸ்ஸுவ :, தத்ஸவிதுர்வரேண்யம் - பர்கோ தேவஸ்யதீமஹீ - தியோயோந : பிரசோதயாத் " என்னும் காயத்திரி மகாமந்திரத்தை நூற்றெட்டுமுறை மனமொழி மெய்கள் பொருந்தச் செபித்தபின் பழைய எக்ஞோபவீதத்தைக் களைந்து ஓடுகின்ற நீரில் விட்டு விடுதல் முறையாம்.

பிரமசாரியவிதிகள் மிகப் பெருக்கமானவை. அவற்றை ஈண்டுச் சுருக்கிக் கூறுவோம். உபநயனம் செய்விக்கப்பட்ட மாணவன் பிரதிதினமும் ஸ்நாநம் முடித்து, பிதுர், ரிஷி

தர்ப்பணங்களைச் செய்து காலைமாலை சந்தியா காலங்களில் அக்கினி காரியங்களை நடத்தியும், திரிகால சந்தியாவந்தனங்களையும், காயத்திரி ஜெபமும் செய்தும், தாய் சகோதரிகளானாலும் தனித்து அவர்களுடன் தங்காமலும், விஷைக வசனிக்காமலும், உறவினர்களோடு கூடியிருந்து புசித்தலும் வேண்டும். மேலும், அப்போதைக்கப்போது உண்டாகும் ஐம்புல விஷயவாசனைகளில் மனதைச் சுழல விடாது கௌபீன சுத்தராக இருத்தல் வேண்டும். விகட வார்த்தைகளையும், பொய் பேசுதலையும் அறவே நீக்குதல் வேண்டும். தமது ஆசிரியரால் கற்பித்தபடி நித்தலும் வேதாத்யயனமும், சிற்பம் முதலிய ஐந்து பிரம்ம கிருத்தியங்களில் நாடி அவைகளை நன்கு பழகுதலும், மாதா, பிதா, ஆச்சாரியன் ஆகியவர்கட்கு வணக்கமாக நடத்தலும், மிருது பாஷியாக வசனித்தலும், உடல் வளர்ச்சிக்கான பயிற்சிகளில் பழகலும் பிரமசரியத்துக்கு உகந்த குணங்களாம். பின்னர் சமாவர்த்தனம் என்னும் கிரியையை அக்கினி பூர்வமாகவும், மந்திரபடனத்துடனும் செய்து முடித்து, பிரசாதமாகிய பஞ்சாமிர்தத்தைப் புசித்து பிரமசரியத்தைக் கழித்துக்கொண்டு விவாகமாகிற இல்லறதர்மத்தை மேற்கொள்ளுதல் முறையென வேதங்களும், சுருதிகளும் முழங்காநிற்கும்.

இனி விஸ்வகர்மப் பிராமணர்கட்குரிய அபரக்கிரியைகளைக் குறித்தும் தொட்டுவிடுவோம். உபநயனம் பெற்றவும் அதற்குமேல் கிரகதாச்சிரமத்தில் இருப்பவர்களுமான விஸ்வகர்மர்கள் இறந்தால், அவர்களை தகனம் செய்தலே சாஸ்திர சம்மதம் பெற்றதாம். அப்படிச் செய்வதால் ஒருவர் தேகத்தில் நிறைந்துள்ள பஞ்சபூதங்களின் அணுக்கள் தனித் தனியே பிரிந்து, ஜகத்தில் வியாபித்து நிற்கும் பஞ்ச பூதங்களுடன் விரைவில் சேர்ந்து ஐக்கியப்படுவதற்கு ஹேதுவாகுமென்பது பெரியார்கள்கொண்ட கருத்தாம். குழியிற் புதைத்தலாகிய தகன ஸம்ஸ்காரம் ஒருவர் தேகத்

தீருள்ள தசை, எலும்பு ஆகியவைகளிற் கலந்து உருக்கொண்
டிருக்கும் பஞ்சபூதங்களின் அணுக்களுக்கு அங்ஙனமே
விடுதலையளிக்கமாட்டாரெனவும். அதற்காக உயிருள்ள
போதே முத்தியால் பஞ்ச பூதங்களைச் சுட்டெரித்து, அவ்
வைதேவி போன்ற பெரியார்கள் சத்தி வடிவுறலைச் செல்
வக்கச் சிறப்புறவும் அல்லது அருட்சரீரம் பெற்றார்களென
நமது நாட்டுச் சரித்திரங்களால் அறியக்கிடப்பதாகும்.
விஸ்வகர்ம மூதாதையர்கள் பிரபஞ்ச உண்மைகளையும்,
மறு பிறப்பின் தன்மைகளையும் நன்குணர்ந்த வேதவித்துக்
களாதலால், இறந்தவர்களின் தகன சமஸ்காரத்தை வற்
புறுத்தியே வந்துள்ளனரென்பது வெள்ளிடை மலையாம்.

எனவே, மேலே கூறியவாறு இறந்தவர்களுடைய
தேகத்தை தகனப்பிரயோகம் செய்வித்து, சுத்த ஜலத்தால்
ஸ்நானம் செய்வித்து, கங்கை, இராமேஸ்வர தீர்த்தங்களா
லும், செவ்விளநீராலும் அபிஷேகம் செய்வித்து, சந்தம்,
புஷ்பம் ஆகியவைகளை அணிவித்து, பன்னீர்தெளித்து, நன்
றாக ஆடைகளால் அலங்கரித்து வேதவிதிப்படிக்கும், குடும்
பக்கிரமப்படிக்கும் தகனம் செய்த பின்பு, பந்துக்கள் எல்
லோரும் குளம் அல்லது ஆற்று நீரில் உடுத்த வஸ்திரத்
துடனே ஸ்நானம் செய்து தெற்குமுகமாக நின்று ஜலத்தை
இரண்டு கைகளினாலேயும் இறந்தவர்க்கு தர்ப்பணமாக
விடவேண்டும். கர்மத்தைச் செய்பவர் தரையிலாவது
கோரைப்புல் பாய் முதலிய விரிப்புகளிலாவது பத்து
இராத்திரியும் படுத்துறங்கல்வேண்டும். பகற்காலத்தில்
ஒருவேளை உணவுகொள்ளலும், இறந்தவர்க்கு தினந்
தோறும் தரையில் பிண்டம் போடுதலும் வேண்டும்.
முதல்நாள், மூன்றாம்நாள், ஏழாம்நாள், ஒன்பதாம்நாள்
ஆகியவன்று வஸ்திரதானம்செய்து ஊருக்கு வெளியிலுள்ள
தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து வேத விதிப்படி எள்ளும்
தண்ணீரும் இறைத்தல்வேண்டும். நான்காம் நாளில் அஸ்தி
சஞ்சயனம் செய்வதே முறையாம். கர்மாதி காரிய

தீட்சை வளர்த்தலும், வேறு வைதிகலௌகிகக் காரியங்களில் ஈடுபடாதிருத்தலும் வேண்டும். இவ்வாறு பத்து நாட்கள் ஆசூசமிருந்து கடைசிநாளில் பிண்டமிட்டு, ஏகோதிஷ்டத்தைச் செய்து முடித்து, பிறகு சபிண்டீகரணத்தைச் செய்து, சிரார்த்தம் முடித்து, பிராம்மண போஜனம் செய்வித்து, தேவாலயத்துக்குச் சென்று தரிசனம் செய்துகொள்ளல்வேண்டும். இதைச் சார்ந்த மற்றக் கிரியைகளையும், வருட முடிவரைக்கும் செய்யவேண்டிய கிரியைகளையும், அவற்றைச் செய்யும் முறைகளையும் அவை குறித்து தனித்துக்கூறும் நூல்களினாலும் வழக்கப்பாட்டினாலும், ஆச்சாரியர்கள் மூலமாகவும் அறிந்து அதன்படி நடந்துகொள்வதே விஸ்வகர்மப் பிராம்மணர்களின் குல தர்மமாம்.

---

## 21. விஸ்வகர்மப் பிராம்மண ஆரிய திராவிட விசாரம்

தென்னாட்டு மக்களிடையே ஆரிய-திராவிட பேதம் பல ஆண்டுகளாகப் பேசப்பட்டு வருகின்றது. தென் பாகங்களில் முன்னாள் வசித்த மக்களுக்குத் தொன்மையும், நாகரிகமும் கற்பித்து அவர்களே பூர்வ குடிகளென்றும், வடபிராந்தியங்களினின்றும் வந்த மக்களை ஆரியர் என்றும், பேதந்தோன்ற அழைத்து வருகின்றனர். ஆரியர் என்பார், ஆரியவர்த்தம் என்று கூறப்படும் இமயமலைக்கும் விந்திய மலைக்கும் இடையேயுள்ள பிரதேசங்களிலிருந்து பலப்பட்ட ஆயிரம் வருடங்களுக்கு முன் தென்னாட்டினுட் புகுந்த ஒரு வகுப்பார் ஆவர். இவர்கள் தாங்கள் வசித்த பூமி தேவபூமி என்றும் பிரம்மதேசமென்றும் கூறிக்கொள்வர். அந்த வம்ஸத்தினரின் ஒரு சாரார் தாங்கள் தேவப் பிராமணர்களென்றும், தேவ தேசமாகிய பிரம்ம வர்த்

தத்திலின்றும் குடியேறிய பிராம்மணர்களென்றும், கூறுவாராயினர். இவற்றிற்கு மனுஸ்மிருதியில் கூறியிருக்கும், "ஸரஸ்வதி த்ருஷத்வத்யோர், தேவநத்யோர், யதந்தரம், தம் தேவ நிர்மிதம் தேசம் - ப்ரும்மா வர்த்தம் ப்ரசக்ஷதே." என்னும் சுருதி வாக்கியத்தை ஆதாரமாகக்காட்டுவர்.

வேத காலத்துக்கு முன்னரே தொல்காப்பியக் காலமென சில ஆராய்ச்சியாளர்கூறுவர். தொல்காப்பியக் காலம் இற்றைக்கு எண்ணாயிரம், ஐயாயிரம், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதெனப் பலவாறு சமயாநுகுணமாகத் திரித்துக் கூறுவர். ஆயினும், அந்நூல் மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதென்பது யாவராலும் ஒப்பக்கூடியதொன்றும். அகத்தியம் வழி வந்த தொல்காப்பியம் தமிழ் மொழிக்கு முடிந்த இலக்கணமாதலின், கைக்குறி, கட்குறி, ஒலிக்குறி முதலியவற்றால் கருத்துக்களை யுணர்த்தி பின்னர் எழுத்து. சொல், பொருள் முதலியவற்றில் தேர்ந்து அவைகளை மக்கள் வாழ்விடை புகுத்தற்கும் மேலும் மேலும் வளம்படுத்தற்குமான முயற்சிகள் தொல்காப்பிய காலத்திற்கு முன் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் நடைபெற்றிருத்தல் வேண்டும்? அக்காலம் மூவாயிரம் ஆண்டுகளுக்குமேல் ஐயாயிரம் ஆண்டுகளாக இருக்கலாமென ஒருவாறு ஊகத்தால் அறுதியிடலாம்.

சுமார் அரை நூற்றாண்டுகளுக்கு முன், உலகப் பிரசித்தி பெற்ற சுவாமி விவேகாநந்தர் "இந்தியாவின் எதிர்கால நிலைமை" என்றதோர் அரிய பிரசங்கத்தில், "இந்த சென்னை ராஜதானியில் ஒரு விஷயம் பிரஸ்தாபிக்கப் படுகின்றது. இந்தியாவின் இதர மாகாணங்களில் இவ்வித பிரச்னை எழவில்லை. இத் தென்னாட்டிலே திராவிடர்கள் என்ற ஒருவகை ஜாதியார் முன்பே இருந்தனரென்றும், அவர்கள் வடக்கேயிருந்து வந்த ஆரியர்களைச் சேராதவர்கள் என்றும், இத்தென்னாட்டில் வசியும் பிராம்மணர்கள்

மாத்திரமே வடக்கேயிருந்த ஆரியர்களினின்றும் பிரிந்து இங்குவந்தவர்களென்றும், ஏனைய தென்னாட்டு மாந்தர்கள் ஆரியர்களுடன் தொடர்பு கொண்டவர்கள் அல்லரென்றும் சொல்லப்படுகின்றது. இது ஆதாரமற்ற ஒரு கற்பனைக் கூற்றாகும். ஏனெனில், வடதேசத்தாருக்கும், தென்தேசத்தாருக்கும் மொழி பேதம் இருப்பதைத் தவிர்த்து வேறு என்ன பேதமிருக்கிறது? இக்கூட்டத்திலுள்ள வடதேசத்தாரையும் தென்தேசத்தாரையும் யாரே பகுக்க வல்லார்? இந்நாட்டுப் பிராம்மணர்கள் வடக்கேயிருந்து வந்தவர்களானால், ஏன் சமஸ்கிருதத்தை மறந்தனர்? ஆரியவர்த்தத்தினின்றும் தென்னாட்டில் குடியேறிய தேவப் பிராம்மணர்களாகிய ஆரியர்கள் தங்கள் சமஸ்கிருத பாஷையை காலக்கிரமத்தே மறந்து ஏன் திராவிட அல்லது தென்னாட்டு பாஷைகளைக் கற்றுக்கொண்டிருக்கலாகாது? அதுபோலவே தென்னாட்டிலுள்ளவர்கள் தங்கள் பாஷைகளை மறந்து ஏன் சமஸ்கிருத பாஷையைக் கைக்கொண்டிருக்கலாகாது? இஃது 'இருதலைக் கொள்ளி எறும்பு' போலாவதாம்; தென்னாட்டில், ஆரியர் வருமுன் ஒருவகை வகுப்பார்கள் இருந்திருக்கலாம். அவர்களுள் சிற்சில வகுப்பார்களில் மலைகளிலும், காடுகளிலும் வதிந்தவர்கள் போக அறிவுடைய வர்க்கத்தினர் அதிகம் இல்லையென்பது உறுதி. ஆகையின் 8000 வருடங்களுக்கு முன் காடும், மலையும், நதியும் நிறைந்த தென்னாட்டில் புகுந்த மக்கள் அனைவரும் ஆரியர் அல்லது அறிஞர்கள் எனப்படுவர். அவர்களுள் மாமிச போஜனத்தைக் கைக்கொண்டவர்கள் ஒரு பகுதியாகவும், 'திராவிடர்' அல்லது ஜீவகாருண்யம், இரக்கம் உடையவராய் மாமிசபோஜனத்தைத் தவிர்த்தவர்கள் ஒரு பகுதியாகவும் பிரிந்தனரென்ப. இவர்களிருவருமே தமிழ் மக்கள் ஆனார்கள். எனவே ஆரியர்-திராவிடர் என்னும் பாகுபாடு இக்கால வியல்புக்குப் பொருந்தாது. பிராம்மணர்கள்தான் ஆரியரென்றும், க்ஷத்திரிய

வைசிய சூத்திரர்கள் ஆகியோர்களும், தமிழ், தெலுங்கு, கன்னடம், மஹாராஷ்டிரம், கூர்ஜரம் ஆகிய ஐந்து பாஷைகளை இன்று பேசுகிற தென்நாட்டு மக்களனைவரும் 'திராவிடர்' என்றும் சொல்லுதல் அறிவீனம்'' என்று அறிவுறுத்தியுள்ளார். மேலும், இந்நாள் பட்டம் வகிக்கும் ஸ்ரீமத் சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகள் கூறுவதிதுவாம். ''நாம் வசிக்கும் பூமி ஜம்புத்வீபம். இதில் அரசாண்ட புராதன அரசன் ஒருவன் தன்னுடைய 9 புத்திரர்களுக்கும் இதனைப் பங்கிட்டுக் கொடுத்தான். பரதன் என்பானுக்கு பரதக் கண்டம் கிடைத்தது. இந்த பரதக் கண்டத்தை ஹூணர், யவனர் ஆகியோர் ஆக்கிரமித்தார்கள். அவர்கள் கைபற்றியது போக எஞ்சிய பாகம் ஸிந்து நதிக்குக் கிழக்கே இருந்ததால், ஸிந்துதேசமென்று அழைக்கப்பட்டது. இந்த ஸிந்தியாவெனும் பெயர் காலக்கிரமத்தில் இந்தியா, என மாறியபடியால், நாம் இந்தியர் என்றும், வட இந்தியர், தென் இந்தியர் என்றும் சொல்லிக் கொள்கிறோம். பிறநாட்டாராலும் அவ்வாறே நாம் அழைக்கப் படுகிறோம்.

ஆனால் உண்மையில் நாம் எல்லோரும் ஆரியர்களே. அதாவது அறிஞர்கள் - ஞானியர்கள் என அது பொருள் தருவதாம். அப்பெயர் அநாதி காலந்தொட்டே, நமது புண்ணிய கருமங்களின் காரணமாக, நமது சிறப்புப் பெயராக வழங்கி வருகிறது. ஆரியர் என்பதும் திராவிடர் என்பதும் ஆரிய மக்களின் உட்பிரிவே யன்றி வெவ்வேறானவர்களல்ல. உலகின் முதல் தோற்றத்தில் பிரம்மத்தினின்றும் பிறந்த பிராம்மணர்களான நமது மூதாதையர்கள் விந்திய மலைக்கும், இமயமலைக்கும் இடையேயுள்ள நிலப்பரப்பில் வதிந்த காலத்தில், சுத்தகர்ம காண்டிகளுக்கும், கர்மத்தோடு கூடிய ஞானகாண்டிகளுக்கும் ஆசார விவகார விஷயங்களில் பொருத்தமில்லாமல் போயிற்று. தயை, ஜீவ காருண்யமுடைய ஆரியரில் சிலர் நெஞ்சில்திரவம்கொண்டு,

அதாவது ஜீவ கொலைசெய்து புசித்தல் பாவம் என்ற கொள்கையைக் கடைபிடித்தவராதலால் அவர்கள் ' திரா விடர் ' எனப்பெயர் பெற்றார்கள். அக்காலத்தில் ஒருவித் வத் சபை கூடி பஞ்சாயத்தும் ஏற்பட்டது. அதில் கௌட, உத்கல, மைதில, கன்யகுப்ஜ, மிஸ்ர எனும் ஐந்து வகைப் பிராம்மணர்களும் மீன்மாமிச உணவைக் கைவிட சம்மதி யாது போனதால் அவர்கள் கௌடப் பிரிவினர் ஆனார்கள். ஆயினும் தமிழர், தெலுங்கர், கர்நாடகர், மஹராஷ்டிரர், கூர்ஜரர் ஆகிய ஐந்து வகை மக்கள் ஜீவவதை போஜன னத்தை மறுத்து ஆட்சேபித்தபடியால் அவர்கள் நெஞ்சில் ஈரம் அல்லது 'திரவம்' காட்டியதைக் கொண்டு அவர்கள் ஆரியத்திராவிடர்கள் ஆனார்கள். எனவே, ஆரியர் திரா விடர் வெவ்வேறான மக்கள் அல்லர். அவர்கள் ஒரே மரத்தி னின்றும் உற்பவித்த இருகனிகள் போலாவர்.''

மேற்காட்டிய விசாரத்தை யொட்டி, இன்று தென் னாட்டில் வதியும் விஸ்வப்பிராம்மணர்கள் ஆரியரா அல்லது திராவிடரா என்ற வினா சில காலமாகக் கேட்கப் படுகின் றது. சில சரித்திர ஆராய்ச்சியாளர், இவ்வகுப்பார் தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய திராவிட மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டிருப்பதால் திராவிடர்களென் றும், பிதா மொழியாகிய சமஸ்கிருதத்திலுள்ள அறுபத்தி ரான்கு சிற்ப நூற்களைத் தங்கள் ஜாதியின் தனி உரிமை யாகக் கொண்டு அந்த தெய்வீகத் தொழில்களை நாளும் நடாத்தி வருவதால் அவர்கள் ஆரிய வர்த்தத்தினின்றும் தென்னாடு போந்த ஆரியர்களே என்றும் வேதம், சிற்பம் ஆகியவைகளை வாய்மொழியாகவே படனம் செய்துகொண் டும், வேள்விகள் புரிந்தும், அவற்றால் மழை பெய்வித்தும், பூர்வத்தில் பெரும்பாகம் கடலாற் கொள்ளப்பட்டும் காடும், மலைகளும், பருமரவனங்களும், நதிகளும், துஷ்ட மிருகங்களும், வனசரர்களும் நிறைந்த இத்தென்னாட்டில் குடியேறின ஆரியர்களெனவும் சில ஆராய்ச்சியாளர்

அறிந்து கூறுவர். அல்லாமலும், 9ம் அத்தியாயத்தில் கூறியுள்ளபடி காசி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ விஸ்வகர்மேஸ்வரரை அநவரதம் பூஜித்து வந்த ஸ்ரீவிஸ்வகர்மாவும், அவரது மரபிற்றோன்றிய விஸ்வகர்மப் பிராம்மணர்களும் அந்நாடெங்கும் பரவியிருந்தாலும், அந்த புண்ணியப் பிரதேசங்கள் கங்காநதியால் புனிதப் படுத்தப் பட்டிருந்தும், அவ்விடங்களில் தங்கள் சிற்ப சாஸ்திரங்களில் விதித்துள்ளபடி "தேவாலயங்களையோ, விக்ரகாதி பிரதிமைகளையோ, இரத சிருஷ்டிகளையோ அமைப்பதற்கு வசதியில்லாது போகவே, அவர்களும் தென்னாடு போந்தனர் எனக் கோடல் தவறன்று. மேலும், பிந்திய காலத்தில் சேர, சோழ, பாண்டியர்களான தமிழ் நாட்டு மன்னர்கள் கை தேர்ந்த சிற்பர்களை ஆர்யவர்த்தம் எனப்படும் வடநாடுகளிலிருந்து தமிழ் நாட்டுக்குக் கொண்டுவந்தனரென்பது சரித்திரத்தால் அறியக்கிடப்பதாம்.

அல்லாமலும், வடநாடு புண்ணியபூமியென்றும், தென்னாடு கர்ம பூமியென்றும் கூறப்படுகிறது. இதற்குப் பிரமாணமாக அமரம்த்விதீய காண்டம் 8-வது சுலோகம் "ஆர்யாவர்த்த: புண்யபூமிர், மத்யம் விந்த்ய ஹிமாகயோ:" என்று எடுத்தோதப்படுகிறது. இதனால், விந்திய மலைக்கும், ஹிமயமலைக்கும் மத்தியிலும், மேற்குக்கடல், கிழக்குக் கடல் வரையிலுமுள்ள பூமி ஆரியவர்த்தமாகிய புண்ணிய பூமியெனப்படும். மேலும், " ஆர்யா தார்மிகாவர்த்தம்தே, அஸ்மின்னித்யாவர்த்த:, புண்யராசயா - பூமிஸ்ச்ச புண்ய பூமி" என்னும் லிங்காபாட்டீய வியாக்கியானத்தினாலும் ஆரியவர்த்தம் புண்ணிய பூமியென்பது தெளிவாகும். எனவே, மேற்குறித்த சுருதிவாக்கியங்களில் கண்டுள்ள நாடுகளையும், அதில் வதியும் மக்களையும் தவிர்த்து, இதர நாடுகளும், மக்களும் புண்ணிய பூமிகள், புண்ணியர்கள் அல்லவெனவும், தார்மிகர்கள் அல்லரெனவும் பெறப்படுவதாம். ஆகையின், தென்னாடு கர்ம பூமியெனவும், அந்நாட்டு

மக்கள் தங்கள் கர்மங்களைப் போக்கிக்கொள்ளும் தர்
மார்த்த வழிகளையும், ஈஸ்வரனை வழிபடுவதற்கான கோயில்
முதலிய திருப்பணிகளையும் செய்து முக்தியை அடைய
வேண்டியவர்களா யிருந்தார்களெனவும் அறியக் கிடப்ப
தாம். தமிழ் மொழியிலுள்ள, "வடதிசைப் பார்ப்பான்
தென்றிசைக் கேகின் நடையாது கோணிப்புலையனாவான்;
தென்றிசைப் புலையன் வடதிசைக்கேகின், பழுதற வோதிப்
பார்ப்பான் ஆவான்" எனும் செய்யுள்களால் வடநாடு,
தென்னாடுகளின் தன்மை இற்றென ஒரோவழி நன்கு
புலப்படும்.

திரேதா யுகத்தின் மத்தியில் திருவண்ணாமலை, சிதம்
பரம், திருவாரூர், திருக்கடையூர், ஜம்புகேஸ்வரம் முதலிய
க்ஷேத்ரங்களில் கட்டப்பட்டுள்ள தேவாலயங்களின்
தொன்மையை மயநூல் என்னும் சிற்ப சாஸ்திரம் கூறு
வதால், அந்தக் காலத்திலேயே விஸ்வகர்மப் பிராம்மண
சிற்பிகள் இந்நாட்டிற்கு வந்து தென்னாட்டை புண்ணிய
பூமியாகச் செய்துள்ளனரென்பது வெள்ளிடைமலையாம்.
இனி தேசச் சரித்திரத்தினுட் புகுந்து பார்ப்போம். மேலே
கூறிய தேவாலயம் முதலிய திருப்பணிகளைத் தென்னாட்டில்
நிலை நாட்டியவர்கள் ஆரிய நாட்டிலிருந்து பண்டு வந்த
சமஸ்கிருத பாஷா வல்லுநரான விஸ்வகர்மச் சிற்பிகள்,
ஆதி சைவப் பிராம்மணர்களென்பது நனிவிளங்கும். பூர்வத்
தில் வனங்களால் மூடப்பட்டிருந்த இத் தென்னாட்டினுள்,
வடநாட்டில் அயோத்யா நகரத்தை ஆண்டிருந்த சூரியகுல
இட்சுவாகு சந்ததியில் வந்த இராஜ சூடாமணிச்சோழன்
பிரவேசித்து உறையூரைத் தலைநகராக்க எண்ணி, வட
நாட்டில் கங்காநதி தீரத்திலிருந்த சிற்பர்களைக் கொணர்ந்து
அந்நகரை நிர்மாணித்து அலங்கரித்ததுமன்றி, அந்நாட்டு
மொழியான தமிழைத் தானும் பேசப் பயின்றதோடு,
அதனை அரசாங்க பாஷையாக்கினான். பின்னர் அகஸ்தி
யரால் மேலும் அம்மொழி விரிவடைந்து அட்சரங்கள்,

நூல்கள், இலக்கணங்கள் ஏற்பட்ட பொழுது அவைகளைத் தனது நகர மக்களனைவரையும் படிக்கச் செய்தான்.

மேற்கூறியவாறே, சேரர்களும், பாண்டியர்களும் தென்னாடடைந்து, சேரன் கேரளநாட்டையும், பாண்டியன் மணலூரையும், தலைநகராகக் கொண்டனர். மதுரையிலிருந்த கடம்பவனத்தை அழித்து அதில் சொக்கநாதர் ஆலயத்தை யும், அதனைச் சூழ்ந்து ஒரு பெரிய நகரத்தையும் உண்டாக் கினன். திருவிளையாடற் புராணம், திருநகரம் கண்ட படலத்தில் கூறியுள்ளவாறு இப்பாண்டிய மன்னன் சிற்பர் களையும், ஆதி சைவப் பிராம்மணர்களையும் காசி க்ஷேத் திரத்தினின்றும் கொண்டுவந்ததாகத் தெளிவுப்படுத்தப் பட்டுள்ளது. இவைகளால் பெறப்படுவது யாதெனின், ஆரியநாட்டரசர்கள், தமிழ் நாட்டரசர்களாகக் காலக்கிர மத்தில் மாற்றமடைந்ததுபோல், ஆரிய விஸ்வகர்மப் பிராம் மணர்களான சிற்பிகளும் அவர் சந்ததியார்களும், தண் டமிழ் சிற்பர்களும், அற்புத வினைஞர்களுமானார்கள். அல் லாமலும், வியாசபாரதம், சபாபர்வம், இராஜசூய யாகச் சருக்கத்தில் சகாதேவன் தென்னாடுகளுக்கு விஜயம் செய்த பொழுது பாண்டியன் மகளாகிய சித்ராங்கதை என்பாள், மேற்குறித்த யாகத்துக்குப்பொன்னும், நவமணிகளும் இதர திரவியங்களும் கொடுத்தனுப்பினள். பின்னர் இவள் அர்ஜுனனின் மனைவியுமானள். வடநாட்டுமக்களும், தென்னாட்டு மக்களும், ஆரியர் - திராவிடர் என்னும் பேதமின்றி அந்நியோந்நிய சம்பந்தம் பெற்று வதிந்தன ரென்பதற்கு இதனினும் வேறுசான்று வேண்டுங்கொல்? மற்றொன்று பெறப்படுவது யாதெனின், தொன்று தொட்டுத் தமிழைப் பேசிவந்த தென்னாட்டு மக்களும், ஆங்கு குடியேறி நிலைத்து வாழ்ந்தவரும் ஆரியத் தமிழரே எனத் துணிவதாம்.

ஆரியர் தென்னாடு புகுமுன் ஒரு கடற்கோள் நிகழ்ந்து இந்நாடு நாடாக இருந்ததுமன்றி அறிவுடைய மனித

வர்க்கம் அப்பொழுது இல்லையெனக் கூறுவாருமுண்டு. இதற்கு ஆதாரமாக அகத்தியரையும், இராமாயண காலத்தையும், முதல், இடை, கடைச் சங்கங்களையும் எடுத்துக் காட்டுவர். குமரி ஆறும், பேராறும், பஃறுளியாறும், குமரிக்கோடும், மணிமலையும், காடுகளும் எழுநூற்றுக் காதவழியுள்ள நாற்பத்தொன்பது தமிழ்நாடுகளும் இப்போதுள்ள தமிழ்நாட்டின் தெற்கில் பரவியிருந்ததென அறுதியிடப்பட்டுள்ளது. முதலூழி இறுதிக்கண், அதாவது பன்னீராயிரம் வருடங்களுக்குமுன் தலைச்சங்கப் புலவரும், அகத்தியரும் இருந்தனரென்றும், மூன்றாவது கடற்கோள் நிகழ்ந்தபின்னரே இரண்டாவது சங்கம் தோன்றியதென்றும், தமிழ் நூற்கள் கூறுவனவாம். இராமாயணம், இரண்டாம் யுகத்தின் இறுதியில் நிகழ்ந்ததென்பதாலும், இடைச்சங்கம் மூன்றாவது ஊழிக்குப்பின் தோன்றியதென்பதாலும், முதலூழிக்கு முன்னரே ஆரியர் தென்னாடு புகுந்திருக்க வேண்டுமெனப் பெறப்படுகின்றது. இறையனர் அகப்பொருளுரை கூறுகின்றபடி, இம்முதல் கடற்பெருக்கு இற்றைக்குச் சுமார் 8000 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்து தென்னாடு சிதைவுற்றிருத்தல்வேண்டும். எனவே, ஆரியர் வருமுன் தென்னாடு காடாயிருந்ததென்பதும், ஆரிய மன்னர்களாலும், சிற்பர்களாலும் தென்னாடு மீளவும் சிறப்புற்றதெனக் கூறுவோரும் உளர்.

ஆரியர் விந்தியமலைக்குத் தெற்கே போகப்படாது என்ற கட்டுப்பாட்டைக் கடந்து முதன் முதல் தமிழகம் வந்து அந்நாட்டு இயல்புகளைத் திருத்தி செம்மை செய்தவர் அகத்தியராவரெனக் கூறப்படுகிறது. இவரே சிவனிடத்தும், குமரக் கடவுளிடத்தும் செந்தமிழின் இயல்புகளைக் கற்றுணர்ந்தார் என்றும் சொல்லப்படுகின்றது. பொதியமலையின் பாங்கரிலுள்ள காடுகளையெல்லாம் நாடாக்கி, அதற்கென அகத்தியம் எனும் சிற்பநூலை அவரே உண்டாக்கினர். பாணினி, காசியில் கூட்டிய சமஸ்கிருத

கழகத்தில் அகஸ்தியர் சேர்க்க மறுக்கப்பட்டாரென்
றும், அதனால் வேங்கடம் அடைந்து குமாரக் கடவுளை
வழிபட்டுச் செந்தமிழை நூதனமாகப் பயின்று அகத்தியம்
முதலிய பல நூல்களைச் செய்தருளினார் எனக் கூறப்படு
தலுமுண்டு. எனவே, தந்தை மொழியாகிய ஆரியம் தாய்
மொழியாகிய தமிழுக்கு முந்தியதெனப் பெறப்படுகின்றது.
அகத்தியர் பொதிகை மலையை அடைந்து தமிழ்மொழியை
ஆக்கிய காலமும், இராவணன் கைலாயத்தைப் பெயர்த்
தெடுக்கமாட்டாது நைந்துண்டு சாமவேதம் ஓதித் தப்பிய
காலமும் மிக வேற்றுமைகொண்டதென்பது ஈண்டுக்
குறிப்பிடத் தக்கது.

அகத்தியத்தின் வழிவந்த தொல்காப்பியத்தில் திசைச்
சொற்களைக் குறித்துப் பேசப்படுவதால், ஆரிய மொழி
களும், எழுத்துக்களும், அக்காலத்திலும் தமிழ்மொழி
களுடன் கலந்து விளங்கினவென்பது நன்கு அறியக் கிடப்
பதாம். எனவே, ஆரியரின் தென்னாட்டு வருகை தொல்காப்
பிய காலத்திற்கு முந்தியதென்றும் அன்றி சமத்துவம்
பெற்றதென்றும் கோடல் தவறன்று. பிந்திய சமத்து
வத்தை உபசார வழக்காகக் கொள்ளுதலே முறையாம்.
இவைகளினின்று மற்றொன்றும் பெறப்படும். அதாவது,
தமிழ்மொழி, கைக்குறி, கட்குறி, ஒலிக்குறி ஆகியவைகளி
லிருந்து உண்டான காலத்திற்கு முன்பே, தொல்காப்பியம்
ஏற்படுவதற்கு முன்னரே, ஆரியரும், ஆரிய மொழியும்
தென்னாட்டில் புகுந்திருத்தல் வேண்டுமென்பது சந்தேக
மறப் பெறப்படுவதாம்.

மேலே கூறியவாற்றால் ஆரியர், தமிழ்நாட்டிடையே
குடிபுகுந்து பல்லாயிரம் ஆண்டுகள் - ஏன் - யுகங்கள்
ஆகிவிட்டபடியால், இப்பொழுது தூய ஆரியர் இன்னார்.
தூய (திராவிடர்) தனித் தமிழர் இன்னார் என்று எவரே
பிரித்துக்காட்ட வல்லார்? தூய ஆரியராதல், தூய தமிழ

ராதல் இந்நாட்டின்கண் இந்நாள் இல்லை யென்பது வலி யுறுத்திப் பெறப்படும் உண்மையாம்.

மற்றும் ஒன்றே கூறி முடிப்போம். இந்நாட்டில் பிறந்து வதிந்த சேரன்செங்குட்டுவனும், இளங்கோவடி களும் வெவ்வேறு சமயக் கொள்கையுடையவராயினும், ஒரே தாய்வயிற்றிற் பிறந்த சேய்களாதலால் அவரிடை எவ்விதப் பகைமையுமின்றி அன்புடன் வாழ்ந்து நமக்கு வழி காட்டியுள்ளனர். எனவே, இந்த அத்தியாயத்தால் பெறப் படுவது என்னையெனின், விஸ்வகர்மப் பிராம்மணர்களான சிற்பாச்சாரியர்கள், ஆரிய வர்த்தத்தினின்றும் தென்னாடு வந்த ஆரியர்கள் அல்லது அறிஞர்களென்றும், தங்கள் சுயபாஷையாகிய சமஸ்கிருதத்தை மறந்து, தென்னாட்டு பாஷைகளில் தேர்ந்து நாட்டின் முன்னேற்றத்திற்கான பலபணிகளைப் புரிந்தனரென்பதும், அவர்கள் சந்ததியர்கள் இன்றும் புரிந்து வருகின்ற ஆசிரியர், அறிஞர், அக்க சாலைத் தலைவர், கம்மாளர், கண்ணுள்வினைஞர், சிற்பர், அற்புதர், ஆவார்களென்பதும் சந்தேகமற சித்திக்கும் உண் மையாம். ஆகையின், விஸ்வகர்மர்கள் ஆரியத்திராவிடப் பகைமையால் அலைக்கப்படாது, பொது நோக்குகொண்டு சகோதரத்துவம்பூண்டு இந்நாள் வாழ்வதே சாலச்சிறப் புடைத்தாம்.



## 22. விஸ்வகர்மப் பிராம்மண மாங்கல்ய சூத்திரப் பிரபாவம்

இங்கு விஸ்வகர்மப் பிராம்மண மாங்கல்ய சூத்திரம் எனப்படுவது, விஸ்வப்பிராம்மணர்களுக்கான மாங்கல்ய சூத்திரமெனவும், விஸ்வப்பிராம்மணர்களால் சிருஷ்டிக்கப் படும் மாங்கல்யம் எனவும் பொருள்படும். இவ்விரண்டு பக்ஷத்தையும் இந்த அத்தியாயத்தில் விளக்குவாம்.

மாங்கல்யம், திருமாங்கல்யம், தாலி, தாலி, பொட்டு என்பவைகள் ஒருபொருள் குறித்த பல சொற்களாம். பொதுவாக, ஒரு பெண்மகளை மணக்கும் ஆடவன் பலர் அறியவும், பிறமக்களிலிருந்தும் ஒப்புக்கொள்ளும் வண்ணம் அவள் கழுத்தில் அணிவிக்கும் முத்திரை அல்லது சின்னமே மாங்கல்யமாம். அது கிரகாச்சிரம உரிமைப்பட்டயம் எனினும் பொருந்தும். இம்மாங்கல்யம், ஸ்திரீகள் அணியும் பிற ஆபரணங்களைப் போன்று வெறும் அலங்கார அணிகலனன்று. இஃது ஓர் சாஸ்திரீயமானதும், தெய்வீக அமைப்பை உணர்த்துவதும், வாழ்க்கைநிரமத்தை ஒழுங்கு படுத்துவதுமான ப்ரம்ம முத்திரையுமாகும். இதனை அணி வித்தல் புராதன வழக்கப்பாட்டையொட்டி நாளும் அநுஷ் டிக்கப்பட்டு வருவதாகும். இது தோன்றிய காலவரையை அறுதியிட்டுக் கூறக் கூடாவிடினும், இது சுபர்ண ரிஷியின் சந்ததியார் செய்யும் முத்திரையாதலால் அச் சந்ததியார் தோன்றிய காலந்தொட்டே வழக்கப்பாட்டில் இருந்து வருமெனக் கோடல் தவறன்று. எனவே, மாங்கல்யம் அணிவித்து, மணவினை புரிந்து இல்லறத்தினைக் கொள்ளுதல் சாஸ்த்ர ஸம்மதமான வழக்கென மதிக்கப் படுகின்றது.

ப்ராம்மம், தைவம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம் ஆகிய நான்கு வகை விவாஹங்களுக்கு, விஸ்வகர்மப் ப்ராம் மணர்களாயினும், ஆறுவகைப் பார்ப்பனர்கள், க்ஷத்திரியர் கள், வைசிய சூத்திரர்களாயினும், தேசாசாரப்படிக்கும், வருணாச்சிர முறைப்படிக்கும் அவரவர்கட்கு விதிக்கப் பட்டபடி திருமாங்கல்யாதி விவாகச் சின்னங்களை அணி வித்தல் மிக இன்றியமையாத கடமையெனக் கருதப்படு கின்றது.

இனி மாங்கல்யம் தரிப்பதற்கான வேதாதிகாரத்தை நோக்குவோம் :

பாதூஷப்ரயோகம், விவாக விதி சுலோகம் :

" மாங்கல்யம் தந்துனானேன - மமஜீவனஹேதுனா
கண்டே பத்னாமி சுபகே - த்வம்ஜீவசரதாம் சதம் "

எனச் சாற்றுவதால், ஓ கன்னிகையே! நீ என்னுடைய நல்வாழ்க்கையின் பொருட்டு சுபத்தைக் கொடுப்பதான இந்த மாங்கல்யம் கோர்க்கப்பெற்ற கயிற்றை உனது கழுத்தில் பூட்டுகிறேன். அதனால், நீ எப்பொழுதும் சுக ஜீவியாகப் பொருந்திவாழ்ந்து பூரண ஆயுளுடன் இருப்பா யாக, என்பதாம். மாங்கல்ய இலட்சணத்தை சிற்பம் விஸ்வ கர்மீயம், பஞ்சம அத்தியாயம் 17 முதல் துவங்கும் சுலோ கங்களில், " மாங்கல்யம் விஸ்வரூபம் - ப்ரணவம் ஓங்கார ரூபேயோ : அகாரே உகாரயோஸ்ச் சைவை, - மகாரேரா தியதேஸ்ருதி - அகாரே வர்த்து லாகாரம், உகாரே சது ரஸ்ரகா, மகாரே த்ரிகோணம்ஸ்யாத், ரிபாதம் ஏகத்வா ரயோ :, ஸோமார்க்க சக்ரபாணம்யாம் - மாங்கல்யம் விதி லக்ஷணம் " எனக் கூறும் சுலோகங்களின் தாத்பர்ய மாவது : மாங்கல்யமானது பிரணவ ஸ்வரூபமுள்ளது. அப் பிரணவஸ்வரூபம் ஓ'காரம் என்னும் அக்ஷரவடிவமானது. அவ்வோங்காரமோ, அகாரம், உகாரா, மகாரமாகிய மூன் றும் சேர்ந்து ஒன்றாய் ஒலிக்கக்கூடிய ஓர் ஏகாக்ஷரமாகும். அவ்வக்ஷரத்திலுள்ள அகாரம் சக்கரம்போல் வளைந்த உருவமுடையது. அது சிரசு ஆகும். உகாரம் நாற்சதுர உருவமுடையது. அது மார்பாகும். மகாரம் மூன்று கோண உருவமுடையது. அது மர்மஸ்தானத்தின் ரூபமுடையது. இந்த ரூபங்களோடு மூன்றுபாதங்களையும், ஒரு துவாரத் தையும் கொண்டு அவைகளின்மேல், சந்திரன், சூரியன், சங்கு, சக்கரம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டுப் பிரணவா காரமாய் விளங்குவதாம். இதுவே மாங்கல்ய சூத்திர லக்ஷண விதியாகும். திருமாங்கல்யம் அல்லது தாலிகள் பலவகைப்படும். அவற்றுள், பிள்ளையார்தாலி, துண்டுத் தாலி, பார்ப்பனத்தாலி, சிறுதாலி, உட்கழுத்துத்தாலி,

தொங்குதாலி, தொடர்தாலி, பொட்டுத்தாலி, இரட்டைத் தாலி ஆகியவைகளே முக்கியமானவைகளாம்.

திருமாங்கல்யதாரணத்தை அடிப்படையாகக்கொண்ட பாணிக்கிரகணம் என்னும் விவாகச் சடங்கை திரிமூர்த்திகளும், குமாரக் கடவுளும், தேவேந்திரன் முதலிய தேவர்களும், அரிச்சந்திரன் ஆகிய சக்கரவர்த்திகளும் அநுஷ்டித்துள்ளார்களென்பது புராண இதிகாசங்களால் பிரசித்தமாகும். ஸ்ரீ கச்சியப்ப சிவாச்சாரியார் அருளிச்செய்த கந்தபுராணம், உற்பத்திக்காண்டம், திருக்கல்யாணபடலம், 69, 70, 71, 78, 79ம் செய்யுள்களால், பார்வதியம்மையார் திருமணத்தை, விஸ்வருடன் புரோகிதனாகவும், பிரம்மன் ஆச்சாரியனாகவும் இருந்து, மங்கல முறைப்படி பரமேஸ்வரனுக்கு விவாகம் செய்வித்ததாக மிக விமரிசையாகக் கூறப்பட்டுள்ளது. இன்னும் கந்தபுராணம், தேவகாண்டம், தெய்வயானையம்மை திருமணப்படலம் 245, 246, 247ம் செய்யுள்களாலும், கடைசி செய்யுளின் ஈற்றடியில்,

> "மங்கல நாணே மணிக்களமார்த்து நங்கை முடிக்கோர்
> நறுந்தொடை சூழ்ந்தான்"

எனப்படுவதால், மங்கலநாணின் முக்கியம் வலியுறுத்தப் பெற்றுள்ளது. மேற்குறித்த பாடல்களால், இந்திரன் ஸ்ரீ குமாரக்கடவுளின் கையில் தெய்வயானையைப் பிடித்துக் கொடுக்க, கன்னிகாதானமாக தாரைநீரை மந்திர பூர்வமாக பிரம்மதேவன் வார்க்க, குமாரன் திருமாங்கல்யத்தோடு கூடிய கயிற்றைத் தெய்வயானையின் கழுத்தில் பூட்டி, நறுமலர் மாலையொன்றைச் சூட்டினான் என்று விவரிக்கப்பட்டுள்ளது.

இன்னும் கந்தபுராணம் தக்ஷகாண்டம் வள்ளியம்மைத் திருமணப்படலம் 192 - 200ம் செய்யுள்களில், சிவசுப்பிரமண்யர் வள்ளியை சிறையெடுத்துச் சென்றபோது, வேடர்களாகிய அவளது உறவினர்கள், ஓ, எங்கள் குலதெய்வமே!

எங்களது பெண்கொடியை எங்கள் குறிஞ்சியில் இரவில் புகுந்து, கவர்ந்துசென்று எங்கள் குலத்துக்குத்தீராத பழிப் புரையை உண்டாக்கினீர். ஆகையால், கெட்டது கெட்டு விட்டது என்று இராமல், அக்கன்னிகையுடன் எங்க ளூருக்கு வந்து, அக்கினி, ஆதித்தன், கடவுள், பந்துக்கள் சாட்சியாக, மாங்கல்யதாரணஞ்செய்து திருக்கல்யாணத்தை நிறைவேற்றிச் செய்வீராயின், உமது பெருமைக்கும், எங் கள் குலத்திற்கும் யாதொரு இழுக்கும் ஏற்படாதெனப் பிரார்த்தித்தார்கள். அதற்கிணங்கிய குமாரக்கடவுளுக் கும், வள்ளியம்மைக்கும் நாரதமுனிவரால் மணவினையும், மாங்கல்யதாரணமும் செய்யப்பட்டதெனக் கூறப்பட்டுள் ளது. இன்னும், பெரிய புராணம் தடுத்தாட்கொண்ட சரிதையில் 10-வது பாடலில், "மங்கலம் பொலியச் செய்த மணவினையோலை யோதி" என்றும், "பணைமுரசியம்ப வாழ்த்திப் பைம்பொன் நாண்காப்பு செய்தார்" என்றும், 18-வது பாடலில் "வதுவைக்கு நேர்மையினால் சிகழ்ச் செய் தார்" என்றும் கூறப்படுகின்றது. மேலும், ஸ்ரீ அருண கிரிநாதர் அருளிச்செய்த மயில் விருத்தம் என்ற நூலின் முதல் பாடலில், "இந்திராணி மாங்கல்யதந்து ரக்ஷாபரண விகல்வேல் விநோதன்" எனும் ஈற்றடியால், குமரவேள், சூரபத்மன் ஆகிய அசுரர்களைத் தமது வேலாயுதத்தால் சங் கரித்து இந்திரனுக்கு உயிர்ப்பிச்சை தந்து அவனது மனைவி யாகிய இந்திராணியின் மங்கல்யத்தைக் காப்பாற்றினார் எனக் கூறுவதாலும், கம்ப இராமாயணம். சுந்தரகாண் டம், காட்சிபடலம் 48-ம் பாடலால், திரிசடை தான்கண்ட கனவை சீதாதேவிக்கு, "மங்கலத் தாலி நாண் தன்னை மற்றையோர் அங்கையில் வாங்கினரெவருமின்றியே கொங் கையில் வீழ்ந்தன குறித்த வாற்றினை விங்கிதனற் புதமின் னும் கேட்டியால்" என இலங்கையிலுள்ள பெண்களின் தாலியை யாரும் கைநீட்டி வாங்குவாரின்றி அவரவர்கள் தனத்தின்பேரில் அறுந்து வீழ்ந்தன. இதுவே நான்கண்ட

கனவு என திரிசடை கூறியவாற்ருல், இராவணன் காலத்திலும், இராக்கத மாதர்கட்கும், விவாகச் சின்முத்திரையான மாங்கல்யம் உண்டெனப் பெறப்படும். அவர்கள் அசுரமணத்தில் ஈடுபடாது வெகு நாகரிக மணத்தையே நாடினுர்களென்பதும் வலியுறுத்திப் பெறப்படுவதாம்.

இன்னும் அரிச்சந்திர புராணம் விவாக காண்டம் 237-ம் பாடலில், "கன்னி யென்றெண்ணினங் கன்னியோவலள் முன்னமே மங்கலம் பூண்ட மொய்குழல்" என்று சந்திரமதியின் உடன் பிறந்த தாலியை, அவளது கண்ணுக்கும் தோன்ருதவாறும், பரிசிக்க முடியாதவாறும் பரம் சிவனுல் அளிக்கப்பட்ட தாலியை, அவளை மணம் புரியும் காவனுக்கன்றி மற்றெவருக்கும் காட்சி யளிக்காதிருக்க வரம்பெற்ற பொற்ருலியை, அரிச்சந்திரன் ஒருவனே கண்டு, முன்னரே விவாகமான மங்கையை மணப்பதெப்படியென ஐயுற்று வினவியதாகக் கூறப்படுவதாலும், அரிச்சந்திரன் விஸ்வாமித்திரரின் கொடுமையால் அரசிழந்து, சதியைப் பிரிந்து இடுகாட்டில் பிணங்களைச் சுடும் வெட்டியாஞக யிருந்த காலை, அரவந்தீண்டி இறந்த தன் மகனை சந்திரமதி காசுகொடாமலே கொளுத்த முயன்றபோது, அரிச்சந்திரனுல் தடுக்கப்பட்டுக் கூலிகொடுக்கக் கட்டாயப் படுத்தப்பட்டாள். சந்திரமதியோ தான் ஒரு பணிப்பெண் என்றும், கையில் ஒரு காசுகூட இல்லையென்று இரங்கிக் கூறினுள். அரிச்சந்திரன் சந்திரமதியை அச்சுறுத்தி உன் கழுத்திலுள்ள தாலியைக் கொடுவென்று கேட்டபோது, சந்திரமதி அலறிப் புடைத்து வீழ்ந்தழுது தேவர்களும் காணமுடியாத தன் தாலியை நீசனெருவர் பார்க்கநேர்ந்த கொடுமையை நினைந்து கரைந்து அழுதாள் எனக் கூறப்படுவதாலும், திரேதா யுகத்தில் அரசு புரிந்த ஸ்ரீ இராமனின் இருபத்தொன்ரும் தலைமுறைப் பாட்டனுகிய அரிச்சந்திரன் காலத்திலேயே திருமாங்கல்ய முத்திரை விவாக காலங்களில் அணியப் பெற்றனவென்ருல், அதன் தொன்மையையும்,

தெய்வத் தன்மையையும் விளக்க வேறு சான்றுகள் வேண்டுங்கொல்? மேலும், திருவிளையாடற் புராணம் திருமணப் படலம் 185-ம் செய்யுளிலும், கலியுகம் 97-ல் அவதரித்த ஆண்டாள் அருளிய திருப்பாவை 7-ம் செய்யுளிலும் மணவினையும், மாங்கல்யதாரணமும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. நமது மூதாட்டியரான ஒளவை பிராட்டியாரும் மாங்கல்யச் சிறப்பினை ஒரே பாட்டால், "தாயோடறு சுவைபோம், தந்தையொடு கல்விபோம், சேயோடு தான் பெற்ற செல்வம்போம் - ஆயவாழ் வுற்றாருடன்போம், உடன் பிறப்பாற்றோள் வலிபோம், பொற்றாலியோ டெவையும் போம்" என விளக்கி, பொன்னாலாகிய தாலியைத் தரித்த மனைவி இறந்துவிடின், அவளுடன் சகல மனைமாட்சியும் அழிந்து படுமெனக் கூறிப் போந்தார். கற்பிற்கரசியான கண்ணகிக்கும் மாங்கல்யம் உண்டென சிலப்பதிகாரம் கூறும். திருச்செந்தூரில் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் மய விஸ்வகர்மாவால் சிருஷ்டிக்கப் பட்ட சுப்பிரமண்யர் தேவாலய முகப்பிலுள்ள ஒரு கற்றூணில், ஸ்ரீ குமாரன் திருக்கல்யாணச் சிறப்பைச் செதுக்கியுள்ள ஓவியத்தில், கடவுளர் கையில் திருமாங்கல்ய சரடு தாங்கி நங்கையருக்குத் திருப்பூட்டிடும் பாவம் வெகு அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. எனவே, திருமாங்கல்யத்தின் தொன்மையும், தெய்வத் தன்மையும் தேவர்களாலும் போற்றப் பட்டதென்றால், மானிடர்கள் அதன்பால் எத்தனையளவு பக்தி சிரத்தைகாட்ட வேண்டுமென்பது தெள்ளிதில் விளங்கும்.

சென்னை மயிலை கபாலீஸ்வரர் ஆலயமும், திருவாரூர் தியாகேசர் ஆலயமும் தோன்றிய காலந்தொட்டு வருடந்தோறும் நடைபெறும் பங்குனி உத்திர உத்ஸவ காலத்தில் ஆயிரக் கணக்கான மாங்கல்யதாரணங்கள் சர்வ சாதாரணமாக நடைபெற்றுவரும் வழக்கப்பாடொன்றே இதற்குப் போதிய சான்றாம்.

இனி திருமாங்கல்யம் செய்யும் ஒழுங்குப்பாட்டைக் கூறுவோம். சிற்பநூல், ஓவியநூல் தேர்ச்சி பெற்றவரும், திரிகால சந்தியாவந்தனம், அக்னிஹோத்திரம் செய்பவரும், பிறர் பொருளை இச்சியாதவரும், மனைவி மக்கள் சுற்றந் தழைத்தவரும், பொய் பேசாதவரும், மிருதுபாஷியான வரும், ஹஸ்தவிசேஷமுடையவரும் ஆகிய ஒரு விஸ்வக்ஞ ஆச்சாரியரைத் தேர்ந்தெடுத்து, திருமாங்கல்ய முத்திரையை சாஸ்த்ரோக்தமாகச் செய்தல் வேண்டும். தாம் வேலை செய்யும் இடத்தைச் சதுரமாகப் பட்டு வஸ்திரங்களால் மறைத்துக்கொண்டு, இரும்பு சுயாக்கினியால் நெருப்புண் டாக்கி பொன்னை உருக்கித் தகடடித்து மாங்கல்ய சூத்தி ரத்தைச் செய்தல் உத்தமமாம். அவ்வாறு சுப காலத்தில் செய்து முடித்த மாங்கல்யத்தை சிறிய பட்டுத்துணியி லாவது, தாமரை, ரோஜா, மல்லிகை மலர்களின் இதழ்களி லாவது மூடி, அதைத் தராசிலிட்டு எடையிடாமலும், மந்தி ரங்களை உச்சரித்துக்கொண்டே கொடுக்க வேண்டுமென் பது விதியாம். அதை ஆச்சாரியன் கையிலிருந்து வாங்கும் போது, அஞ்சலிசெய்து பெறுவதுடன், வரன் வதுவைப் பெற்றோர், வஸ்திரம், சுவர்ணம், தக்ஷிணை ஆகியவைகளைத் தாம்பூல பழவர்க்கங்களுடன் அப்பொற்கொல்லர்க்கு வழங்குதல் முறையாம். இஃதிவ்வாறாக, இக்கலியுகத்தில், திருமாங்கல்ய வேலையின் சிறப்பு மறக்கப்பட்டு, சில காலமாக இந்நாட்டில் விபரீதமாக நடைபெறுகின்றது. கரும் பொன் எனப்படும் இரும்புக் கடைகளில் பலதரப்பட்ட பாதரட்சை ஆணிகள் செய்து விற்பனையாக்கப்படுவது போல், அந்நிய ஜாதியர் வைத்துள்ள ஆபரணக் கடை களில், பலதரமும், அளவும், எடையும் கொண்ட தாலிகள் விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன. அவைகளில் எது புதிய தென்றும், விஸர்ஜனம் செய்யப்பட்டுப் புதுப்பிக்கப்பட்ட தோஷமான தாலி எதுவென்றும் கண்டறிய முடிவதில்லை. அவ்வித விற்பனைத் தாலிகளைச் செய்து தரும் விஸ்வகர்மர்

களுக்கும், விற்பனை செய்யும் முதலாளிகளுக்கும் மீளாப் பாவத்தைத் தந்து, வம்ச நாசத்தையும் உண்டுபண்ணுமென எல்லா சுருதிகளும், முக்கியமாக கௌமாரசம்ஹிதை எனும் திவ்ய சாஸ்திரமும் கூறுவனவாம். இன்று விஸ்வகர்மர்கள் செய்துவரும் இந்த அடாத பாபகிருத்தியத்தால், கலியுகம் பிறந்த 5000 ஆண்டுகளுக்குப்பின், தாங்கள் இழந்த உச்ச நிலையை மீளவும் அடையப் பெறுவார்களென * விதித்திருந்தும், அதனை இன்றளவும் அடையாதவர்களாகவே இருந்து வருகின்றனர். இத்தகைய துஷ்கிருத்தியங்கள் எக்காலத்தும், எவ்வித நன்மையையும், சுயமரியாதையையும், குலமரியாதையையும் அளிக்கமாட்டாதென்பதை உறுதியாகக்கொண்டு திருமாங்கல்யங்களை சாஸ்த்ரோக்தமாக இனி செய்து கொடுத்தலே விஸ்வக்ஞ வகுப்பாரின் குலதர்மமாகும். ஒருவர் இழைக்கும் பாவம் அவரை மட்டும் பிடிப்பதாம். ஆயினும் ஒரு குலத்தில் ஒரு வகுப்பார் செய்யும் பாபகிருத்தியங்கள் நிரபராதிகளான இதர வகுப்பார்களையும் பிடிக்கும் எனும் உண்மையை இனி விஸ்வகர்ம விஸ்வக்ஞர்கள் சத்தியமாகக் கொள்ளக்கடவர்.

திருமாங்கல்யங்களைச் செய்வதற்கு, சித்திரை, வைகாசி, ஆனி, தை, பங்குனி மாதங்களும்; வாரங்களில் திங்கள், புதன், வியாழன், வெள்ளியாகிய நாட்களும்; அஸ்வினி, ரோகணி, மிருகசீரிடம், புனர்பூசம், பூசம், மகம், உத்திரம், அஸ்தம், சுவாதி, அனுஷம், திருவோணம், அவிட்டம், சதயம், ரேவதியாகிய நக்ஷத்திரங்களும்; துவாதசி, திரிதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி ஆகிய திதிகளும்; ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம் ஆகிய லக்கினங்களும் உரிய சுப காலங்களாம். லக்கினத்துக்கு இரண்டாமிடம் சுத்தமாக இருக்கவேண்டுமென்றும் விதிக்கப்பட்டுள்ளது. எனவே,

* காலக்கியானத்தில்

நமது மூதாதையர்கள் திருமாங்கல்யம் என்னும் தெய்வ முத்திரையைச் செய்து வழங்குவதில் எத்துணை கவனம் செலுத்திவந்தனர் என்பது மேலே கூறியுள்ளவாற்ருல் தெள்ளிதில் விளங்கும்.

---

## 23. இலங்கை வாழ் விஸ்வகர்மப் பிராம்மணர் விளக்கம்

இந்நூலின் கண் இலங்கையைப் பற்றிய பல குறிப்புக்கள் முந்திய அத்தியாயங்களில் ஆங்காங்கு கொடுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் 16 வது அத்தியாயத்தில் இலங்கையிலிருந்த மாந்தை நகரைக் குறித்தும், ஆண்டு வதிந்த சிற்பிகளின் பிரதாபமும் மிக விரிவாகக் கூறப் பெற்றுள்ளன. 19வது அத்தியாயத்தில் இலங்கை வாழ் விஸ்வகர்மப் பிராமணர்களைக் குறித்த பல்வேறு கல்வெட்டுச் சாசனங்களைப் பற்றியும் விளக்கம் தரப்பெற்றுள்ளது. முற்காலத்தில் தென்னாட்டுக்கும், இன்று தனித்திருக்கும் இலங்கைக்கும் உள்ள பிணைப்பு ஆங்காங்கு தொட்டுவிடப் பட்டுள்ளது. இந்தப் பகுதியில், இலங்கையைப் பற்றி விளக்காதுவிட்ட விவரங்களையும், ஆண்டு இன்று வதியும் விஸ்வகர்மப் பிராம்மணர்களின் பூர்வீகச் சிறப்பையும், பிறப்பின் உத்கிருஷ்டத்தையும் ஆதார பூர்வமாக எடுத்துக் கூறுவோம்.

தென்னாடு, இலங்கையை உள்ளிட்டு இற்றைக்குச் சுமார் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் தொடர்ச்சியான நிலப்பரப்பாயிருந்ததென்றும், இப்போதுள்ள இந்துமகா சமுத்திரம் முதன் முதலில் உற்ற கடற்பெருக்கால் தோன்றியதென்றும், அன்றுதொட்டு இலங்கை தென்னாட்டினின்றும் பிரிவுபட்டு ஒரு தீபமாயிற்றென்றும், பிற்காலத்தில் அதன் விஸ்தீரணம் மிகக் குறுகிற்றென்றும், சரித்திர

ஆராய்ச்சி வல்லோர் அறுதியிட்டுள்ளனர். இப்பொழு துள்ள இத்தீவு 271½ மைல் நீளமும், 137½ மைல்அகலமும்' 760 மைல் சுற்றளவும் கொண்டதாகும். இதைச் சேர்ந்த நாடுகள் எழுநூறு காதம் விஸ்தீரணம் உடையன. இது சூரிய சித்தாந்தத்தில் சொல்லப்பட்ட மேகலா நகரங்கள் நான்கனுள் ஒன்றும். ஆதி இலங்கை மேகலா ரேகையில் இருந்தது. மேலே கூறியவாறு இப்போதுள்ள இலங்கை கடலாற் கொள்ளப்பட்ட இலங்கையின் சிறு கூறும். எஞ் சிய பெரும்பாகம் கடலாற்கொள்ளப்பட்டிருத்தல் வேண்டு மென ஊன்றிப் பெறப்படுவதொன்றும்.

இராமாயண காலமாகிய திரேதா யுகத்திற்கு முன் தென்னாடும், இலங்கையும் தொடர்ச்சியான ஒரே நிலப் பரப்பாக இருந்திருக்க வேண்டுமென்பது உறுதிப்படுகின் றது. அக்காலத்தில் திரிகூட பர்வதத்தின் சிகரத்தில், கோட்டை, அரண் முதலியன ஸ்ரீ விஸ்வகர்மாவால் இலட் சம் யோசனை விஸ்திரண முள்ளவைகளாகச் சிருஷ்டிக்கப் பட்டதாகச் சரித்திரம் பகர்வதாம். இக்கோட்டை யோடு கூடிய இலங்கையை முதலில் மால்யவந்தனும், இரண்டாவது குபேரனும், கடற்கோளுக்குப்பின், மூன் ருவதாக இராவணனும், இறுதியாக விபீஷணனும் ஆட்சி புரிந்தனர். இந்நகர் ஒருமுறை அநுமானால் தீயிடப்பட்டு மீண்டும் மய விஸ்வகர்மாவால் புதுப்பிக்கப்பட்டது. ஆயி னும், சில புராணங்களில் இலங்கை ஒரு தனியான தீப மென்றும் அதற்கும் தென்னாட்டிற்கும் சம்பந்தமில்லை யென்றும் பலவாறாகக் கூறப்பட்டுள்ளன. வாயுபுராணத் தில் இலங்கையின் உற்பத்தியைக் கூறுமிடத்து, வாயுபக வானுக்கும், ஆதிசேடனுக்கும் வாக்குவாதம் மிஞ்சி, ஆதி சேடன் மேருவின் சிகரத்தில் அமர்ந்தனன் என்றும், அவ் வாறு நிலைகொண்ட ஆதிசேடனை, வாயுதேவன் அசைக்க முயன்றும் முடியாது போயிற்றென்றும், முன்னவன் சற்று கண்ணயர்ந்த வளவில், வாயுபகவான் அம்மலையைப் பிடுங்கி

கடலிற் பாய்ச்சினான் என்றும், அதுவே இலங்கைத் தீவு ஆயிற்றென்றும், கூறப்பட்டுள்ளது. இது அப்புராணத்தின் கற்பனைக் கூற்றென்பதும், வாயுபகவானின்—அப்புராணத்தின் அதிதேவதையை சிறப்பிக்கக் கூறிய மிகைபடு கூற்றென்பதும் தெள்ளிதில் விளங்கும். அதனோடும் இப்புராணக்கூற்றில் இலங்கை ஒரு தீவு என்று கூறப்பட்டிருப்பதால், இந்நூல் இராமாயண காலத்திற்குப் பின் சிருஷ்டிக்கப்பட்டதென்பதும் நனி விளங்கும். இல்லையேல், இலங்கைக்கும் தென்னாட்டுக்கும் உள்ள பிணைப்பின் சின்னங்களும், மக்களின் உறவும், வழிபடு கடவுளர்களின் தொடர்பும் இத்துணை மலிந்திருக்க, இதனை முன்னவர் ஒரு தனிப்பட்ட தீவு எனக் கருதுவது ஆதார மற்றதாகும்.

மேலும், வைவஸ்வத மனுக்காலத்தில் அன்று தென்னாட்டிலிருந்த மதுரை 100000 வருடங்கள் காடாயிருந்து இந்த மனுவம்சத்தில் பிறந்த கீர்த்தி பூஷணனிடம் அகத்தியர் மதுரைமா நகரின் அவசியத்தைக் கூறிக் காடு கெடுத்து பெருமை வாய்ந்த நாடாக்குவித்தனர். கீர்த்தி பூஷண பாண்டியனும், அவனுடைய சந்ததியார்களும், ஆலவாய் என்னும் அந்த நகரத்தை 60000 ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தனரென்றும், அதற்குப்பின் வம்ச சேகரன் பரம்பரையின் ஆட்சி 20,000 ஆண்டுகள் நிகழ்ந்ததென்றும், அக்காலத்தே சுந்தரப் பேரம்பு எய்தபட்டதென்றும், சங்கப்பலகை யிடப்பட்டதென்றும் கூறப்படுகின்றது. இக்காலத்தில் விக்ரமசோழன் இந்நாட்டின்மீது படையெடுத்துச் சென்றதாகக் கூறப்படுவதாலும், மரக்கலப்படையையும் கொண்டு சென்றதாகக் கூறப்படாமையால், தென்னாடும், இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக அக்காலத்திலிருந்ததென்பது மிக வலியுறுத்திப் பெறப்படுவதாம். பிற்காலத்தில் அரசாண்ட வரராமன் என்னும் அரசன் உயரிய திரிகோண மலையில் பல திருப்பணிகள் செய்வித்தான். இவன் குமாரன் குளக்கோட்டன் அரசு புரிந்த காலத்தில் பல

கோவில் திருப்பணிகளை முடித்ததாக ஆதார பூர்வமாகக் கூறப்படுகிறது. இவ்வரசன் காசி வரையிற் சென்று கை தேர்ந்த சிற்பர்களைத் தேடிப்பிடித்துக் கொணர்ந்தனென சரித்திரம் பகரும். இவ்வரசன் மரபில் வந்த கயவாகு சகல வளப்பமிகுந்த இலங்காபுரியின் அரசனானான். இவ்வரசன் பௌத்த மதத்தை ஆசிரயித்து ஸ்ரீசங்கரபோதி என்னும் மாறுபெயருடன் இலங்கை நகரை யாளுகையில், பாசுபதர் என்னும் முனிவர் சிவபூசைக்கு அரண்மனையைச் சூழ்ந்திருந்த நந்தவனத்தில் மலரெடுத்துச் சென்றனர். அவரை வழிமறித்து புத்த அரசன், அம்மலர்களைப் பிடுங்கி வீசி எறிந்தான். பாசுபதர் வெகுண்டு புத்தரைக் கடலில் வீழ்த்தினார். இவன் கரை சேர்ந்து, சிவனை புத்தனாக்குவேன் எனச் சூளுரைத்துப் புறப்பட்டான். அவனது இரண்டு கண்களும் ஒளி மழுங்கின. அரசன் மயங்கி வருந்தி வேண்ட, சிவன் ஒரு முனிவர் உருவில் தோன்றி, விபூதி பிரசாதிக்க, அரசன் 'சிவ, சிவ' என்று நெற்றியிலும் கண்ணிலும் தரித்துக் கொள்ள ஒரு கண் மட்டும் மீளவும் பார்வை பெற்றது. பின்னர் அரசன் திரிகோணமலை சென்று தீர்த்தமாடி ஸ்ரீ கோணேச்வரரையும், ஸ்ரீ மாதுமையம்மையையும் தரிசித்து வணங்க அரசனது இரண்டு கண்களும் ஒளி பெற்றனவென தக்ஷிண கைலாச தலபுராணம் கூறாநிற்கும். இவற்றின் உண்மை எவ்வாறாயினும் ஆகுக. ஆயினும் இத்தொன்றால் திரிகோணமலையில் அக்காலத்தில் ஒரு தொன்மையான ஆலயம் கட்டப்பட்டிருந்ததென்பது நன்கு விளங்கும். அதனோடும், ஸ்ரீ கேதீஸ்வரரும், ஸ்ரீ கௌரியம்மையும் கோவில் கொண்ட திருக்கேதீஸ்வர க்ஷேத்திரமும், அயிராவதம் பூசித்த ஸ்தலமாகிய கதிர்காம க்ஷேத்திரமும் அக்காலத்திலேயே பிரபல்லியம் பெற்றிருந்தன வென்பது சந்தேகமறப் பெறப்படுவதாம். இத்துணை வளம் பெற்ற இந்நாடு வேற்றரசர்களால் ஆசிக்கப்பட்டதென்றும், கரிக்கால் சோழமன்ன

ளுல் படையெடுக்கப்பட்டு அந்நாட்டுக் குடிகளைச் சிறைப் படுத்திச் சென்றனன் என்றும், கயவாகு அரசன் சோழ நாட்டின்மீது படையெடுத்துச் சென்று ஆங்கிருந்த ஈழ நாட்டுக் குடிகளைச் சிறைமீட்டு வந்தனன் என்றும், சோழ நாட்டு மக்களைச் சிறைப்படுத்தவோ, வதைக்கவோ இல்லை யென்றும் மகா வம்சம் கூறு நிற்கும். கயவாகு என்னும் பெயர் கொண்ட ஒரு அரசன் இற்றைக்கு 1750 ஆண்டு களுக்குமுன் இருந்தான் என்றும் இப்பெயர் கொண்ட பலர் பிற்காலத்தில் இலங்காபுரியை ஆண்டனரெனவும் கூறப்படுகின்றது.

இவ்வாறு சிறப்புற்றிருந்த அரசரின் மூதாதையான குளக் கோட்டனை, இலங்கையின் தெற்குப் பகுதியிலுள்ள அநுராஜ புரத்தையும் அதைச் சூழ்ந்த சிற்றூர்களையும் ஆண்ட புத்த சமயியாகிய மூலத்தாடகை என்னும் அரசி, குளக்கோட்டன் அரண்களையும், ஆலயங்களையும் கட்டு விப்பதைக் கேள்வியுற்று வெகுண்டு அவனைத் துரத் தும்படி ஒரு திரண்ட சேனையை அனுப்பினுள். குளக் கோட்டன் எதிர்த்து சமர்புரிந்து வென்று அவளை மணம் செய்துகொண்டான்.

திருக்கோண மலையிலமர்ந்துள்ள ஈசனின் சிறப்பு திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் அருளிய கீழ்க்கண்ட தேவாரப் பாசுரத்தால் உறுதிப்படுத்தப்படுவதாம்.

“ நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர் நீறணி திருமேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோண மாமலை யமர்ந்தாரே ”

என்றும் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழில்

" விலக்கு மேனி யிலணிக்கோவைமேகா ல * * *
நிலக்கு நான்மறை தவத்தான பூசுரர்
திருக்கோணமலை தலத்தாருகோபுர,
லக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில்வருவோனே"

எனப்படுவதாலும் அம்மூர்த்தி ஸ்தல தீர்த்த விசேடங்கள் மேலும் உறுதிப்படுத்தப்படுவனவாம்.

கோணேசர் ஆலயம் கட்டிய காலம் கலியுகாதி 512-ம் ஆண்டு என்பது அவ்வாலயத்திலுள்ள கீழ்க்கண்ட கல்வெட்டால் அறியக்கிடப்பதாம். அக் கல்வெட்டின் ஒரு பாகம் செய்யுள் ரூபமாகவும், மற்றொரு பாகம் வசன ரூபமாகவும் அமைந்துள்ளது. அக்கல்வெட்டு ஸ்ரீ ஞானசம்பந்தர், அருணகிரிநாதர் காலங்களுக்குப் பல்லாயிர வருட காலம் முற்பட்டதாகையால் அதை ஈங்குக் குறிப்பிடுவோம்.

" திருந்துகலி பிறந்தைஞ் ஞூற்றொருபதுட
னிரண்டாண்டுஞ் சென்றபின்னர்
புரிந்திடபமாதமலி லீரைந்தாந்
தேதிதிங்கப் புணர்ந்த நாளிற்
றெரிந்த புகழாலய மாஞ்சினகரமும்
கோபுரமுந் தேரூர்வீதி
பரிந்துரத்ன மணிமதிலும் பாவநாசச்
சுனையும் பகுத்தான் மேலோன் "

வசனபாகத்தில் வரும் கல்வெட்டில், அத் தேவாலயத் திருப்பணியை முடித்துத் தந்த ஐந்து சிற்பாச்சாரியர்களுக்கு "அஞ்சவணாவிரைப் புத்தரையுங் கொடுத்து, எக்காலமும் கோயிற்றொழும்புகள் செய்யவேண்டியபடி செய்திருக்க வேண்டுமென்று கோயிலுக்குள் இவர்களுக்கு ஒரு தலைமையும் கற்பித்தபடி யறிக" என்றிருப்பதால், குளக்கோட்டு மகாராசன் 4430 ஆண்டுகளுக்குமுன் இந்த திரிகைலாய ஆலயத்தையும், மதில்களையும், பாவநாசச் சுனையையும் படிக்கட்டும், மற்றும் சகல திருப்பணிகளையும், திருக்குளத்து மதகு ஆகியவற்றையும் விதிமுறையாகச் செய்வித்தானென்பது சந்தேகமற ஊன்றிப் பெறப்படும் உண்மையாம்.

ரூன் பர்த்ருஹரி அரசனால் அழிக்கப்பட்டதெனக் கூறப்படுவதால், இலங்கைமாந்தை நகர் ஓராயிரம் ஆண்டுகளே நிலைபெற்றிருந்ததெனப் பெறப்படுகின்றது.

இலங்கைவாழ் விஸ்வகர்மர்களின் பெருமை மற்றோர் வழியிலும் நிலைநாட்டப் பெறும். தேவகுருவான விஸ்வரூபன் இந்திரனால் வெட்டுண்டு மறைந்தபின் அவனது பிதாவாகிய துவஷ்ட்டா புத்திரசோகமடைந்து தேவலோகத்தினின்றும் இலங்கைக்கு வந்து திருக்கேதீஸ்வரர் க்ஷேத்திரத்தில் ஸ்ரீ திருக்கேதீஸ்வரரையும், ஸ்ரீ கௌரியம்மையையும் பூஜித்துத் தவங்கிடந்து விஸ்வகர்மா வென்னும் புத்திரரையடைந்து, அவர் மூலமாக இலங்கை தொட்டு காவிரிவரையில் பற்பல தேவாலயங்களும், திவ்யஸ்தலங்களும் சிருஷ்டிக்கப்பட்டனவென்பது வேதசம்மதம் பெற்ற கூற்றாகும். ஆகவே, விஸ்வகர்மர்கட்கு எல்லாச் சிறப்பையும் இலங்கையிலளித்த விஸ்வகர்மர் பெற்றுத் தந்தனரென இலங்கைவாழ் விஸ்வகர்மப் பிராம்மணர்கள் உலகம் உள்ளவரை பெருமை பாராட்டிக்கொள்வதற்கு உரிமை பெற்றவராவர்.

எனவே, வடநாட்டு விஸ்வகர்மர்கட்கும், தென்னாட்டு விஸ்வகர்மர்கட்கும் இன்றுள்ள தொடர்புக்கு மிக அதிகமாகவே தென்னாட்டு விஸ்வப் பிராம்மணர்கட்கும் இலங்கைவாழ் விஸ்வப் பிராம்மணர்கட்கும் தொழில், பாஷை, கொள்ளல், கொடுத்தல் ஆகியவற்றில் அந்யோந்ய சம்பந்தம் பெற்றவர்களாய்க் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாகவே இருந்து வருகின்றார்களென்பதும், ஒருவாறு நெருங்கிய இரத்த சம்பந்தம் கொண்டவர்களென்பதும் தென்னாட்டில் வதியும் விஸ்வகர்ம மக்கட்கு சமத்துவமுடையவர்களென்பதும் வலியுறுத்திப் பெறப்படும். இவ்வித அந்யோந்யத்தை மேலும் வளர்க்கவே இந்நூலாசிரியர், இச்சமூகத் தலைமை தாங்கிய காலந்தொட்டு இன்றளவும் முயன்று வருகின்றாரென்பது கண்கூடு.

——

# 24. இறுவாய்

சகோதரர்களே !

இந்நூலின் இறுவாய் கூறுங்கால் வாசகர்கள் அனை வரையும் சகோதரர்களெனக் கருதி, அவ்வாறே விளிக்கின் றோம். ஏனெனில், விஸ்வகர்மர்களை மட்டும் அவ்வாறு அழைத்தால், நாம் விரும்புமாறு மற்ற சமூகத்தாருடைய சகோதரத்துவம் ஏற்படுவது எங்ஙனம்? சுதந்திர இந்தி யாவில் எவ்வித பேதமின்றி எல்லா மக்களிடத்தும் அன் போடு கூடிய சகோதரத்வம் வளரவேண்டு மென்பது இந் நூலின் கருத்தாகுமன்றோ? முதற்கண் விஸ்வகர்ம சந்ததி யாராகிய ஆதிக் குழுவினரின் பிறப்பினுயர்வையும், தொழில் உன்னதத்தையும் மட்டும் ஏன் இந்நூலில் சிறப் பாக எடுத்துக் காட்டப்பட்டதென்றால், அவர்கள் புரா தனப் பிறவிகளென்றும், உலக நாகரிகத்தை வளர்த்தவர்க ளென்றும், நாட்டின் பல நலன்களுக்கு இன்றியமையாத வர்களென்றும், எல்லாச் சமயத்தினர்க்கும், ஜாதியினர்க் கும், உயர்வு, தாழ்வு பாராட்டாது உதவி வாழும் பொது வான மக்களென்றும் விளக்கிக்காட்டி, அம்மக்களிடையே பரஸ்பரம் அன்பும், சகோதரத்துவமும் காட்டப்படவும், அதன் வழியே நமது நாடு மென்மேலும் செழித்தோங்கி வளரவேண்டு மென்பதற்கேயாம். ஏனெனில், விஸ்வகர்ம மக்களின் தொழிலுதவி, உந்திக் கொடி அறுத்தல் தொட்டு, இறந்து காஷ்டத்தில் ஏற்றுமட்டும் உலக மக்களனைவரும் பெற்றுப் பெற்றே வருகின்றனரென்பதை எவரே மறுத் துக்கூற வல்லார்? எனவே, இச்சந்ததியாரிடம் உள்ளன் போடு சகோதரத்வம் பாராட்டாதவர் செய்ந்நன்றி கொன் றவர் ஆவர் என்பது மிகையன்று. ஒரு நாட்டின் பல அங் கங்களாகிய சமூகங்கள் பிணக்கும், பகைமையும் கொண்டு உயர்வு தாழ்வு கொண்டாடிக் கொண்டாடியே வாழ்வ

ராயின், அந்நாடு விரைவில் முன்னேற்றம் பெறாது கீழ் நோக்கிச் செல்லுமென்பது உறுதி. எனவே, பொதுநோக்குடைய அறிஞர்களும், கைத்தொழில் வல்லோரும், லோகோபகாரார்த்தமாகப் பொதுநலனை நாடி உழைக்கும் மக்களின் பெருக்கமே, எந்நாடாயினும் அந்நாட்டின் அரிய பொக்கிஷமெனக் கருதப்படுவதாம்.

இந்நூலின் கண்ணுள்ள முந்திய அத்தியாயங்களில், விப்வகர்ம சந்ததியாரின் பிறப்பின் பெருமையை வேத இதிகாச புராண ஆதாரங்களால் தெளிவாக்கப்பட்டுள்ளது. பகுத்தறிவு கொண்டு, காய்தல் உவத்தலின்றி ஆழ்ந்து நோக்குவோருக்கு அவற்றுள் பொதிந்து கிடக்கும் உண்மைகளும், தத்துவார்த்தங்களும் பசுமரத்தாணியென நன்கு பதிவனவாம். இல்லையேல், அவற்றை வெறுங் கதைகளென்றும், ஒருதலைச் சார்பான கூற்றுக்களென்றும், அறியாமை, அழுக்காறு ஆகிய இருதாமதக் குணங்களின் பாற்பட்டோர் கருதுவது இயல்பு. ஆயினும், அறிவாளிகளும், இயற்கைக் கலைஞர்களும், விஞ்ஞான அறிவு படைத்தோரும், தாம் கண்டறிந்துள்ள பிரபஞ்ச உண்மைகளுடன் விஸ்வகர்ம சந்ததியாரின் பெருமையை, இந்நூலில் கூறியுள்ள உண்மைகளுடன் பொருத்திப் பார்க்க விரும்பினும் விரும்பலாம். அவ்வித நியாயமான விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முனைதல் நமது கடனேயாகும்.

இனி புராணக் கூற்றுக்களினின்றும், இயற்கை தத்துவத்தைப் பிரித்து, இக்காலக் கண்கொண்டு நோக்குவோம். எனவே, இயற்கைத் தோற்றத்திற்கும், அழகுக்கும், நிலைக்களனாகிய இவ்வுலகத் தோற்றத்தை முதற்கண் ஆராய்தல் அவசியமாகும். நாம் வதியும் இப்பூமி, பல்கோடிக் கணக்கான ஆண்டுகளுக்கு முன், ஞாயிறு எனப்படும் சூரியனாகிய எரிக்கோளினின்றும் எக்காரணம் பற்றியோ பிரிவுண்ட ஒரு சிறு துண்டமாகும். அது பிரிந்து தாழ்ந்த நாள்தொட்டு வெப்பம் மிகுந்த அனற் குழம்பாகக்கனன்று,

பலகோடி ஆண்டுகளுக்குப் பின் பையப் பைய தட்பம் அடைந்து வருகின்றதென்றும், அதன் மேல்பாகத்தில் நீர், நிலம், மலை, தாவரம், உயிர் ஆகியவற்றைத் தாங்கி நிற்ப தெனவும் கூறப்படுவதாம். ஆயினும் பூமியின் உட்புறம் இன்னும் அக்கினிக்குழம்பாகவே இருக்கின்றதென்பதற்கு எரிமலைகளே போதிய சான்றும். இப்போதுள்ள இந்துமகா சமுத்திரமென்னும் நீர்ப்பரப்பு தென்னாட்டின் தொடர்ச்சியா பெரு நிலப்பரப்பாக இருந்தபோது ஆண்டு மக்கள் தோற் றம் முதல் முதல் உற்றதென்றும் அத்தகைய பிறவி பெற்ற மக்கள், ஆரம்பத்தே வனநரர்களாக மரங்களிலும், குகை களிலும் மிருக வர்க்கங்களைப்போல் வதிந்து, பின்னர் படிப் படியே அறிவு வளர்ச்சி பெற்று, நாகரிகம் முதிர்ந்து வதிந் தனரெனப் பெறப்படுவதாம். இவ்வாறு அறிவு வளர்ச்சி யும், நாகரிகமும் பெற்ற மக்கள் சரித்திர காலத்துக்கு முன் னரே ஒரு தனிக் குழுவாகப் பிரிந்து, தம்மிலும் தாழ்ந்து மிருகத் தன்மையாக வாழ்ந்த மக்களைத் தம்மை யொத்த நாகரிக நிலைமைக்கு அக்குழுவினரே கொணர்ந்தனர் என் பது புனைந்துரையன்று. பூத பௌதிகக் கொடுமைகளாலும் தட்பவெப்ப மிகுதியாலும், கொடிய மிருகங்களின் கொடுமையாலும் மக்கள் இடர்ப்படாது வதிய வீடுகளை யும் தற்காப்புக்கும், இரை தேடுவதற்குமான ஆயுதங்களை யும், பூமி திருத்திப் பண்படுத்தி வித்திடுவதற்கான உழவுக் கருவிகளையும் சிருஷ்டித்துதவியவர் அவ்வறிஞராகிய குழு வினரென்பது தானே பெறப்படுவதாம். மேலும், அக் குழுவினர், மொழி, எழுத்து, பேச்சு ஆகியவற்றையும், ஏடு, எழுத்தாணி முதலிய பல வசதிகளையும் உலக மக்க ளுக்குச் செய்து கொடுத்துள்ளனரென்பதும் கண்கூடு. பிற்காலத்தே மக்களின் மனோதிட்பம் முன்ன முன்ன இக்குழுவினர் படிப்படியே மக்கள் பரிபக்குவத்திற் கேற்ற வாறு தெய்வ வழிபாட்டையும், முக்தி நிலையையும் இதர மக்களுக்கு உணர்த்தியுள்ளனரென்பது வெள்ளிடை மலை

யாம். அக்குழுவினர், இவ்வுலகமும் மற்றெல்லாப் பிறவி களும்,அளவிட்டறியப்படாத ஒருவஸ்துவின் இச்சாவலிமை யால்பிறப்பிக்கப் பட்டவையென்பதை நன்குணர்ந்தவர்கள். நாமரூபமற்ற அந்த வஸ்துவை - அந்தப் பிரமாண்டமான சக்தியை - தம்மைப்போன்ற மனித உருவமாகவே மனதில் கொண்டு அக்குழுவினர் பலப்பட்ட பிரதிமைகளை மண்ணி லும், மரத்திலும், கல்லிலும், செம்பிலும், பொன்னிலும், மணிகளிலும் கண்டவர் அவர்களே யாவர். தம்மால் சிருஷ் டிக்கப்பட்டஉயரிய கடவுளர் வதிவதற்கும்,மக்கள்வணங்கு தற்குமான ஆலயங்களை, தமது இல்லங்களிலும் சிறக்கக் கட்டி உலகுக்கு அளித்தவர் அக்குழுவினரே யாவர். இக் குழுவினர், லோகோபகாரமாக ஆதிவிஸ்வகர்மாவாகிய உலக சிருஷ்டியாளரால் படைப்பிக்கப்பட்ட விஸ்வப்பிராம் மணர்களாம். அவர்கள் சிருஷ்டித்த கோயில்களே இன்று மக்கள் வணங்கி வழிபடும் தேவாலயங்களாம்.

ஆயினும் மேற்றிசை ஆராய்ச்சியாளர் பூமியின் தோற் றம் மேற்கண்டவாறு உற்றதென்பதைச் சந்தேகமற ஒப் புக் கொள்கின்றனர். டார்வின் (Darwin) உள்ளிட்ட இயற்கை ஆராய்ச்சியாளர் தாதுப் பொருள்களின் கூட் டுறவால் பெண் உறுப்பு உண்டாயிற்றென்றும், அதைத் தொடர்ந்து ஆண் உறுப்பு அமைந்து இரண்டும் புல்லிய போது, புல்லும், பூச்சிகளும் மீனும், பாம்பும், பறவையும், விலங்கும்' கடைசியாக மானிடமும் தோன்றினவென்றும் கூறுகின்றனர். ஆதியில் குரங்குகளாயிருந்து படிப்படியே கூர்தல் (Evolution) அறத்தால் சிறந்தவர்களே மனிதர்க ளென்றும் அவர்கள் கூறு நிற்பர். இதே வரிசைக் கிர மத்தை அநுசரித்து மணிவாசகப் பெருமானும், " புல் பூண்டு, புழு, மரம், மிருகம், பறவை, பாம்பு. மலை,மனிதர், பேய், கணம், அசுரர், முனிவர், தேவர்" என்னும் ஒழுங் குப்பாட்டில் பிரபஞ்ச சிருஷ்டி உண்டாயிற்றென்று வலி யுறுத்திக் கூறியுள்ளார். ஆயினும் டார்வினைப்போல் மனி

கடலிற் பாய்ச்சினுன் என்றும், அதுவே இலங்கைத் தீவு ஆயிற்றென்றும், கூறப்பட்டுள்ளது. இது அப்புராணத்தின் கற்பனைக் கூற்றென்பதும், வாயுபகவானின்—அப்புராணத்தின் அதிதேவதையை சிறப்பிக்கக் கூறிய மிகைபடு கூற்றென்பதும் தெள்ளிதில் விளங்கும். அதனேடும் இப்புராணக்கூற்றில் இலங்கை ஒரு தீவு என்று கூறப்பட்டிருப்பதால், இந்நூல் இராமாயண காலத்திற்குப் பின் சிருஷ்டிக்கப்பட்டதென்பதும் நனி விளங்கும். இல்லையேல், இலங்கைக்கும் தென்நாட்டுக்கும் உள்ள பிணைப்பின் சின்னங்களும், மக்களின் உறவும், வழிபடு கடவுளர்களின் தொடர்பும் இத்துணை மலிந்திருக்க, இதனை முன்னர் ஒரு தனிப்பட்ட தீவு எனக் கருதுவது ஆதார மற்றதாகும்.

மேலும், வைவஸ்ஸுத மனுக்காலத்தில் அன்று தென்நாட்டிலிருந்த மதுரை 100000 வருடங்கள் காடாயிருந்து இந்த மனுவம்சத்தில் பிறந்த கீர்த்தி பூஷணனிடம் அகத்தியர் மதுரைமா நகரின் அவசியத்தைக் கூறிக் காடு கெடுத்து பெருமை வாய்ந்த நாடாக்குவித்தனர். கீர்த்தி பூஷண பாண்டியனும், அவனுடைய சந்ததியார்களும், ஆலவாய் என்னும் அந்த நகரத்தை 60000 ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தனரென்றும், அதற்குப்பின் வம்ச சேகரன் பரம்பரையின் ஆட்சி 20,000 ஆண்டுகள் நிகழ்ந்ததென்றும், அக்காலத்தே சுந்தரப் பேரம்பு எய்தபட்டதென்றும், சங்கப்பலகை யிடப்பட்டதென்றும் கூறப்படுகின்றது. இக்காலத்தில் விக்ரமசோழன் இந்நாட்டின்மீது படையெடுத்துச் சென்றதாகக் கூறப்படுவதாலும், மரக்கலப்படையையும் கொண்டு சென்றதாகக் கூறப்படாமையால், தென்னுடும், இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக அக்காலத்திலிருந்ததென்பது மிக வலியுறுத்திப் பெறப்படுவதாம். பிற்காலத்தில் அரசாண்ட வரராமன் என்னும் அரசன் உயரிய திரிகோண மலையில் பல திருப்பணிகள் செய்வித்தான். இவன் குமாரன் குளக்கோட்டன் அரசு புரிந்த காலத்தில் பல

கோவில் திருப்பணிகளை முடித்ததாக ஆதார பூர்வமாகக் கூறப்படுகிறது. இவ்வரசன் காசி வரையிற் சென்று கை தேர்ந்த சிற்பர்களைத் தேடிப்பிடித்துக் கொணர்ந்தனென சரித்திரம் பகரும். இவ்வரசன் மரபில் வந்த கயவாகு சகல வளப்பமிகுந்த இலங்காபுரியின் அரசனானான். இவ் வரசன் பௌத்த மதத்தை ஆசிரயித்து ஸ்ரீசங்கரபோதி என்னும் மாறுபெயருடன் இலங்கை நகரை யாளுகையில், பாசுபதர் என்னும் முனிவர் சிவபூஜைக்கு அரண்மனை யைச் சூழ்ந்திருந்த நந்தவனத்தில் மலரெடுத்துச் சென்ற னர். அவரை வழிமறித்து புத்த அரசன், அம்மலர்களைப் பிடுங்கி வீசி எறிந்தான். பாசுபதர் வெகுண்டு புத்தரைக் கடலில் வீழ்த்தினர். இவன் கரை சேர்ந்து, சிவனை புத்த னுக்குவேன் எனச் சூளுரைத்துப் புறப்பட்டான். அவ னது இரண்டு கண்களும் ஒளி மழுங்கின. அரசன் மயங்கி வருந்தி வேண்ட, சிவன் ஒரு முனிவர் உருவில் தோன்றி, விபூதி பிரசாதிக்க, அரசன் 'சிவ, சிவ' என்று நெற்றி யிலும் கண்ணிலும் தரித்துக் கொள்ள ஒரு கண் மட்டும் மீளவும் பார்வை பெற்றது. பின்னர் அரசன் திரிகோண மலை சென்று தீர்த்தமாடி ஸ்ரீ கோணேச்வரரையும், ஸ்ரீ மாதுமையம்மையையும் தரிசித்து வணங்க அரசனது இரண்டு கண்களும் ஒளி பெற்றனவென தக்ஷிண கைலாச தலபுராணம் கூறா நிற்கும். இவற்றின் உண்மை எவ்வா றுயினும் ஆகுக. ஆயினும் இஃதொன்றால் திரிகோணமலை யில் அக்காலத்தில் ஒரு தொன்மையான ஆலயம் கட்டப் பட்டிருந்ததென்பது நன்கு விளங்கும். அதனோடும், ஸ்ரீ கேதீஸ்வரரும், ஸ்ரீ கௌரியம்மையும் கோவில் கொண்ட திருக்கேதீஸ்வர க்ஷேத்திரமும், அயிராவதம் பூசித்த ஸ்தல மாகிய கதிர்காம க்ஷேத்திரமும் அக்காலத்திலேயே பிர பல்லியம் பெற்றிருந்தன வென்பது சந்தேகமறப் பெறப் படுவதாம். இத்துணை வளம் பெற்ற இந்நாடு வேற்றரசர் களால் ஆசிக்கப்பட்டதென்றும், கரிக்கால் சோழமன்ன